# பேரறிஞர் அண்ணாவின் சமூக பொருளாதாரச் சிந்தனைகள்

முனைவர் பெ.கி.மனோகரன்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# பேரறிஞர் அண்ணாவின்
# சமூக, பொருளாதாரச் சிந்தனைகள்

முனைவர் பெ.கி.மனோகரன்

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை
மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை - 600 113

**பேரறிஞர் அண்ணா தமிழ் மேம்பாடு**
**அறக்கட்டளைச் சொற்பொழிவு**
**அறக்கட்டளை நிறுவியது : தமிழ்நாடு அரசு)**

வரிசை எண் : 5 நாள்:
28.09.2013

---

# நூல் விவரக்குறிப்பு

| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | பேரறிஞர் அண்ணாவின் சமூக, பொருளாதாரச் சிந்தனைகள் |
| ஆசிரியர் | : | முனைவர் பெ.கி. மனோகரன்<br>பதிவாளர் - பாரதியார் பல்கலைக்கழகம்<br>கோவை |
| பொதுப்பதிப்பாசிரியர் | : | முனைவர் கோ. விசயராகவன்<br>இயக்குநர்<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>இரண்டாம் முதன்மைச் சாலை<br>தரமணி, சென்னை-600 113 |
| வெளியீட்டாளரும் பதிப்பு உரிமையும் | : | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>இரண்டாம் முதன்மைச் சாலை<br>தரமணி, சென்னை-600 113<br>தொலை பேசி எண். 044 - 22542992 |
| வெளியீட்டு எண் | : | 754 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற் பதிப்பு |
| பதிப்பு ஆண்டு | : | 2013 |
| பயன்படுத்திய தாள் | : | 18.6 கிகி டி.என்.பி.எல் வெள்ளை மேப்லித்தோ |
| நூலின் அளவு | : | 1/8 டம்மி |
| எழுத்தின் அளவு | : | 10 அளவு |
| பக்க எண்ணிக்கை | : | ஜ் + 126 |
| அச்சுப்படிகளின் எண்ணிக்கை | : | 1200 |
| விலை | : | ரூ.75/- (ரூபாய் அறுபத்து ஐந்து மட்டும்) |
| அச்சகம் | : | தர்சன் பிரிண்டர்ஸ்<br>45, நயினார் தெரு, மைலாப்பூர்,<br>சென்னை-600 004. |
| பொருண்மை | : | பேரறிஞர் அண்ணாவின் கருத்துகள் |

---

அறக்கட்டளைச் சொற்பொழிவாளர் கருத்துகளுக்கு நிறுவனம் பொறுப்பன்று.

முனைவர் மூ. இராசாராம் இ.ஆ.ப.
தமிழ் வளர்ச்சி (ம) செய்தித் துறை அரசுச் செயலாளர்
தலைமைச் செயலகம்
சென்னை-600 009

## வாழ்த்துரை

பாரதியார் பல்கலைக்கழகப் பதிவாளர் முனைவர் பி.கி.மனோகரன் எழுதியுள்ள ''பேரறிஞர் அண்ணாவின் சமூக, பொருளாதாரச் சிந்தனைகள்'' என்னும் நூலினைப் படித்து மகிழ்ந்தேன். மேலும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் நடத்தும் அறக்கட்டளைப் பொழிவுகளில் பேரறிஞர் அண்ணாவின் நினைவு குறித்து உரையாற்ற இருப்பதையும் அறிந்து பெருமகிழ்ச்சி அடைகின்றேன்.

பதிவாளராகப் பணியாற்றுவதோடு அல்லாமல் நாட்டு நலப்பணித் திட்ட ஒருங்கிணைப்பாளராகவும், கல்வி வளர்ச்சிக் குழுமத்தின் முதன்மையராகவும், ஆராய்ச்சி மேம்பாட்டு முனையத்தின் இயக்குநராகவும் மிளிர்ந்த பெருமை முனைவர் பெ.கி. மனோகரனுக்கே வாய்த்த பெரும்பேறாகும்.

தமிழ்நாட்டில் மொழி, இனம், கலை, அரசியல் ஆகிய நான்கு துறைகளிலும் மகத்தான மறுமலர்ச்சியை உருவாக்கியவர் பேரறிஞர் அண்ணா ஆவார். தமிழ்நாட்டில் தொடர்ந்து அரை நூற்றாண்டுக்கும் மேலாகத் தம்முடைய மனித நேயச் சிந்தனைகளையே ஆணி வேராக அமையச் செய்த அவரது ஆற்றல் வரலாற்றுச் சிறப்புடையதாகும்.

''பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை'' என்னும் திருக்குறளின் வைர வரிக்கு ஏற்பப் பொருளாதாரத்தின் இன்றியமையாமையை மக்களின் வாழ்வில் பரவலாக்க வேண்டும் என்ற பேரறிஞர் அண்ணாவின் பொருளியல் சிந்தனை நோக்கத்தை முனைவர் பெ.கி.மனோகரன் அவர்கள் இந்நூலில் எடுத்துக் காட்டியுள்ளார். மேலும் பேரறிஞர் அண்ணாவின் சமூகச் சிந்தனைகள், கல்விச் சிந்தனைகள், மொழிச் சிந்தனைகள், பெண்ணியச் சிந்தனைகள், பகுத்தறிவுச் சிந்தனைகள், பொருளாதாரச் சிந்தனைகள், அரசியல் சிந்தனைகள், அறிவியல் சிந்தனைகள், வேளாண்மைச் சிந்தனைகள், இயற்கைச் சிந்தனைகள் என்கிற மிகப்பெரிய பத்துத் தூண்கள் கொண்ட சிந்தனை வளாகத்தைத் தம்முடைய எழிலார்ந்த எழுத்தால் வடிவமைத்துள்ளார். இந்நூலாசிரியரின் நுண்ணறிவு பல்கிப் பெருகி இன்னும் பல நூல்களைத் தொடர்ந்து எழுதிப் பெருமையுடன் வளர்க என நெஞ்சார வாழ்த்தி மகிழ்கிறேன்.

**முனைவர் மூ. இராசாராம்**

முனைவர் கோ. விசயராகவன் எம்.ஏ., எம்.ஃபில், பி.எட்., பிஎச்.டி.
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை 600 113

## அணிந்துரை

தமிழுக்குத் தொண்டு செய்து சிறைக்குச் சென்றோன்
தலைசிறந்த பேச்சு வல்லோன் தமிழ வீரன்
தமர் என்றும் தான் என்றும் நினைப்ப தன்றித்
தமிழ் நாட்டின் நலத்தினுக்கே உயிர் உடல்கள்
அமைக என இரவு பகல் உழைக்கும் மேலோன்

என்று பேரறிஞர் அண்ணாவின் பேருழைப்பை, பேருள்ளத்தைப் பாவேந்தர் பாரதிதாசன் படம்பிடித்துக் காட்டியுள்ளார். தமிழ்நாட்டின் தலைசிறந்த தமிழின விடுதலைச் சிந்தனையாளர்; தம் எழுத்தாற்றலால், பேச்சாற்றலால் நாட்டு மக்களின் நிலையையும் நினைப்பையும் மாற்றப் போர்முரசு கொட்டியவர்; முதல் மொழிப்போரின் முதல் தளபதி!

தூங்கிய திராவிட வீரரே எழுமினோ
துயர்மிகு வாழ்வினைத் துரிதமாய்த் துடைமினோ!

என்று 'வெள்ளி முளைக்குது' என்னும் தலைப்பிட்டுத் தமிழரின் நிலையைத் தம் கவிதையில் சுட்டிக்காட்டிய அண்ணா-

.......கால் கை விலங்கில்லை; கருத்துக்கு விலங்குண்டு;
கட்டறுப்போ மின்று; காளைகள் ஆவோம் நன்று
களம்போக நேர்ந்தாலும் கலங்கோம் கலங்கோமென்று

கூறித் தமிழர்க்கு விழிப்பூட்டுகிறார்.

பேச்சாளர், எழுத்தாளர், சிந்தனையாளர், தொண்டர், நாடகக் கலைஞர், இதழாளர், இயக்கத் தலைவர் எனப் பல்வேறு தளங்களில் அவர் செயல் ஆற்றியதை உலகறியும். தமக்கென ஒரு தனித்த மோனை மொழி நடையுடன் அழகான, அரிய உவமைகளுடன் கவிதைச் சாயலில் பேசுவதிலும் எழுதுவதிலும் நிகரற்றவராக விளங்கினார். இவரால் அன்னைத் தமிழ் அடுக்குமொழியெனும் பொன்மாலை அணிந்தாள்.

அறியாமை, வறுமை, பசிக்கொடுமை, அடிமைத்தனம் என மக்கள் துயருற்றுக் கிடக்கும் வாழ்வைக் கூர்ந்து நோக்கிய அண்ணா தம்முடைய எழுத்து, பேச்சு, செயல் அனைத்தும் அவ் எளிய மக்களை ஈர்க்கவே அமைத்துக் கொண்டார்.

சமத்துவச் சமுதாயம் உருவாக-அறிவு ஆட்சிசெய்யும் சமுதாயமாக நாடு மலர - பற்பல கோணங்களில் பல்வேறு

வடிவங்களில் எழுதினார். புதினம், குறும்புதினம், சிறுகதை, நாடகம், கவிதை, கட்டுரை, வாழ்வோவியம், இலக்கியத் திறனாய்வு, மடல், பொழிவு, இதழுரை, அந்திக்கலம்பகம், ஊரார் உரையாடல் எனப் பல்வகை வடிவம் பெற்ற அவருடைய எழுத்துப் படைப்புகள் தமிழ்நாட்டுக்கு அறிவுப் பணியாற்றியுள்ளன. இவையாவும் அறிவாயுதங்களாக வலம் வருகின்றன.

இவ்வறிவுப் பெட்டகத்தின் மாட்சியை எடுத்துச் சொல்லவும், பாதுகாக்கவும், அடுத்தடுத்த தலைமுறைகளுக்கு உணர்த்தவும், மூன்றாம் முறையாக முத்தமிழ் நாட்டை ஆளும் மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அம்மா அவர்களால் ''பேரறிஞர் அண்ணா தமிழ் மேம்பாடு அறக்கட்டளை'' ஒன்று ரூபாய் பத்து இலட்சம் மதிப்பீட்டில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் நிறுவப்பெற்று இருக்கிறது. பேரறிஞர் அண்ணாவால் உருவாக்கப்பெற்ற இந்நிறுவனத்திற்கு மேலும் ஒரு சிறப்புக்குரிய விழுதாக இது அமைந்துள்ளது.

இந்த அறக்கட்டளையின் மூலம் பாரதியார் பல்கலைக்கழகப் பதிவாளர் முனைவர் பெ.கி. மனோகரன் அவர்களின் **'பேரறிஞர் அண்ணாவின் சமூக, பொருளாதாரச் சிந்தனைகள்'** எனும் தலைப்பிலான இப்பொழிவு, நூலாக வெளியிடப்பெறுகிறது. அவருடைய இம்முயற்சிக்கு என்னுடைய வாழ்த்துகள்; பாராட்டுகள்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையைக் காட்டிவரும் **தொழிற்கல்வி உள்ளிட்ட உயர்கல்வி, மின்னணுவியல், அறிவியல், தொழில் நுட்பவியல், பள்ளிக்கல்வி, தொல்லியல், விளையாட்டுகள் மற்றும் இளைஞர் நலன், தமிழ் ஆட்சி மொழி மற்றும் தமிழ்ப்பண்பாடு, உயர்கல்வி துறை-பள்ளிக் கல்வி துறை-இளைஞர் நலன் (ம) விளையாட்டு மேம்பாட்டுத்துறை அமைச்சர் மாண்புமிகு பி.பழனியப்பன்** அவர்களுக்கு எமது இதயங்கனிந்த நன்றி.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் தமிழ்நாடு அரசின் **தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறைச் செயலாளர் முனைவர் மூ.இராசாராம் இ.ஆ.ப.** அவர்களுக்கும் எமது மனமுவந்த நன்றி.

இந்நூல் எழுத்துருவை மெய்ப்புத் திருத்தம் செய்த 'கலைமாமணி' அ.மறைமலையான் மற்றும் முனைவர் ஆ.தசரதன் அவர்களுக்கும், ''பேரறிஞர் அண்ணா தமிழ் மேம்பாட்டு அறக்கட்டளை'' அமைப்புக்கு உரிய அனைத்து ஏற்பாடுகளையும் செய்த நிறுவனப் பணியாளர்கள், இளநிலை உதவியாளர் மற்றும் தட்டச்சர் திருமதி பா. கௌசல்யா ஆகியோருக்கும் எம் பாராட்டுகள். இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த இலட்சுமி முகவாண்மை அச்சகத்தாருக்கு எம் பாராட்டுகள்.

**இயக்குநர்**

# முன்னுரை

'பேரறிஞர் அண்ணாவின் சமூக, பொருளாதாரச் சிந்தனைகள்' என்னும் இந்த நூலை உருவாக்க வாய்ப்பளித்த 'உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திற்கு' முதற்கண் என் மகிழ்ச்சியையும், நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த நூலில் இடம்பெற்றிருக்கும் அண்ணாவின் சமூக, பொருளாதாரச் சிந்தனைகள் அனைத்தும்-அவருடைய நூல்கள் மற்றும் அவரைப் பற்றிச் சான்றோர் பெருமக்கள் எழுதிய நூல்கள் பலவற்றின் வாயிலாக வெளிப்பட்ட தொகுப்புதாம்.

பல்வேறு நூல்களில் ஆங்காங்கே இடம்பெற்றிருந்த சமூக, பொருளாதாரச் சிந்தனைகளை ஒன்று திரட்டி, வகைப்படுத்தி, எளிய வார்த்தைகளில் சுவை குன்றாமல் கொடுக்க முயற்சி எடுக்கப் பெற்றுள்ளது.

ஏறக்குறைய அரை நூற்றாண்டுக் காலத்திற்கு முந்தைய சிந்தனைகள், தமிழ்நாட்டில் அன்றைக்கு மட்டுமல்லாமல் இன்றைக்கும் ஏற்புடைய, பின்பற்றத்தக்க, நடைமுறையில் தொடர்கின்ற சிந்தனைகளாக அமைந்திருப்பது அண்ணா இன்றும் அவருடைய எண்ணங்களின், கருத்துகளின் வாயிலாக வாழ்ந்துகொண்டிருக்கிறார் என்பதன் அடையாளங்களாம்.

பள்ளி, கல்லூரி மாணவர்களுக்கும், இளைஞர்களுக்கும், தமிழ்நாட்டின் சமூக, பொருளாதார மாற்றங்களை அறிந்துகொள்ள விரும்பும் வாசகர்களுக்கும் இந்நூல் பெரிதும் பயனுள்ளதாக இருக்கும்.

எனக்கு எல்லா வகையிலும் வழிகாட்டியாக இருந்து வழிநடத்தும் பாரதியார் பல்கலைக்கழகத் துணைவேந்தர் பேராசிரியர் முனைவர் ஞா. ஜேம்ஸ் பிச்சை அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழ்நாடு அரசின் தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறையின் அரசுச் செயலர் முனைவர் மூ.இராசாராம் இ.ஆ.ப. அவர்கள் வாழ்த்துரை வழங்கிப் பெருமைப்படுத்தி உள்ளார்கள். அவருடைய ஏராளமான பணிகளுக்கிடையேயும் அணுகும் போதெல்லாம் இன்முகத்தோடு

பேசி, ஆலோசனைகள் வழங்கி என்னை ஊக்குவிப்பவர். அவருக்கு என் உள்ளார்ந்த நன்றியைப் படைக்கின்றேன்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் இயக்குநரும் மற்றும் இந்த அறக்கட்டளையின் பொறுப்பாளருமான முனைவர் கோ.விசயராகவன் அவர்களுக்கும் மற்றும் பேராசிரியர்கள் முனைவர் மு. வளர்மதி, முனைவர் பெ.செல்வகுமார் ஆகியோருக்கும் என் அன்பான நன்றியை உரித்தாக்குகிறேன்.

இந் நூலுக்கு மெருகூட்டிய தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் முனைவர் ஐ.கே.சுப்பிரமணியம், முனைவர் ஓ.பாலகிருஷ்ணன், முனைவர் ச.தங்கமணி, முனைவர் ச.அரிச்சந்திரன் ஆகியோருக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

பெ.கி.மனோகரன்

# ஆசிரியர் குறிப்பு



இந்நூலாசிரியர் முனைவர் பெ.கி. மனோகரன் வேலூர் மாவட்டத்தைச் சேர்ந்த பெத்தூர் எனும் சிற்றூரில் 15.4.1957ஆம் ஆண்டு பிறந்தார். தந்தை கிருஷ்ணன், தாயார் சரோஜா. எளிய வேளாண்மைக் குடும்பத்தைச் சேர்ந்த இவர் ஆலகாயம் அரசு உயர்நிலைப் பள்ளியில் 11ஆம் வகுப்பு வரை படித்து, வாணியம்பாடி இசுலாமியக் கல்லூரியில் இளங்கலை பட்டமும், சென்னைப் புதுக்கல்லூரியில் முதுகலைப் பட்டமும், தாம்பரம் கிறித்தவக் கல்லூரியில் ஆய்வியல் நிறைஞர் (பி.எச்.டி.) பட்டமும் பெற்றவர்.

மைய அரசின் சென்னை இ.எஸ்.ஐ. மண்டல அலுவலகத்தில் ஓராண்டுக் காலம் எழுத்தராகத் தம் பணியைத் தொடங்கி, சென்னை அடையாறு மயிலைக் கற்பகவல்லி சீனியர் செகண்டரி பள்ளியில் ஓராண்டு மேனிலை வகுப்பு ஆசிரியராகப் பணியாற்றி, பின்னர்க் கோவை சி.பி.எம். கல்லூரியில் உதவிப் பேராசிரியராகப் பணியில் சேர்ந்தார். தற்பொழுது பாரதியார் பல்கலைக்கழகப் பதிவாளராகப் பணியாற்றி வருகிறார். இவர் ஆய்வு மற்றும் வளர்ச்சி மையத்தின் இயக்குநராகவும், பல்கலைக்கழகத் தேசியப் பணித் திட்டத்தின் ஒருங்கிணைப்பாளராகவும் செயல் ஆற்றி வருகிறார்.

இவர் நாற்பதுக்கும் மேற்கட்ட கருத்தரங்குகள் மற்றும் மாநாடுகளில் ஆய்வுக் கட்டுரைகள் வழங்கியுள்ளார். தமிழில் 8 நூல்களும், ஆங்கிலத்தில் 4 நூல்களும் எழுதியுள்ளார். **Modern Essays, Education and Personality Development, Research Methodology, Higher Education, சுற்றுச்சூழல் விழிப்புணர்வு, வாழ்க்கை ஒரு பயணம்-பந்தயமல்ல, வாழ்க்கைத் திறன் மேம்பாடு, உலக நடப்புகள், நிறைவான வாழ்க்கை, சரித்திர நாயகர்கள்** ஆகிய நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார்.

வானொலி, தொலைக்காட்சியில் 200க்கும் மேற்பட்ட நிகழ்ச்சிகளில் உரையாற்றியுள்ளார். 'தினம் ஒரு தகவல்' எனும் தலைப்பில் இரண்டு ஆண்டுகள் தொடர்ச்சியாகத் தொலைக்காட்சியில் நிகழ்ச்சிகளை வழங்கியுள்ளார். 'தினமணி' உள்ளிட்ட நாளேடுகளிலும், மாத இதழ்களிலும் நூற்றுக்கும் மேற்பட்ட கட்டுரைகளை எழுதியுள்ளார். அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தொலைமுறைக் கல்வி மாணவர்களுக்கு 3 பாடப் புத்தகங்கள் எழுதியுள்ளார்.

பாரதியார் பல்கலைக்கழக விருது (Best NSS Programme Officer), தமிழ்நாடு அரசு விருது (Best NSS Programme Officer, Best NSS University Co-ordinator), மாவட்ட ஆட்சியர் விருது (Best Social Worker), நல்லாசிரியர் விருது (Tamil Nadu Institute for Research and Advancement) ஆகிய விருதுகளைப் பெற்றுள்ளார்.

# பொருளடக்கம்

# 1. வாழ்க்கை வரலாறு

'அண்ணா' என்னும் மூன்றெழுத்துக்குத் தமிழ்நாட்டில் தனி மாட்சி உண்டு. அண்ணா என்றாலே 'பேரறிஞர் அண்ணா' தான். இவர் வீதியில் இறங்கினால் ஊர்வலம்; மேடை ஏறினால் மாநாடு; நாட்டு மக்களுக்குப் பேரறிஞர்; கட்சித் தொண்டர்களுக்கு 'அண்ணா'.

நெற்றியில் அறிவைத் தேக்கி, நெஞ்சத்தில் வீரத்தினைத் தேக்கி, நாவில் என்றும் கருத்தைத் தேக்கி, கண்ணில் துடிப்பினைத் தேக்கி, கற்றறிந்த சான்றோர் அனைவரும் திகைக்கும் வண்ணம் வாழ்ந்தவர் அறிஞர் அண்ணா.

தந்தை பெரியார் அவர்களின் பாசறையில் வளர்ந்தவர் அண்ணா. 'கடமை, கண்ணியம், கட்டுப்பாடு' என்னும் தாரக மந்திரத்தை மக்கள் மனங்களில் விதைத்தவர். அடுக்குமொழி நடையால் அனைவரையும் கவர்ந்தவர். கன்னித் தமிழில் கருத்துகளை வாரி வழங்கும் நாவன்மையால் அறிஞர்களாலும், அரசியல் தலைவர்களாலும், இலக்கிய வல்லுநர்களாலும், எழுத்தாளர்களாலும் பாராட்டுப் பெற்ற பண்பாளர். எழுத்துலகிலும், பேச்சுலகிலும் பெரும் மாற்றத்தை உண்டாக்கிய மாமேதை. "தமிழ்நாட்டுப் பெர்னாட்ஷா" என்று போற்றப்பெற்றவர்.

அண்ணாவின் எண்ணம், எழுத்து, சொல், செயல் யாவும் சமுதாய மேம்பாட்டை மையமாகக் கொண்டிருந்தன. சமுதாயத்தில் காணப்பட்ட சிக்கல்களுக்கு உண்டான காரணங்களைப் பகுத்தறிவு கொண்டு ஆராய்ந்து அவற்றுக்கான தீர்வுகளை எடுத்துரைத்தவர். வாழ்நாளெல்லாம் தம்மைச் சாதாரணமானவன் என அடக்கத்தோடு பேசி அசாதாரணமான சாதனைகளைப் புரிந்தவர் அண்ணா.

## 1. இளமைக் காலம்

வரலாற்றுப் புகழ் நிறைந்த நகரம் காஞ்சிபுரம். பல்லவ வேந்தர்களின் தலைநகராகப் புகழ்பெற்று விளங்கிய ஊர். சைவமும், வைணவமும், சமணமும், பௌத்தமும் வளர்ந்த இடம் அது. கலைகள் பலவும் வளர்ந்த சிறந்த இடம். திருக்குறளுக்கு உரை எழுதிய பரிமேலழகர் பிறந்த ஊர். அத்தகைய சிறப்புகள் வாய்ந்த

காஞ்சிபுரத்தில்தான் காஞ்சித்தலைவனாகப் போற்றப்பெற்ற பேரறிஞர் அண்ணா 1909ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 15ஆம் நாள் பிறந்தார்.

காஞ்சிபுரத்தில் சாதாரண நெசவாளர் குடும்பத்தில் பிறந்தவர் அண்ணா. தந்தை நடராசன், தாயார் பங்காரு அம்மாள். இருவரும் நெசவுத் தொழில் செய்து வந்தவர்கள். அண்ணாவின் குடும்பம் பெரிய குடும்பம். தாயாருடன் பிறந்தவர்கள் இரு சகோதரிகள். மூத்த தமக்கை பட்டம்மாள். இளைய தங்கை இராசாமணி அம்மையார். அண்ணா மீது அதிகமான பாசத்தைச் செலுத்தி வளர்த்தவர் அவருடைய சித்தி இராசாமணி அம்மையார்தாம்.

காஞ்சிபுரம் பச்சையப்பன் பள்ளியில் தொடக்கக் கல்வி பயின்றார் அண்ணா. சிறுவயதிலேயே வியக்கத்தக்க அறிவாற்றலைக் கொண்டிருந்தார். உயல்நிலைப் பள்ளிப் படிப்பிற்குப் பிறகு அண்ணா, கல்லூரிப் படிப்புக்காகச் சென்னை சென்றார். முதல் இரண்டாண்டுகள் 'இண்டர்மீடியட்' என்று அழைக்கப்படும் இடைநிலை வகுப்புப் படிப்பு. அதற்குப் பிறகு பி.ஏ., பி.எஸ்சி. போன்ற மூன்றாண்டுகள் பட்டப்படிப்பு. அதன்பிறகுதான் எம்.ஏ., எம்.எஸ்சி. போன்ற இரண்டாண்டு முதுநிலைப் பட்டப்படிப்பு.

திறமை மிக்கவர்கள் இடைநிலைப் படிப்புக்குப் பின் 'ஆனர்ஸ்' என்று சொல்லப்பட்ட மூன்றாண்டுப் படிப்பில் சேர்வார்கள். முதுகலைப் பட்டத்துக்கும் மேலான மதிப்புடையது இந்தப் படிப்பு. பச்சையப்பன் கல்லூரி ஆரம்பக் காலத்தில் சைனா பசார் பகுதியில் இயங்கி வந்தது. அந்தக் கல்லூரியில் பிற்படுத்தப்பட்ட மாணவர்க்குரிய சலுகையைப் பெற்று 1928ஆம் ஆண்டு இடைநிலை வகுப்பில் சேர்ந்து படிக்கலானார்.

இடைநிலை வகுப்பில் முதல் மாணவராக வெற்றி பெற்ற அண்ணாவால் வறுமையின் காரணமாக மேல்படிப்புப் படிக்க முடியாத நிலை. அண்ணாவின் மதிக்கூர்மையை அறிந்திருந்த கல்லூரி முதல்வர் திரு. சின்னத்தம்பி, அண்ணாவின் படிப்புக்கு வேண்டிய எல்லா உதவிகளையும் செய்து தருவதாகக் கூறி, பி.ஏ. ஆனர்ஸ் படிப்பில் சேரச் சம்மதிக்க வைத்தார். மூன்று ஆண்டுப் படிப்பின் போது கல்லூரிப் பேரவைத் தலைவராகவும், பொருளியல் மன்றத் தலைவராகவும் தேர்ந்தெடுக்கப்பெற்றார். அதன் பிறகு 'முதுகலை' (எம்.ஏ.) பட்டம் பெற்றார்.

கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தபோதே பெற்றோரின் விருப்பப்படி 1930இல் எதிராசு முதலியார் மகள் இராணி அம்மையாரை மணம் புரிந்தார் அண்ணா.

சமூக முன்னேற்றத்துக்காகப் பொதுவாழ்வில் ஈடுபட அண்ணாவின் சிந்தனைகளை ஒருமுகப்படுத்திய பேராசிரியர்கள் வரதராசனும், வேங்கடசாமியும் ஆவர். அவருக்குத் தமிழ் இலக்கியங்கள் மீது ஆர்வத்தை உண்டாக்கியவர்கள் தமிழ்ப் பேராசிரியர்கள் மோசூர் கந்தசாமி முதலியாரும், மணி திருநாவுக்கரசு முதலியாரும் ஆவர். தமக்கு வழிகாட்டிகளாக இருந்த பேராசிரியர்களைப் பற்றி அண்ணா இவ்வாறு கூறுகிறார்:

> ''பிரம்பும் கையுமாக இருந்த ஆசிரியர்களையே கண்டு பழகிய என் கண்களுக்கு ஆசிரியர் திரு. வரதராசன் கரம் என் முதுகைத் தட்டிக் கொடுத்தபடி, பச்சையப்பர் கல்லூரி வளாகத்தில் உலவிய காட்சி புதுமையாக இருந்தது. வரதராசன் அப்போது ஆசிரியராகவும் இருந்தார். மாணவராகவும் இருந்தார். பச்சையப்பர் கல்லூரியில் ஆசிரியர். சென்னைச் சட்டக் கல்லூரியில் மாணவர். வகுப்பில் அமர்ந்திருக்கும் போதே, யார் யாரெல்லாம் இயக்கத்துக்குப் பயன்படக்கூடியவர்கள் என்று பார்த்து வலை வீசுவார். பத்து இருபது நாட்களில் அந்த மாணவன் வரதராசனின் அணியில் சேர்ந்து விடுவான். அவரைச் சூழ்ந்தபடி மாணவர்கள்! அவர்களில் நான் முன்னணியில். என் பொது வாழ்க்கைக்குக் காரணமாக அமைந்த இரட்டையரில் வரதராசனார் ஒருவர். மற்றொருவர் திரு. வேங்கடசாமி.
>
> என் மதிப்பிற்குரிய இரண்டு தமிழாசிரியர்களான மணி திருநாவுக்கரசு, மோசூர் கந்தசாமி ஆகிய இருவரும் எனக்கு இலக்கணம் கற்பிக்க மிகவும் பாடுபட்டனர். தமிழின் இனிமை பற்றி அறிந்துகொள்ள இவர்கள்தான் காரணம்.''

## 2. நற்குணங்கள்

இளம் வயது முதற்கொண்டே புத்தகங்களைப் படிப்பதில் அண்ணாவிற்கு அதிக ஆர்வமுண்டு. பள்ளியிலும் சரி, கல்லூரியிலும் சரி, அண்ணாவை நூலகங்களில்தாம் காண முடியும். இல்லையென்றால் பழைய புத்தகக் கடைகள் பக்கம் போய்ப் புத்தகங்களைத் தேடிக் கொண்டிருப்பார். அந்த அறிவுத் தேடல்தான் பிற்காலத்தில் அவரை மிகச் சிறந்த எழுத்தாளராகவும், பேச்சாளராகவும் மாற்றிப் 'பேரறிஞர்' என்னும் அடைமொழியை அவருடைய பெயருக்கு முன்னால் சேர்த்தது எனலாம்.

அண்ணா நினைவாற்றல் நிரம்பப் பெற்றவர். பள்ளியில் படிக்கும்போதே நல்ல மதிப்பெண்கள் பெறுவார். ஒழுக்கமான மாணவர். படிப்பு தொடர்பாக அவரைக் கண்டிக்கவோ, கடிந்து கொள்ளவோ வேண்டிய நிலைமை யாருக்கும் எழவில்லை.

ஏழை நெசவாளர் குடும்பத்தில் பிறந்த அண்ணாவுக்கு இயற்கையாகவே பொறுமைக் குணம் அமைந்திருந்தது. அதனைப்பற்றி அண்ணா கூறுகையில்,

> ''நெசவாளியாகப் பிறந்தவர் யாரும் பொறுமையாக இருப்பதைத் தவிர வேறு வழியில்லை. எத்தனை முறை அறுந்த நூலை இணைத்துப் பார்க்கிறோம், எத்தனைச் சிக்கல்களைப் பிரித்திருக்கிறோம். ஆகவே நெசவாளர்கள் குடும்பத்தில் பிறந்தவர்கள் இயல்பாகவே 'பொறுமை'க் குணத்தைப் பெற்றிருப்பார்கள்.''

என்று கூறியிருக்கிறார்.

அண்ணா அமைதியை விரும்புபவர். புகழ் பெற்ற காஞ்சி வரதராசப் பெருமாள் கோயில் தமது வீட்டருகே இருந்தபோதும் அந்தக் கோயிலில் கூட்டம் அதிகமாக இருக்கும் என்பதால் அங்குப் போவதைத் தவிர்த்துக் கூட்டம் அதிகமாக இல்லாத புண்ணியகோட்டீசுவரர் ஆலயத்திற்குத்தான் செல்வார். இது குறித்துக் கேலி செய்த நண்பர்களிடம்,

> ''கூட்டம் அதிகம் இருக்கும் இடத்தில் ஆண்டவன் இருக்க மாட்டான்.''

என்று அறிவுக் கூர்மையுடன் பதில் சொன்னாராம்!

தம்முடைய இளம் வயதில் அண்ணா பிள்ளையாருக்குப் பூசைகள் செய்து வணங்கி இருக்கிறார். பின்னாளில், தாம் தலைவராக ஏற்றுக் கொண்ட பெரியார், பிள்ளையார் சிலைகளை உடைக்க உத்தரவிட்டபோது,

> ''நான் பிள்ளையாரையும் உடைக்க மாட்டேன், அவருக்குத் தேங்காயும் உடைக்க மாட்டேன்.''

என்று தம் நிலையைத் தெளிவாக்கியவர் அண்ணா. 'ஒன்றே குலம், ஒருவனே தேவன்' என்னும் திருமூலரின் மந்திரமே அவரது கொள்கை.

> ''நான் குல்லா அணியாத முசுலிம்; சிலுவை போடாத கிறித்தவன்; திருநீறு இடாத இந்து.''

என்று தம்மை வருணித்துக் கொண்டார் அண்ணா.

பேரறிஞர் அண்ணாவைப் பற்றி அவருடைய தாயார் இப்படி குறிப்பிடுகிறார்.

''அண்ணாவை அஞ்சு வயசிலே பள்ளிக் கூடத்திலே சேர்த்தோம். அப்பெல்லாம் பள்ளிக்கூடத்திலே சேர்க்கிறது பெரிய வைபவம் மாதிரி நடக்கும்; அண்ணாவுக்குக் கடுக்கன் போட்டு, பொட்டு வச்சு, சிங்காரிச்சு, ரெட்டைக் குதிரை பூட்டிய சாரட்லே வாத்தியாரையும் உட்காரவச்சு, மேளதாளத் தோட ஊர்வலமா கூட்டிட்டுப் போய்ச் சேர்த்தோம்! பள்ளிக் கூடத்துக்கு, வண்டியிலேயும் போகும்; சைக்கிளும் ஓட்டும்.

பள்ளிக்கூடம் போறப்போ, வேட்டி கட்டவே தெரியாது. தொத்தாதான் (அண்ணாவின் சித்தி) கட்டிவிடும். மருந்து சாப்பிடுறதுன்னா பிடிவாதம் செய்யும்; மருந்து குடிக்கவே மாட்டாது! அண்ணாவுக்குக் கோபம் வந்திச்சின்னா, ஒண்ணும் பேசாது. பெஞ்சுக்குக் கீழே போய்ப் பூந்துக்கும்; கூப்பிட்டா வராது; அப்படியே தூங்கிடும்; அவ்வளவுதான் அதோட கோபம்!

ஆனா, வீட்டிலே சும்மா இருக்காது. எதையாவது படிச்சிக்கிட்டே இருக்கும். பகோடா, ஓமப்பொடி வாங்கிவந்த பேப்பரைக் கீழே போட்டா அதைக் கூட எடுத்துப் படிக்கும்!

எஸ்.எஸ்.எல்.சி. பாஸ் பண்ணினதுக்கு அப்புறம், 'இது நல்லாப் படிக்குதே - இன்னும் படிக்கட்டுமேன்னு அவுங்க தொத்தா கூட்டிட்டுப் போயி, சென்னையிலே காலேஜ்லே படிக்க வச்சாங்க! அண்ணா இங்கிலீஷ் படிச்சுக்கிட்டு இருக்கும்; ''டேய்! சரியாய்ப் படி''!ன்னு தொத்தா சும்மாவாவது அதட்டுவாங்க; தொத்தாவுக்கு இங்கிலீஷ் தெரியாது; அதுக்காக, தொத்தா வார்த்தையை அலட்சியப் படுத்தாம நிதானமாய்ப் படிக்கும். இது அண்ணாவுடன் கூடப் பிறந்த பண்பு!.

அண்ணாவுக்கு 23 வயதிலே திருமணம் நடந்திச்சு; கல்யாணத்துக்குமுன், அண்ணா, பெண்ணைப் பார்க்கலே; நாங்க பாத்திட்டு வந்து, 'அழகா இருக்குன்னு சொன்னோம். ஒத்துக்கிடுச்சு! இந்தக் காலம் மாதிரி அப்பெல்லாம் பெண்ணைச் சுலபமா பாத்திர முடியாது!

அண்ணா ரொம்ப நாளா சைவமா இருந்திச்சு; பெரியாருடன் கூட்டங்களுக்குப் போறப்பத்தான்

> சைவத்தை விட்டிருச்சி; பெரியாருடன் நாகூருக்குப் போயிருந்தப்போ சாப்பாட்டுக்குப் பதிலா மீனை மட்டும் கொண்டு வந்து வச்சாங்களாம்; இது 'வேண்டாமின்னிருக்கு; பெரியாரு, 'சாப்பிடு, சாப்பிடு'ன்னு வம்பு பண்ணினாராம்; வேறு வழியில்லாமே சாப்பிட்டிருக்கு; சாப்பிட்டுட்டு, 'சைவமா இருந்தவன் இப்போ அசைவமா மாறிட்டேன்' அப்படின்னு லெட்டர் எழுதிச்சு.''

என்று நினைவு கூர்ந்திருக்கிறார் அண்ணாவின் தாயார்.

அண்ணாவுக்குச் சினமே வராதாம். இதுகுறித்து அண்ணாவின் துணைவியார் இராணியம்மையார் இப்படி கூறியிருக்கிறார்:

> ''எங்களுடைய மண வாழ்க்கையில் மகிழ்ச்சியாகவே அன்று முதல் இன்றுவரை இருந்து வருகிறோம். எந்தவிதமான மனக்குறையும் ஏற்படுவதில்லை. இதுவரையில் ஒருநாளும் என்னை அவர் கடிந்து பேசியது கிடையாது. அவருடைய இயல்பே, கோபம் வந்தால்கூட, யாரிடமும் கடிந்து பேசாததுதான். அவர் யாரிடமும் கோபம் கொண்டு சண்டையிட்டதை நான் ஒருநாளும் கண்டதில்லை. அவருடைய இந்த இயல்பு எங்கள் அனைவருக்கும் மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுக்கிறது. அவருடைய நண்பர்களும் இதைப்பற்றி மகிழ்ச்சி அடைகிறார்கள். கோபம் யார் மேலே இருந்தாலும் அவங்க எதிரிலேயே இருக்க மாட்டார். அந்தக் கோபம் கூடப் பத்து நிமிடத்திற்கு மேலே இருக்காது. பழைய நிலைக்கு வந்துவிடுவார்.''

என்று குறிப்பிட்டுள்ளார்.

கல்லூரிப் படிப்பிற்குப் பின்னர் தந்தை பெரியார் தலைமையில் சுயமரியாதை இயக்கத்தில் இணைந்து பணியாற்றினார். நீதிக்கட்சியில் சேர்ந்து, 1939இல் அதன் செயலாளரானார்.

ஆங்கிலேயரிடம் இந்தியா அடிமைப்பட்டிருந்த காலத்திலே தோற்றுவிக்கப்பெற்றது நீதிக்கட்சி. அதனால் அக்கட்சியின் பிற்கலாலத் தலைவர்கள் ஆங்கிலேயர்களுடன் எதிலும் இணக்கமாகவே நடந்து வந்தார்கள். ஆங்கிலேயர் கொடுக்கும் பட்டங்களிலும், பதவிகளிலும் ஆர்வம் காட்டினார்கள். அந்தக் கட்சியின் முதல் குறிக்கோள் ஆகிய தென்னிந்தியாவின் விடுதலையை வலியுறுத்தத் தவறினார்கள். அவர்களின் இத்தகைய

போக்கு அண்ணாவுக்கு மிகவும் வேதனையைக் கொடுத்தது. மூடத்தனங்களில் இருந்து மக்களை மீட்டெடுக்கின்ற அதேவேளை அடிமை உணர்வுகளில் இருந்து தலைவர்களை மீட்டெடுப்பதும் கட்டாயத் தேவை என்று கருதினார். அதனால் 1944ஆம் ஆண்டு தந்தை பெரியார் தலைமையில் சேலத்தில் நடைபெற்ற நீதிக்கட்சியின் மாநாட்டில் அதிரடியான ஒரு தீர்மானத்தை முன்மொழிந்தார்.

> ''நீதிக்கட்சியின் பெயரைத் 'திராவிடர் கழகம்' என மாற்ற வேண்டும்; ஆங்கிலேயர் கொடுத்த விருதுகளையும், கவுரவப் பட்டங்களையும் துறக்க வேண்டும்; ஆங்கிலேயர் இதுவரை அளித்த பதவிகளைத் துறப்பதுடன் இனிமேல் எந்தப் பதவிகளையும் அவர்களிடமிருந்து பெறுதல் கூடாது; சாதிகளை ஒழிக்க வேண்டும் என்பதால் இனிமேல் எவரும் தங்கள் பெயருக்குப் பின்னால் சாதிப் பெயர்களை இணைத்துக் கொள்ளக்கூடாது.''

என்னும் நான்கு கூறுகளைக் கொண்டது அத்தீர்மானம்.

''அண்ணாதுரை தீர்மானம்'' என தந்தை பெரியார் அவர்களே பெயர் சூட்டி, அதற்கு ஆதரவு தந்தார். பட்டங்களிலும், பதவிகளிலும் ஆசை கொண்ட பலர் இதனைக் கடுமையாக எதிர்த்து நின்றார்கள். செல்வாக்கு மிகுந்த பலர் இத்தீர்மானத்தைத் தோற்கடிக்க முயன்றார்கள். முப்பத்தைந்து மணி நேரம் விவாதம் நடைபெற்றது. அண்ணாவின் ஆணித்தரமான வாதங்களை யாராலும் எதிர்க்க முடியவில்லை. ஆகவே தீர்மானங்கள் நிறைவேறுவதை எவராலும் தடுக்க முடியவில்லை. அன்றுமுதல் நீதிக்கட்சியின் பெயர் 'திராவிடர் கழகம்' என மாறியது. தமிழ்நாட்டில் புதுயுகம் பிறந்தது.

ஆங்கிலேயர் ஆதிக்கத்தை இந்திய தேசியக் காங்கிரசுக் கட்சி மிக வன்மையாக எதிர்த்து இந்தியாவின் விடுதலைக்கு வழிவகுத்தது. இக்கட்சி பெரும்பாலும் ஆரியர்கள் மற்றும் வட இந்தியர்களின் ஆதிக்கம் மிகுந்த கட்சியாகத் தென்னிந்திய மக்களாலும் குறிப்பாகப் பெரியாராலும், தமிழர்களாலும் பெரிதும் கண்டிக்கப்பட்டது. இவர்களிடமிருந்து தென்னிந்தியாவை மீட்கப் பெரியார் விரும்பினார். இக்காரணங்களை முன்வைத்தே பெரியார் இந்தியா விடுதலை பெற்ற நாளான 1947 ஆகஸ்டு 15ஆம் நாளைக் துக்கத் தினமாக எடுத்துக் கொள்ளுமாறு தொண்டர்களுக்கு அழைப்பு விடுத்தார்.

அண்ணா இக்கருத்தில் முரண்பட்டார். இந்தியாவின் விடுதலை அனைவரின் தியாகத்தாலும், வியர்வையினாலும் விளைந்தது. அது வெறும் ஆரிய, வட இந்தியர்களால் மட்டும் பெற்றது அல்ல என்பதை அண்ணா வலியுறுத்தினார்.

அரசியல் களத்தில் பங்கு கொள்ளாமல் விலகி நிற்கும் பெரியாரின் கொள்கையிலும் அண்ணா முரண்பட்டார். இதன் வெளிப்பாடாக 1948இல் நடைபெற்ற கட்சி செயற்குழுக் கூட்டத்திலிருந்தும் வெளிநடப்புச் செய்தார். அரசியல் தேர்தலில் பங்கு பெறுவதால் தம்முடைய பகுத்தறிவு, சுயமரியாதை, தீண்டாமை ஒழிப்பு, மூடநம்பிக்கை ஒழிப்புப் போன்ற சமூக நீதிக் கொள்கைகளிலிருந்து சற்றுப் பின்வாங்கும் நிலைப்பாட்டைக் கட்சிக்கு ஏற்படுத்துவதைப் பெரியார் விரும்பவில்லை. அதாவது தேர்தலுக்காகக் கொள்கையை விட்டுக் கொடுக்கும் நிலையை விரும்பவில்லை. அரசியலுக்கு அப்பாற்பட்டு இருந்தால் மட்டுமே சமுதாயச் சீர்திருத்தங்களைத் தடையின்றி அரசுக்கெதிராகவும் மேற்கொள்ள முடியும் என்பதைப் பெரியார் நம்பினார். இந்தக் கருத்தில் அண்ணாவுக்கு உடன்பாடில்லை.

தம் குடும்பச் சொத்து நாட்டின் பொதுநன்மைக்கே பயன்பட வேண்டும் என்பதற்காக பெரியார் தமது 71ஆவது வயதில் மணியம்மையைத் திருமணம் செய்து கொள்ளத் தீர்மானித்தார். அந்தத் திருமணம் தாம் பரப்பி வரும் பகுத்தறிவுக் கொள்கைக்கு மாறானதாயிற்றே என்று அண்ணா பதறினார். எவ்வளவோ முயன்றும் தந்தைப் பெரியாரின் திருமணத்தைத் தடுக்க முடியவில்லை. திருமணம் 1949ஆம் ஆண்டு சூலை மாதம் ஒன்பதாம் தேதி நடந்தேறியது. அதனால் மிகுந்த துயருக்குள்ளான அண்ணா திராவிடர் கழகத்தை விட்டு வெளியேறினார்.

கனத்த இதயத்தோடு கழகத்தை விட்டுப் பிரிந்த அண்ணா, தம்முடன் சேர்ந்து வந்த ஈ.வெ.கி. சம்பத், இரா. நெடுஞ்செழியன், க. அன்பழகன், மதியழகன், என்.வி. நடராசன் போன்றவர்களோடு கலந்து ஆலோசனை செய்து, திராவிட முன்னேற்றக் கழகத்தை 17.09.1949இல் தோற்றுவித்தார். அப்போதும்கூட, தாம் தொடங்கிய திராவிட முன்னேற்றக் கழகத்தின் தலைவரது நாற்காலி காலியாகவே இருக்கும் என்றும், அதில் தந்தை பெரியார் ஒருநாள் தலைவராக வந்து அமர்வார் என்றும் நம்பிக்கை வைத்திருந்தார் அண்ணா. தம் இறுதிக் காலம் வரை கழகத்தின் தலைவராக இல்லாமல், பொதுச் செயலாளராகவே அண்ணா பணியாற்றினார்.

1957ஆம் ஆண்டுத் தேர்தலில் திராவிட முன்னேற்றக் கழகம் முதன் முதலாகத் தேர்தலில் போட்டியிட்டது. காஞ்சிபுரம் தொகுதியின் சட்டமன்ற உறுப்பினராக அண்ணா தேர்ந்தெடுக்கப் பெற்றார். திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் பதினைந்து பேர் சட்டமன்ற உறுப்பினர்களாகவும், இருவர் மத்திய நாடாளுமன்ற உறுப்பினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். அண்ணாவின் தலைமையில் தமிழ்நாட்டு அரசியலில் புதிய ஒரு மாற்றம் உருவாகத் தொடங்கியது.

கட்சித் தொண்டர்களை வெறும் உறுப்பினர்களாகக் கருதாமல், உடன்பிறந்த தம்பிகளாகத் தம் இதயத்தில் நினைத்து, வாய்நிறைய அழைத்து, பாசத்தைப் பொழிந்து, கட்சியை நடத்திய முதல் அமைச்சர் அண்ணா ஒருவரே எனில் அது மிகையாகாது. கடமை, கண்ணியம், கட்டுப்பாட்டினைத் தம் வாழ்வில் கடைப்பிடித்த அண்ணா, திராவிட முன்னேற்றக் கழக நிருவாகிகளும், தொண்டர்களும் அவற்றைக் கடைப்பிடிக்க வலியுறுத்தினார்.

1962ஆம் ஆண்டுத் தேர்தலில் திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்த ஐம்பது பேர் சட்டமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப் பெற்றனர். அண்ணா சட்டமன்றத்திற்குத் தேர்வு ஆகாமல் விட்டாலும், நாடாளுமன்ற மேலவைக்குத் தேர்வு செய்யப்பட்டார். அதன் மூலம் இந்திய அரசியல் எழுச்சிமிக்க மாற்றம் ஒன்றை உணரத் தொடங்கியது. அண்ணாவின் ஆங்கில அறிவுப் புலமையையும், அரசியல் பண்பாட்டுச் செழுமையையும் அகில இந்தியாவுமே அறிந்து கொள்ளும் வாய்ப்பு ஏற்பட்டது. அண்ணா எதிர்க்கட்சியில் இருந்த போதிலும், ஆளும் கட்சி கொண்டு வந்த நல்ல திட்டங்களை ஆதரித்தார்; பாராட்டிப் பேசினார். அதனைக் கண்டு அரசியல் தலைவர்கள் வியந்து, அண்ணாவின் அரசியல் நாகரிகத்தைப் போற்றிப் புகழ்ந்தார்கள். எதிர்க்கட்சியென்றாலே அரசின் எல்லா நடவடிக்கைகளையும் எதிர்ப்பது என்று இருந்த நிலைமையை அண்ணா மாற்றிக் காட்டினார்.

1967ஆம் ஆண்டு நடைபெற்ற தேர்தல் தமிழ்நாட்டின் வரலாற்றில் மட்டுமல்லாது, இந்தியாவின் அரசியல் வரலாற்றிலும் புதியதொரு திருப்பத்தை ஏற்படுத்தியது. இந்தியா விடுதலைப் பெற்றது முதல், இருபது ஆண்டுகளாகத் தொடர்ந்து ஆட்சியிலிருந்த காங்கிரசுக் கட்சியைத் தோற்கடித்து, திராவிட முன்னேற்றக் கழகம் பெரும்பான்மை இடங்களில் வெற்றி பெற்றுத் தமிழ்நாட்டில் ஆட்சியைப் பிடித்தது. அண்ணா முதல்அமைச்சர் ஆனார். முதலமைச்சராகப் பதவியேற்றதும் அரசு ஊழியர்களின் முன்னிலையில் தலைமைச் செயலகத்தில் அண்ணா ஆற்றிய உரை அவரின் பணிவிற்குச் சிறந்த எடுத்துக்காட்டு:

> ''கானம் பாடும் வானம்பாடிகளைப் போலத் திரிந்தவர்கள் நாங்கள். எங்களைப் பிடித்துக் கூண்டுக்குள் அடைப்பதைப் போலப் பதவியில் அமர்த்தியிருக்கிறீர்கள். பொறுப்பு தீர்ந்து விட்டதாகக் கருதிப் போய்விடாதீர்கள். பொறுப்பு இனிமேல்தான் அதிகமாகப்போகிறது. என்னை உங்கள் குடும்பச் சகோதரனாக எண்ணிக் கொள்ளுங்கள். ஆட்சிக்கு முற்றிலும் புதியவர்கள் நாங்கள். எனவே தவறு நிகழ்ந்தால் தயங்காமல் எடுத்துக் கூறுங்கள். என்னுடைய

கடமையை நிறைவேற்ற எனக்கு உதவுங்கள். பொறுமையாக இருங்கள். தேவைப்படும் போது என்னைத் திருத்துங்கள். என்னுடைய குறிக்கோள் உங்களுக்கு உழைப்பதுதான். முதலில் நான் மக்கள் தொண்டன். பிறகுதான் முன்னேற்றக் கழகத்தவன், முதலமைச்சன்.''

இவ்வாறு பேசி மக்கள் மனங்களில் மேன்மேலும் உயர்ந்தார்.

அண்ணா என்றுமே பதவிக்கு ஆசைப்பட்டவர் அல்லர். அதனால்தான் முதலமைச்சர் பதவியில் அமர்ந்திருக்கும்போது, தன்னிச்சையாக மக்களுக்குப் பணிசெய்ய முடியாத சூழ்நிலையின் கைதியாக இருப்பதாக நினைத்தார். 'திராவிடநாடு' இதழில் தம்பிக்கு வரைந்த கடிதம் ஒன்றில் அண்ணா இப்படி குறிப்பிடுகின்றார்:

''எந்தப் பணி எனக்கு இனிப்பும் எழுச்சியும் தந்து வந்ததோ, எந்தப் பணியில் நான் ஆண்டு பலவாக மிக்க மகிழ்ச்சியுடன் ஈடுபட்டு வந்தேனோ, எந்தப் பணி மூலம் என் கருத்துகளை உனக்கு அளித்து, உன் ஒப்புதலைப் பெற்று, அந்தக் கருத்துகளின் வெற்றிக்கான வழிகளைக் காண முடிந்ததோ, எந்தப் பணி மூலம் எப்போதும் உன் இதயத்தில் எனக்கோர் இடம் கிடைத்ததோ, அதுகுறித்து நான் அளவற்ற மகிழ்ச்சி பெற முடிந்ததோ, அந்தப் பணியினை முன்போலச் செய்ய முடியாதவன் ஆக்கப்பட்டு, முடியவில்லையே என்கிற ஏக்கத்தால் தாக்கப்பட்டு, சூழ்நிலையின் கைதியாக ஆக்கப்பட்டுக் கிடக்கிறேன்.''

என்கிறார் அண்ணா.

### 3. எளிமைக்கு எடுத்துக்காட்டு

அண்ணாவின் எளிமைக்கு எடுத்துக்காட்டாகப் பல நிகழ்வுகள் உள்ளன. சென்னையிலுள்ள வீட்டில் அண்ணா, அவர்தம் துணைவியார் இராணியம்மை, வளர்ப்பு மகன் பரிமளம் முதலான குடும்ப உறுப்பினர்கள் வாழ்ந்து வந்தார்கள். காஞ்சிபுரத்து வீட்டில் அண்ணாவின் தாயார், இரண்டாவது வளர்ப்பு மகன் இளங்கோவன் முதலான குடும்ப உறுப்பினர்கள் வாழ்ந்து வந்தார்கள். இந்த இரண்டு குடும்பங்களுக்குரிய செலவுகளை நிருவகிக்கின்ற பொறுப்பு அண்ணாவுக்கு இருந்தது.

நாடறிந்த தலைவராகவும், தமிழ்நாட்டின் முதலமைச்சராகவும் விளங்கிய அண்ணா, குடும்பத்தின் அன்றாடச் செலவுகளைச் செய்வதற்குக் கூட தொல்லைப்பட்டிருக்கிறார் என்பது வியப்பளிக்கும் செய்தியாகும். அண்ணா முதலமைச்சர் பதவிக்கு வந்த பின்னரும்

அவர்தம் குடும்பப் பொருளாதாரச் சிக்கல் தீரவில்லை. அண்ணா ஆட்சிக்கு வந்தவுடன், தமக்கு முன்னதாக ஆட்சி புரிந்த முதலமைச்சர் பெற்ற ஊதியத்தில் பாதியை மட்டுமே தாம் பெறப்போவதாக அறிவித்தார். அண்ணாவுக்கு முன்னர் முதலமைச்சராக இருந்த திரு. பக்தவத்சலம் அவர்கள் வாங்கிய மாத ஊதியம் ஆயிரம் ரூபாய். எனவே அதில் ஒருபாதியான 500 ரூபாயைத்தான் ஊதியமாகப் பெற்றார் அண்ணா. வீட்டு வாடகைப்படி + ரூ250, கார் பராமரிப்புச் செலவு + ரூ.250 ஆகமொத்தம் ஒரு மாதத்திற்கு ஆயிரம் மட்டுமே மாத வருமானமாகப் பெற்றார். இந்தப் பணத்தைக் கொண்டே தம்முடைய குடும்பச் செலவுகளைச் சமாளித்தார்.

அன்றைய நிலையில் அரிசி, சர்க்கரை போன்ற உணவுப் பொருள்களுக்குத் தட்டுப்பாடு இருந்தது. உணவுப் பங்கீட்டு அட்டை மூலம் வழங்கப்பட்டு வந்த அரிசி, சர்க்கரையின் அளவு குடும்பத்திற்குப் போதுமானதாக இல்லை. சென்னையில் அண்ணாவின் குடும்பத்திற்கு நாள்தோறும் வருகின்ற விருந்தினர்களும், நண்பர்களும் அதிகம். அதனால் உணவுப் பங்கீட்டு அட்டையில் கூடுதலாக ஒருவர் பெயரைச் சேர்த்தால் அரிசி, சர்க்கரை போன்றவை மேலும் கொஞ்சம் கூடுதலாகக் கிடைக்கும் என்பதால் குடும்ப அட்டையில் தம் அச்சகத்தில் பணியாற்றி வந்த ஒருவர் பெயரையும் அண்ணாவின் துணைவியார் சேர்த்து விட்டார்.

ஒரு நாள் தற்செயலாகத் தம் குடும்ப அட்டையைப் பார்த்த அண்ணா, அதில் குடும்ப உறுப்பினராக இல்லாத ஒருவர் பெயர் இருப்பதைப் பார்த்துக் கோபம் கொண்டார். துணைவியாரிடம், “நாமே இத்தகைய செயலைச் செய்யலாமா?” என்று கேட்டார். அதற்கு அண்ணாவின் துணைவியார், ‘‘அவர் நம் வீட்டில் உள்ள அச்சகத்தில் பணியாற்றுபவர். அதனால் அவருடைய பெயரைச் சேர்த்தேன்’’ என்று விளக்கம் அளித்தார். ஆனால் அண்ணா அதனை ஏற்கவில்லை. உணவுப் பங்கீட்டுக் குடும்ப அட்டையில் குடும்பத்தினர் அல்லாதவர் பெயர் எதுவும் இருக்கக் கூடாது என்று கண்டிப்பாகக் கூறிவிட்டார்.

அண்ணா முதலமைச்சராவதற்கு முன்பு அவருக்கென ஒரு வங்கிக் கணக்குக் கூட இருந்தது இல்லை. முதலமைச்சரான பின்னர்க் காசோலையாக வழங்கப்படும் அவருடைய சம்பளப் பணத்தைப் பெறுவதற்காகவே 10 ரூபாய்ச் செலுத்தி முதன் முதலில் வங்கிக் கணக்கு ஒன்று அண்ணா பெயரில் தொடங்கப்பட்டது.

காஞ்சிபுரம் தேனம்பாக்கத்தில் ஓர் ஏக்கர் நிலம், காஞ்சிபுரத்தில் ஒரு வீடு, சென்னை நுங்கம்பாக்கத்தில் ஒரு வீடு இந்த மூன்றும்தாம் அண்ணா விட்டுப் போன சொத்துகள்! முதலமைச்சராக இருந்து அவர்,

இறந்த 1969 பிப்பிரவரி மாதத்தில் சென்னை நுங்கம்பாக்கம் இந்தியன் வங்கியில் 5,000 ரூபாய், மயிலாப்பூர் இந்தியன் வங்கியில் 5,000 ரூபாய் மட்டுமே அவருடைய கணக்கில் இருந்தன.

## 4. உதவும் பண்பு

1948ஆம் ஆண்டு பேரறிஞர் அண்ணா, தந்தை பெரியாருடன் இணைந்து அவர்தம் இயக்கத் தளபதி போலச் செயல்பட்டு வந்தார். அப்போது அந்த இயக்கத்தின் முன்னணிப் பேச்சாளர்களுள் ஒருவராக விளங்கிய பட்டுக்கோட்டை அழகிரி அவர்களுக்கு அண்ணா மீது மனப்பிணக்கு இருந்தது. அதனை அவ்வப்போது மேடைகளில் வெளிக்காட்டிக் கொண்டிருந்தார். ஆனாலும் அண்ணா, அழகிரியைப் பாசமுடன் ‘அண்ணன்’ என்றுதான் அழைத்து மகிழ்வார்.

அழகிரி காசநோயால் பாதிக்கப்பட்டு, தாம்பரம் மருத்துவமனையில் உயிருக்குப் போராடிக் கொண்டிருந்தார். வறுமையும், ஆதரவற்ற நிலையும் அழகிரியை வருத்தின. அந்த நிலையில் அண்ணா அழகிரிக்கு உதவ விரும்பினார். தம்முடைய ‘சந்திரோதயம்’ நாடகத்தை நடத்தி அதன் மூலம் கிடைத்த தொகையைக் கழகத்தோழர் கே.ஏ. மதியழகன் மூலமாக அழகிரிக்கு அனுப்பி வைத்தார். மனம் நெகிழ்ந்த அழகிரி உள்ளம் உருக, கண்ணீர், பெருக மதியழகனிடம்

> ‘‘இதுவரை நான் நம்பியவர் என்னைக் கைவிட்டு விட்டார். ஆனால் நான் யாரை இழிவாகத் திட்டித் தீர்த்தேனோ அவர் எனக்கு உதவியுள்ளார். என் நன்றியை அண்ணாவுக்குச் சொல்லப்பா.’’

என்று கூறியுள்ளார்.

தம்மொடு தொடர்பில்லாதவர்களிடமும் கூட இரக்கம் செலுத்தும் அருள் உள்ளம் அண்ணாவுக்கு உண்டு. பல நிகழ்வுகளை இதற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

ஒருமுறை, கத்தோலிக்கச் சமயத்தலைவர் போப்பாண்டவரைக் கண்டு மகிழும் வாய்ப்பு அண்ணாவுக்குக் கிடைத்தது. சந்திக்கும் ஒவ்வொருவரும் போப்பாண்டவரிடம் ஒரு வரம் கேட்கலாம் என்று கூறப்பட்டது. அப்போது அண்ணா, கோவா விடுதலைப் போராட்ட வீரர் ‘ரானடே’ என்பவர் போர்ச்சுகீசிய அரசால் சிறை செய்யப்பட்டு நீண்ட காலமாகச் சிறையில் வாழ்ந்துக் கொண்டிருக்கிறார் என்பதை அறிந்து, அவரை விடுதலை செய்ய உதவுமாறு போப்பாண்டவரிடம் வேண்டினார். அண்ணா கேட்ட அந்த வேண்டுக்கோள் போப்பாண்டவரை வியப்பில் ஆழ்த்தியது. தமக்காக எதுவும்

கேட்காமல், பிறருக்காக உதவி கேட்ட அண்ணாவின் அருள் உள்ளம் போப்பாண்டவரை நெகிழ வைத்தது. போப்பாண்டவரின் முயற்சியால் போர்ச்சுகீசியச் சிறையில் வாடிய 'ரானடே' விடுதலை ஆனார்.

அதேபோல அமெரிக்காவில் சிகிச்சை பெற்று இந்தியாவுக்கு வந்த பிறகு, உடல் நலத்தில் பின்னடைவு ஏற்பட்டுத் தம் இல்லத்தில் அண்ணா படுத்திருந்த போது, பச்சிளங் குழந்தையுடன் வந்த பெண்ணொருத்தி, தன் கணவன் ஒரு வழக்கில் சிக்கி உள்ளதாகவும் அதற்காக அவருக்குத் தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டதாகவும், மறுநாள் காலை தூக்குத் தண்டனை நிறைவேற உள்ளது என்றும் சொல்லி, எப்படியாவது தன் கணவனைக் காப்பாற்றித் தனக்கு வாழ்வு தருமாறு அண்ணாவிடம் வேண்டினாள். உடனே அண்ணா தூக்குத் தண்டனையை நிறுத்துமாறு மதுரைச் சிறை அதிகாரிக்கு ஆணையிட்டார். தாம் இறப்போடு போராடிக் கொண்டிருந்த நிலையிலும் மற்றொரு உயிரைக் காக்க ஆணை வழங்கினார் அண்ணா.

மற்றொரு நிகழ்வு: கும்பகோணம் நகரில் கொடிய நோயால் தாக்கப்பட்ட ஒருவர் உயிர்காக்கும் அரிய மருந்து ஒன்று எங்கும் கிடைக்காமல் துன்புற்றுக் கொண்டிருந்தார். அந்த மருந்து அமெரிக்காவில் மட்டுமே கிடைக்கிறது என்பதை அறிந்த அவர் தம் உறவினர்கள் அந்த மருந்தை எப்படி வாங்கி வருவது? என்று எண்ணித் தவித்துக் கொண்டிருந்தனர். இச்செய்தி அமெரிக்காவில் இருந்த அண்ணாவுக்கு எட்டியது. அந்த மருந்தை அமெரிக்காவில் இருந்து திரும்பி வரும்போது தாமே வாங்கி வந்து நோயாளிக்குக் கொடுத்து உதவியுள்ளார்.

அறிஞர் அண்ணா முதலமைச்சராக இருந்த போது அன்றைய மரபுப்படி அவர் வீட்டிற்கு வெளியே கையில் துப்பாக்கி ஏந்திய காவலர் ஒருவர் விறைப்பாக நின்று கொண்டிருந்தார். இதனைக் கண்ட அண்ணா, பணி நேரம் முழுவதும் இப்படி ஒருவர் நிற்பது தமக்கு வருத்தம் தருவதாகக் கூறிக் ''காவலர் அங்கே நிற்க வேண்டாம்'' என்றார். ஆனால் காவல் துறையினர் 'அது பாதுகாப்பு ஏற்பாடு. அதனை நீக்க இயலாது' எனத் தெரிவித்தனர். உடனே அண்ணா, "அப்படியானால் அவரைச் சாதாரண உடையில் ஓர் இருக்கையில் உட்காரச் செய்யுங்கள்" என்று கூறிக் காவலரின் துயரைப் போக்கினார். இப்படி பிறர் துன்பத்தையும் தம் துன்பமாக எண்ணி இரங்கியவர் அண்ணா.

## 5. பிறரை உயர்த்திய பாங்கு

கண்ணியம் மிக்க பேச்சாளர் பேரறிஞர் அண்ணா 'கடமையை நிறைவேற்றுவதிலும், 'கண்ணியத்தைக்' காப்பதிலும், 'கட்டுப்பாட்டோடு'

நடந்து கொள்வதிலும் கவனமாக இருந்தவர். பேச்சிலும் எழுத்திலும் தமக்கென ஒரு தனி வழியை வகுத்துக் கொண்ட மாமேதை. மாற்றுக் கட்சியினர் தம்மையும் தம் கழகத்தினரையும் தரக்குறைவாக மேடையில் பேசினாலும் அதனைக் கண்டிக்கிற நேரத்தில் கண்ணியத்திற்கு இழுக்கு ஏற்படாத வகையில் பேச வேண்டும் என்று கழகத்தினருக்கு அறிவுரை வழங்குவார்.

காஞ்சிபுரத்தில் அண்ணாவின் 'திராவிட நாடு' கிழமை இதழ் அலுவலகத்தின் அச்சகத்தில் எழுத்துக் கோத்தல், அச்சு எந்திரத்தைக் கையால் சுற்றுதல், அண்ணா எழுதி முடிக்கின்ற தாள்களை அடுக்கி வைத்தல் போன்ற வேலைகளைச் செய்து வந்தார் ஒருவர். அவர்தான் பிற்காலத்தில் 'நடிகர் திலகம்' சிவாஜிகணேசன். 'திராவிடர் கழகம்' சார்பாக நடக்கவிருந்த ஏழாவது சுயமரியாதை மாநாட்டுக்காக, 'சிவாஜி கண்ட இந்து ராஜ்ஜியம்' என்னும் பகுத்தறிவு நாடகத்தை எழுதியிருந்தார் அண்ணா. அதில் சிவாஜியாக நடிக்க எம்.ஜி.ஆர். (இராமச்சந்திரன்) உட்பட அப்போது பெயர்பெற்று விளங்கிய பல நடிகர்களின் பெயர்கள் கணிக்கப்பெற்றன. ஆனால் எதுவுமே சரியாக அமையவில்லை.

நாடகத்திற்குச் சில நாள்களே எஞ்சி இருந்த நிலையில் கடைசியாக வி.சி. கணேசனின் பெயரை மூத்த நடிகர் ஒருவர் முன்மொழிந்தார். தாம் எழுதிய 90 பக்க உரையாடல்களைக் கணேசனிடம் கொடுத்த அண்ணா, அதனை மனப்பாடம் செய்யச் சொல்லிவிட்டுப் போனார். கணேசன் உரையாடட்ல பகுதிகளைப் பெற்றது காலை பதினொரு மணிக்கு. மாலை 6 மணிக்குத் திரும்பிய அண்ணாவிடம் கணேசன் உரையாடல்களைத் துடிப்பாய்ப் பேசிக் காட்டிய பாங்கில் அளவில்லா மகிழ்ச்சி அடைந்து 'நீதான் சிவாஜி' என்றார் அண்ணா. அதுதான் நடிகர் திலகம் சிவாஜி கணேசனுக்கு ஒரு திருப்பு முனையாக அமைந்தது எனலாம்.

6. நிலையான புகழ்வாழ்வு

இருபதாம் நூற்றாண்டில் தம் தனித்துவத் தமிழ் நடையால் தரணியெங்கும் தமிழ் மணம் பரப்பச்செய்த தமிழ்த் தாயின் தவப் புதல்வர் பேரறிஞர் அண்ணா புற்றுநோய் காரணமாக 1969ஆம் ஆண்டு பிப்பிரவரி 3ஆம் நாள் காலமானார். அவரின் இறுதி ஊர்வலத்தில் பெருந்திரளான மக்கள் கலந்துகொண்ட நிகழ்வு "கின்னஸ் உலகச் சாதனைப் புத்தகத்தில்" இடம் பெற்றுள்ளது. அவரது இறுதி ஊர்வலத்தில் ஏறத்தாழ பத்து (10) இலட்சம் மக்கள் கலந்து கொண்டு அஞ்சலி செலுத்தினர். அண்ணாவின் உடல்

சென்னையிலுள்ள மெரினா கடற்கரையில் அடக்கம் செய்யப்பட்டது. இவ்விடம் 'அண்ணா சதுக்கம்' என்னும் பெயரில் இன்று பொதுமக்கள் அஞ்சலி செலுத்தும் வகையில் அமைக்கப் பெற்றுள்ளது.

1967ஆம் ஆண்டு அண்ணா ஆட்சியைக் கைப்பற்றிய நாள் முதல் இன்றுவரை, அண்ணாவின் பெயர் சொல்லும் ஆட்சியே தமிழ்நாட்டில் நடைபெற்று வருகின்றது. அண்ணா தோற்றுவித்த கட்சியையும், அவரது பெயரில் தோன்றிய கட்சியையும் தவிர வேறு யாராலும் தமிழ்நாட்டின் ஆட்சியைக் கைப்பற்ற முடியவில்லை. ஆளும் கட்சியினரும் அண்ணாவின் பெயராலேயே ஆட்சியை நடத்துகிறார்கள். எதிர்க்கட்சியினரும் தங்களை அண்ணாவின் வழித்தோன்றல்களாகவே நினைக்கிறார்கள். ஏனையக் கட்சிகளில் இருக்கும் பலரும் அண்ணாவையே தங்கள் அரசியல் குருவாக மதிக்கிறார்கள். இந்தப் பெருமை வேறெந்த அரசியல் தலைவருக்கும் கிடைத்ததேயில்லை. அந்த அளவிற்கு மறைந்த பிறகும், தமிழ்நாட்டு அரசியலில் மாபெரும் சக்தியாக விளங்குகின்றார் பேரறிஞர் அறிஞர் அண்ணா.

## 7. நினைவுச் சின்னங்கள்

தமிழ்நாடு அரசு அண்ணாவின் நினைவாக அவர் வாழ்ந்த காஞ்சிபுரம் இல்லத்தைப் 'பேரறிஞர் அண்ணா நினைவு இல்லம்' என்னும் பெயரில் நினைவுச் சின்னமாக மாற்றியமைத்துள்ளது. இங்கு அண்ணா அமர்ந்த நிலையிலான சிலை வைக்கப்பட்டுள்ளது. அண்ணாவின் வாழ்க்கை வரலாறு தொடர்பான ஒளிப்படங்கள் (போட்டோக்கள்) கண்காட்சியாக வைக்கப்பட்டுள்ளன.

புரட்சித்தலைவர் எம்.ஜி.ஆர். தி.மு.க. விலிருந்து பிரிந்து தனிக்கட்சி தொடங்கியபோது அதற்கு 'அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம்' எனப் பெயர் வைத்தார். சென்னையில் உள்ள தி.மு.க. தலைமைச் செயலகக் கட்டடத்துக்கு 'அண்ணா அறிவாலயம்' என்று பெயர் சூட்டப்பட்டது.

வேலூரில் அரசுத் திரையரங்கம் ஒன்றில் 1968 முதல் சிறுவர்களுக்கான திரைப்படம் திரையிடப்பட்டு வந்தது. இந்தத் திரையரங்கம் 1971 முதல் 'அண்ணா கலையரங்கம்' எனப் பெயர் மாற்றம் செய்யப்பட்டு முழுநீளத் திரைப்படங்கள் திரையிடப்பட்டு வருகின்றன. 2009ஆம் ஆண்டு மத்திய அரசு அண்ணா நினைவாக அவர் உருவம் பொறிக்கப்பெற்ற 'ஐந்து ரூபாய் நாணயத்தை' வெளியிட்டது. 2010ஆம் ஆண்டு அண்ணா நூற்றாண்டு நிறைவை நினைவுகூரும் வகையில் தமிழ்நாடு அரசு அண்ணா நூற்றாண்டு நூலகத்தை உருவாக்கியது.

சென்னையிலுள்ள ஒரு பாந்த குடியிருப்புப் பகுதிக்கு 'அண்ணாநகர்' எனப் பெயரிடப்பட்டுள்ளது. தமிழ்நாட்டின் முதன்மையான தொழில் நுட்பப் பல்கலைக்கழகத்திற்கு 'அண்ணா பல்கலைக்கழகம்' என்னும் பெயர் சூட்டப்பெற்றுள்ளது. சென்னையின் முதன்மைச் சாலையான மவுண்ட் ரோடு 'அண்ணா சாலை' எனப் பெயர் மாற்றம் செய்யப்பெற்றது.

செருக்கும் சினமும் கொள்ளாதவராகவும், நேர்மையால் எல்லாரையும் ஈர்க்கும் நிகரில்லாப் பண்பாளராகவும், நட்பிற்கு நல்ல இலக்கணமாகவும் திகழ்ந்து தமிழ்நாட்டு மக்களின் முன்னேற்றத்திற்குக் காலமெல்லாம் உழைத்தவர் பேரறிஞர் அண்ணா. அவர் பிறப்பில் ஏழையாக இருந்தாலும், தம்முடைய சிந்தனையில் பெரும் செல்வந்தராகவே திகழ்ந்தார்.

# 2. சமூகச் சிந்தனைகள்

பேரறிஞர் அண்ணா அவர்கள் ஒரு சீரிய சிந்தனையாளர்; கூரிய பேரறிவாளர். எழுத்தாலும், பேச்சாலும், பண்பாலும் மக்களைக் கவர்ந்த மனிதநேயக் காவலர். அவரது உன்னதச் சிந்தனைகளும், உயரிய கொள்கைகளும் சமூகச் சீர்திருத்தத்தையே நோக்கமாகக் கொண்டிருந்தன. சிறந்த எழுத்தாளர், நல்ல பேச்சாளர், நேர்மையான அரசியல் தலைவர் என எந்தக் கோணத்தில் அவரை நோக்கினாலும் சமுதாய மேம்பாடே அவரிடம் மேலோங்கி நிற்கும். தமிழ் மக்களின் மேன்மைக்காகவே தம் வாழ்நாளை ஒப்படைத்த நற்கொடையாளர் அண்ணா.

மனிதன் தன் வாழ்வின் எல்லா நிலைகளிலும் இயற்கையையோ, இன்னொருவரையோ சார்ந்து வாழ வேண்டியிருக்கிறது. எனவே தன் மன உணர்வுகளை வெளிப்படுத்தவும், தன்னுடைய தேவைகளை நிறைவேற்றிக் கொள்ளவும் பிற மனிதர்களுடன் கூடி வாழ முற்படுகிறான். மனிதனின் இத்தகைய கூடி வாழும் இயல்பே சமுதாய அமைப்பிற்கு அடித்தளமாக அமைகிறது. அச்சமுதாயத்தில் உள்ள மக்களை நல்வழிப்படுத்துவதற்காக ஒவ்வொரு காலகட்டத்திலும் பல அறிஞர்கள், தத்துவ ஞானிகள், சிந்தனையாளர்கள், அரசியல் தலைவர்கள் போன்றோர் தோன்றியுள்ளனர். அந்த வரிசையில் தமிழ்ச் சமுதாயத்தைத் தலைநிமிரச் செய்யத் தோன்றியவர் அறிஞர் அண்ணா. அவருடைய சமுதாயச் சீர்திருத்தச் சிந்தனைகள் ஏராளம்.

தான் வளர்ந்து வாழ்வதோடு மட்டுமல்லாது, தன் சமூக மக்களையும் வளர்த்து வழி நடத்தி, பகுத்தறிவுடைய சமுதாயத்தை மலரச் செய்பவன்தான் சிறந்த தலைவன். இந்த இலக்கணத்திற்குச் சீரிய எடுத்துக்காட்டாக இருந்தவர் பேரறிஞர் அண்ணா. சிறப்புடைய தலைமைப் பண்புகள் அனைத்திற்கும் தம்மைத் தகுதிப்படுத்தி, தம்வழிச் சமூகத்தையும் அதற்கு உட்படுத்தி, சமூக விழிப்புணர்வை ஊட்டிய உன்னதத் தலைவர்களுள் முதன்மையானவர் அண்ணா எனில் அது மிகையாகாது.

தனிமனித வாழ்வு கூட்டுச் சேரும் போது அது சமூகமாக மாறுகின்றது. அச்சமூகம் இளைஞர்கள், மாணவர்கள், பெண்கள், தொழிலாளர்கள், உழவர்கள், வணிகர்கள், தொண்டர்கள் எனப் பல பிரிவினரை உள்ளடக்கியது. அவர்களை மூடப் பழக்கங்களைக்

கொண்ட பழைய பாதையிலிருந்து பகுத்தறிவுப் பார்வையுடனான புதிய பாதைக்கு மாற்ற விரும்பினார் பேரறிஞர் அண்ணா.

**1. சமூகக் கடமை**

ஒவ்வொரு மனிதனும் சமூகத்திற்குக் கடமைப்பட்டவனாக இருக்கிறான். சமூகத்தால் அவன் பெற்ற பயனைத் திருப்பிச் செலுத்த வேண்டிய கடமை உள்ளது. எனவேதான் சமூகத்தின் அனைத்துத் தரப்பு மக்களும் இணைந்து சமூகத்திற்குத் தொண்டாற்ற வேண்டும். அப்படிப்பட்டதொரு ஒரு சமூகத்தைப் படைக்க அனைவரையும் சமூக உணர்வோடு அழைக்கிறார் பேரறிஞர் அண்ணா.

> ''இராமன் ஆண்டால் என்ன, இராவணன் ஆண்டால் என்ன" என்று வாளா இருந்துவிடுவது தவறு. எல்லோரும் இந்நாட்டு மன்னர் என்று சுப்பிரமணிய பாரதி சொன்னார். ஆனால் எப்போதும், மன்னர்கள் என்று நினைத்துக் கொள்ள முடியாது. ஐந்தாண்டுகளுக்கு ஒருமுறை தேர்தல் வரும்போது ஓட்டுப் போடுகிற நேரத்தில் அந்த இருநொடிகள் வரைதான் எல்லோரும் மன்னர். எனவே அனைவரும் தத்தம் கடமையைச் செய்தால்தான் அதற்கேற்ற அரசு அமையும். தேர்தலுக்குப் பிறகு எல்லோரும் மன்னரல்லர், குடிமக்கள்தான்!.''

என்கிறார் அண்ணா.

சனநாயகம் (மக்களாட்சி) என்பது அரசாள்வோருக்கு மட்டுமல்ல. வாக்குச்சீட்டு (ஓட்டு)ப் போட வேண்டிய மக்களுக்கும் இருக்க வேண்டிய பொறுப்புணர்ச்சி என்பது அண்ணாவின் கருத்து. தனி மனிதனை மையமாக வைத்து அவனுடைய உரிமைகள் பாதுகாக்கப்பட வேண்டும் என்பது மக்களாட்சியின் முதன்மையான நோக்கம். மககளாட்சி பற்றிய கருத்தொன்று உண்டு. அதாவது மக்களாட்சி நாட்டில் கருத்து வெளியிட ஒவ்வொருவருக்கும் உரிமை உண்டு. ஆனால் மக்களாட்சி எப்படியிருக்க வேண்டும் என்று ஒவ்வொருவரும் ஒரு கருத்தை வெளியிட்டால் அதைச் செயல்படுத்த முடியாது. அது மக்களாட்சியாகவும் அமையாது என்பதாகும்.

மக்களாட்சி என்னும் அரசியல் மரபு நெறி எத்தனை குறைகளையுடையதாக இருந்தாலும், மக்கள் தங்கள் கருத்தைத் தெரிவிக்கவும், அறிவிக்கவும், தங்களது நலனுக்கு ஏற்ற ஆட்சியை அமைத்திடும் முயற்சியில் ஈடுபடவும் அது வாய்ப்பு அளிக்கிறது. இந்த வாய்ப்பு முழுப் பலனைக் கொடுக்க, திருத்தங்கள், முறை மாற்றங்கள் தேவைப்படக் கூடும். ஆனால் மக்களாட்சி மரபுநெறி மக்கள் பெற்றுள்ள

மிகப்பெரிய வாய்ப்பு என்பதில் மாறுபட்ட கருத்துக்கு இடமில்லை என்பார் அண்ணா.

''உண்மையான மக்களாட்சியிலே பற்று மிகுதியாகக் கொண்டுள்ளதால்தான், அந்தக் கடமையைச் செய்வதிலேயே, எத்தனை இன்னல் ஏற்படினும் பொறுத்துக் கொள்கிறோம். எத்தனையோ இழிமொழிகளை, பழிச்சொற்களைத் தாங்கிக் கொள்கிறோம். 'பறந்து செல்லும் காக்கை, எச்சமிடுகிறது, பாதையிலே செல்பவனின் பட்டுச் சட்டை பாழ்படுகிறது. அதனால் பயணம் நின்று விடுவதில்லை!'' எனப் பொருத்தமான உவமையின் வாயிலாக அவர் விளக்கம் தரும்போது அவருக்கு மக்களாட்சியின் மீதுள்ள அசைக்க முடியாத நம்பிக்கை புலப்படுகிறது.

தமிழ்நாட்டில், மக்களாட்சி உணர்வு மேலோங்கியுள்ளது என்பது அண்ணாவின் கணிப்பு.

> ''ஏழ்மை, அறியாமை, மனக் குழப்பம், மருட்சி என்பவைகளின் பிடியில் சிக்கிக் கிடப்பினும், தமிழகத்துப் பொதுமக்கள், மக்களாட்சி உணர்வை, நீதி நியாயத்தின்பால் கொண்டுள்ள பற்றினை விட்டு விடவில்லை.''

என்று கூறுவார்.

தாம் சட்டமன்றத் தேர்தலில் போட்டியிட்டுத் தோற்றிருந்த போதும் பொதுமக்கள் மீது இத்தகையதொரு ஒரு சார்பு அற்ற கருத்தைக் கொண்டிருப்பது, அவர் ஒரு சிறந்த சனநாயகவாதி என்பதற்குச் சரியான அடையாளம்.

மேலும், அவர் தம்முடைய தோல்வியைப் பற்றிக் கூறிய கருத்து சிந்திக்கத் தக்கது. அதாவது,

> ''என்னைத் தோற்கடித்த காஞ்சிபுரம் தொகுதியையேகூட எடுத்துப் பார் தம்பி! நான் எங்கும் எவருக்கும் எந்தவிதமான தீங்கும் செய்ததில்லை. என்னால் எவருக்கும் எந்த விதமான இடர்ப்பாடும் ஏற்பட்டதில்லை. என் பணியிலே மாசு கற்பித்துப் பேசக்கூட அதிகம் பேர் இங்கு இல்லை. எனினும் என்னைப் பெரும்பான்மையினர் ஆதரிக்க மறுத்து விட்டார்கள். ஏன், பணம் வெள்ளம் போல் பாய்ந்தது என்கிறார்கள். இருக்கட்டுமே! அதனையும் மீறி அல்லவா மக்களுக்கு என்னிடம் அன்பு எழவேண்டும்!.''

அண்ணாவின் இந்தச் சிந்தனை அவர் எந்த அளவுக்குத் தம்மைத் தாமே திறனாய்வு செய்துபார்த்திருக்கிறார் என்பதைக் காட்டுகிறது. ஒரு சமுதாயத் தலைவருக்குரிய அரிய பண்பு இது.

## 2. எதிர்க்கட்சியின் கட்டாயத் தேவை

ஆட்சியாளர்கள் ஓர் இயக்கத்தை அல்லது ஒரு கட்சியை எப்படி நல்லமுறையில், நாட்டின் வளர்ச்சிக்கும், மேம்பாட்டிற்கும் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதை அண்ணா அழகாகக் குறிப்பிடுகிறார்.

> ''ஒரு மரம் இருக்கிறது. ஒருவன் அம்மரத்தை ஆணிவேருடன் பெயர்க்க விரும்பலாம். ஒருவன் அம்மரத்தைக் கோடாலி கொண்டு வெட்ட விரும்பலாம். ஒருவன் மரத்தின் அடியிலே வெந்நீரை ஊற்றலாம். ஒருவன் மரத்தடியிலே நிழலுக்காகத் தங்கலாம். ஒருவன் விரும்பினால் இதே மரத்தில் கயிற்றைக்கட்டி அதிலே தொங்கலாம். ஆக மரத்தின் பயன் அவனவன் மரத்தைப் பயன்படுத்துவதிலே இருக்கிறது.''

என்கிறார்.

ஆளும் கட்சியை வழிநடத்த ஓர் எதிர்க்கட்சி கட்டாயம் இருக்க வேண்டியதன் தேவையை அண்ணா எவ்வளவு எளிமையாக எடுத்துரைக்கிறார் பாருங்கள்!

> ''காங்கிரசுக் கட்சியார் இப்பொழுது ஆட்சிப் பீடத்திலே இருந்தாலும் மற்றக் கட்சிக்காரர்கள் சொல்லுவதற்கு அவர்கள் செவி சாய்க்கவேண்டும். வெள்ளைக்காரர்கள் ஆட்சிப் பீடத்தில் இருந்தபோது காங்கிரசுக் கட்சி என்று ஒரு கட்சியிருந்ததால்தான் வெள்ளைக்காரர்களின் அட்டூழியங்களை எல்லாம் மக்களிடம் எடுத்துச் சொல்ல முடிந்தது. எந்தக் கட்சியிலும் தவறு இல்லாமல் இருக்க முடியாது. காங்கிரசுக்கட்சி இருந்ததால்தான் வெள்ளையன் விதித்த வரிக் கொடுமையைப் பற்றி, ஏகாதிபத்திய வெறியைப் பற்றி, நம்நாட்டுப் பணத்தைச் சுரண்டுவதைப் பற்றி, ஜெனரல் டயர் போன்றோரின் கொடுமையைப் பற்றி எல்லாம் மக்களுக்கு எடுத்துச் சொல்ல முடிந்தது.
>
> நம் சொந்த மாடுதானே நம்மை முட்டுகிறது என்று சும்மாயிருந்துவிட முடியுமா? முரடான மாடானால் அடக்க வேண்டியதும் நாம்தானே! சாமியார் காவியும், தண்டு கமண்டலமும் ஏந்தியிருப்பதால் அவரிடம் கள்ளத்தனம் இல்லையென்று சொல்லிவிட முடியுமா? சாமியாராகக் காட்சி அளிப்பவரைப் பரிசோதிக்க வேண்டுமானால் நடுநிசியில்தான் அவரைப் பரீட்சித்துப் பார்க்கலாம்.

அதைப்போலவே கதர் ஆடை கட்டி, கைராட்டை சுற்றுபவரையும் ஆட்சி நடத்தும் பொழுதுதான் அவர் போக்கைக் கண்டுபிடிக்க முடியும். காவி உடை தரித்தவராயிருந்தாலும், கதர் குல்லாயுடன் காட்சி அளிக்கும் காங்கிரசக்காரராக இருந்தாலும் தவறுகளை எடுத்துக்காட்டக் கட்டாயம் மாற்றுக் கட்சி ஒன்று தேவை."

என்று எதிர்க்கட்சியின் இன்றியமையாமையை விளக்குகிறார் அண்ணா.

தேர்தல் நேரத்தில் நாட்டுப்புற ஊர்களில் (கிராமப்புறங்களில்) இருக்கும் வாக்காளர்களைச் சந்திப்பதை ஒரு மகிழ்ச்சியான வாய்ப்பாக அண்ணா பயன்படுத்தி வந்தார். கிராமத்து மக்களும் அண்ணாவை ஆவலோடு வரவேற்று விளக்கம் பெறவும், அய்யப்பாடுகளைக் கேட்டுத் தெளிவு பெறவும் முன்வந்தார்கள். அண்ணா நாட்டுப்புற மக்களுக்குப் புரியும் விதத்தில் மிக எளிய உதாரணங்களுடன் விளக்க மளிப்பார். அதற்கு ஓர் எடுத்துக்காட்டு- காஞ்சித் தொகுதியைச் சேர்ந்த ஒரு சிற்றூரில், அண்ணாவிடம் ஒருவர்:

"ஐயா, நீங்கள் ஒருசிலர்தானே வெற்றிபெற்றுச் சட்டசபைக்குப் போகமுடியும், காங்கிரசுக்காரர்கள் பெருவாரியாக வந்து ஆட்சி அமைப்பார்கள். அப்படியிருக்கும் போது நீங்கள் கொஞ்சம்பேர் போய் என்ன செய்ய முடியும்?."

என்று கேட்டார். அந்தக் கேள்விக்கு அண்ணா இப்படி விளக்கமளித்தார்:

சனநாயக ஆட்சியில் எதிர்க்கட்சி என்பது மிக இன்றியமையாத ஒன்று என்று எடுத்துக்கூறி, ஆட்சியாளர்கள் தவறு செய்கிற நேரத்தில் இடித்துக் கூறவும், எடுத்துக் காட்டவும் எதிர்க்கட்சி அளவில், எண்ணிக்கையில் குறைந்திருந்தாலும் ஆளும் கட்சியைத் தடுத்து நிறுத்தவும், தட்டிக் கேட்கவும் வன்மை படைத்ததாக விளங்கும். என்று கூறி அதற்கு ஓர் உவமைச் சான்றும் தந்தார்.

"ஒரு மொந்தைக் கூழ் குடிக்கிறதென்று வைத்துக் கொள்ளுங்கள். அந்த மொந்தைக் கூழும் குடிப்பதற்கு கையில் ஒரே ஒரு பச்சை மிளகாய் இருந்தால் போதும். ஒரு தடவை மிளகாயைக் கடித்து அந்தக் காரம் அடக்கக் கொஞ்சம் கூழ் குடித்து. இப்படியே அந்தக் கூழ் முழுவதையும் குடித்துவிட முடியும். அதைப் போல ஆளும் கட்சியை ஒரு மொந்தைக் கூழ் என்று வைத்துக் கொள்ளுங்கள். எதிர்க்கட்சியை ஒரு பச்சை மிளகாய்

> என்று வைத்துக்கொள்ளுங்கள். எனவே அளவு பற்றிக் கவலைப்படுவதை விட வன்மையைப் பற்றித்தான் நாம் யோசிக்கவேண்டும்.''

என்றார் அண்ணா.

### 3. சாதி பேதம், தீண்டாமை

பண்டைத் தமிழகத்தில் சாதிகள் எனும் ஏற்றத்தாழ்வுகள் இல்லை என்பதை:

> ''பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும், சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமை யான்" எனும் குறள்வழி அறிய இயலுகிறது. ஆரியர்கள் வருகைக்குப் பின்புதான் 'வருணாசிரம' முறைகள் தோன்றின என்பது வரலாறு கூறும் உண்மை. அவர்கள் மேல்சாதியினராகத் தம்மைப் பிறர் மதிக்கும்படியான நிலைமைகளை உண்டாக்கினர். தமிழர்களைச் சூத்திரர்களாக்கி வைத்துக் கீழ்ச் சாதியினராக்கினர். இத்தகைய ஆரிய ஆதிக்க மனப்பான்மை ஆரியரல்லாதாரிடமும் நிலவியது. ஆரியரல்லாத தமிழர், தங்களுக்குள்ளேயும் மேல்சாதி, கீழ்ச்சாதி எனப் பிரித்துப் பேசும் அளவுக்குப் பித்து ஏறியது. சாதிப் பெருமைக்காகக் கொலை செய்யும் அளவுக்குக் கூடத் துணிந்தவர்கள் உண்டு.''

எனத் தமிழ்ச் சமுதாயத்தில் புரையோடிப் போயிருக்கும் சாதிக் கொடுமையைக் குறிப்பிடுகிறார் அண்ணா. மேலும்,

> ''இத்தகைய சமூகக் கேடுகளுக்கு மூலமாக விளங்கும் சாதி ஒழிய வேண்டும். அதற்கு மக்களிடையே அறிவுப் புரட்சியை ஏற்படுத்துவதுதான் சாதிக் கொடுமைகளுக்குச் சரியான தீர்வாகும்.''

என்றார் அண்ணா.

> ''பல கோடி மக்களை, தாய் நாட்டாரை, மூதாதையர் காலம் முதற்கொண்டு நம்முடன் வாழ்ந்து வருபவர்களைத் தீண்ட மாட்டோம் என்று கூறுவது எவ்வளவு வேதனை, எவ்வளவு பொருளற்றது? என்பதைச் சிறிது எண்ணிப் பார்க்க வேண்டும். தீண்டாமையால் இன்ன நலன் விளைந்தது, விளைகிறது, விளையும் என்று கூற முடியாது. அதற்கு மாறாகத் தீண்டாமையால் ஏராளமான கேடுகள் விளைந்திருப்பதைக் காட்ட முடியும்.''

என்று கூறுகிறார் அண்ணா.

சாதிப்பெயரைச் சொல்லிக் கொண்டு சிலர் சமுதாயத்தைச் சீரழித்து வருவதுடன், மக்களின் எண்ணங்களையும் திசை திருப்பி விடுகின்றனர். இதனால் பல இன்னல்கள் தோன்றுகின்றன. சமுதாய உணர்வுடன் சாதிப்பாகுபாடற்று உழைத்தால் சமுதாயம் முன்னேற வாய்ப்புண்டு என்னும் கொள்கையுடையவராக அண்ணா திகழ்ந்தார்.

> ''நாடு விடுதலை அடைந்து விட்ட போதிலும் இன்னும் சமூகம், சாதியிடம் இருந்து விடுதலை அடையவில்லை. தாழ்த்தப்பட்டவர்கள் கோயில்களுக்குச் செல்ல இயலாத நிலை இன்றும் உள்ளது. தேநீர்க் கடைகளில் தாழ்த்தப்பட்டவர்களுக்குத் தனிக் குவளைகள் என்பது எழுதப்படாத சட்டமாக இருக்கிறது. எத்தனை பெரியார் வந்தாலும், எத்தனை காந்தி வந்தாலும் சாதி என்னும் வன்பேயின் தலை நசுங்கவில்லை. சமத்துவ நெருப்பில் சாதி என்னும் காகிதம் சாம்பலாகவும் இல்லை.
>
> விதி என்ற விலங்கு, சாதி என்ற சதி, கடவுள் என்ற மிரட்டல், நரகம் என்ற நம்பிக்கை தாழ்ந்தவனைத் துயரப் படுகுழியில் தள்ளி விட்டன; தத்தளித்தான், தவித்தான், இருட்டுக் குழியிலிருந்து வெளியேற இயலவில்லை. தடவினாலும் தட்டுப்படவில்லை வெளியேறும் பாதை. எனவே கல்வியென்ற ஒளி, கருங்குழியில் விழுந்து கிடப்பவனுக்கு எட்டவில்லை.''

என்று அண்ணா குறிப்பிடுவதன் மூலம் தாழ்ந்த சாதியினரின் இழிநிலையையும், அவர்களால் கல்வி பெற முடியாது இருந்த சூழலையும் உணர முடிகிறது.

> ''பணம், படிப்பு இவைகளின் மூலம் சாதிபேதத்தின் கொடுமையை ஓரளவுக்குக் குறைக்க முடியுமே அன்றி அடியோடு அழிக்க முடிவதில்லை. அரசியலில் சமத்துவம் ஏற்பட்டு விட்டால் மட்டும் சமூகத்திலுள்ள பேதங்கள் போய்விடுவதில்லை. மக்களுக்குள் ஏற்படும் பேதம் பல காரணங்களால் அமைவதால் பேதத்தின் உருவம் பல வகையாகக் காட்சியளிக்கின்றது. சாதியால், மதத்தால், குலத்தால், அரசியல் நிலையால், பொருளாதாரத்தால் பேதம் ஏற்படுகின்றது. இவையனைத்தையும் அகற்றியாக வேண்டும். ஆனால் இந்த நாட்டிலே சாதிதான் மக்களுக்குள் பேதத்தை ஏற்படுத்தும் முதல் சாதனம். இது மக்களின் குருதியிலே கலக்கப்பட்டிருக்கும் கொடிய நஞ்சு. எனவே நாம் பேதமற்ற சமுதாயத்தை, சமத்துவத்தைக் காண வேண்டுமானால், முதலில் சாதி தொலைந்தாக வேண்டும்.''

என்று குறிப்பிட்டுள்ளார்.

சமுதாய அமைப்பில் தொழில்வாரியாக மக்களிடையே பாகுபாடு ஏற்பட்டது. ஆண்டான் அடிமை; மேலார்-கீழோர் என்றவாறு அமைந்த இப்பாகுபாடு சாதி வேறுபாடு, வர்க்க முரண்பாடு போன்றவற்றைத் தோற்றுவித்தது. கல்வியும், செல்வமும் சமுதாயத்தில் உயர்ந்த பிரிவினருக்கே உரியனவாயின. தாழ்த்தப்பட்டோருக்கு அவை மறுக்கப்பட்டன. இந்நிலை மாறவேண்டும் என்று விரும்பிய அண்ணா அதற்கான ஆக்கமுறைத் திட்டங்களைத் தீட்டிச் செயல்படுத்தினார்.

> ''சாதியமைப்புதான் தாழ்த்தப்பட்டோரின் துயர நிலைக்குப் பெரிதும் காரணம் என்பதை உணர்ந்து அந்த இழிநிலையைப் போக்க முயற்சிசெய்தார் அண்ணா. அனைத்துச் சாதியினரும் கலந்து உறவாடிக் களிக்கத்தக்க வகையில் அவ்வப்போது பொது விழாக்கள் கொண்டாடுதல் வேண்டும் என்பது அவரது ஆவல். இது குறித்துப் பேசும்போது, 'ஊரில் உள்ளவர்களும், சேரியில் உள்ளவர்களும் ஒன்றாக உட்கார்ந்து உணவருந்துகிற முறையில் சமபந்தி போசனம் நடத்துவதற்கு வகை செய்தால் நிச்சயமாக அவர்களுடைய மதிப்பு உயரும்.''

என்று சட்டமன்றப் பேரவையில் தெரிவித்துள்ளார்.

மேலும் சாதி பேதங்கள் ஒழிய வேண்டும் என்றால் அவற்றுக்கான தீர்வு கலப்புத் திருமணமே என்பதை வலியுறுத்தினார். அண்ணா கூறும் கலப்பு மணம் வெவ்வேறு சாதியைச் சார்ந்த மணமக்களுக்கிடையே நடைபெறும் திருமணம் அன்று. மணமக்களில் யாரேனும் ஒருவர் தாழ்த்தப்பட்ட சாதியைச் சேர்ந்தவராக இருக்க நடைபெறும் திருமணமாகும். இத்தகைய கலப்புத் திருமணம் புரிந்தோருக்கு, பரிசு வழங்கும் திட்டத்தைத் தம் ஆட்சிக் காலத்தில் கொண்டு வந்தார் அண்ணா.

### 4. உழைப்பாளர்களை உயர்த்தியவர்

தொழிலாளர் வாழ்வில் வளமிருந்தால் நாடும் வளத்துடன் சிறந்து விளங்கும்; உழைப்பவர் வாழ்க்கை இருளடைந்து, இயற்கைச் செல்வம் கவனிப்பாரற்று இருந்தால் நாட்டில் வறுமை நிலவிப் பொருளாதாரம் பாதிக்கப்படும்; சமுதாயம் முன்னேறாது. மாறாகக் கொலை, கொள்ளை, பொய், சூது, கற்பழிப்பு முதலானவை அரங்கேறும். இவற்றைச் சட்டத்தின் மூலமாகவோ, கடுந்தண்டனை வழங்குவதாலோ மாற்றியமைக்க இயலாது. அவரவர் உணர்ந்து செயல் ஆற்றினால்தான் நல்ல ஒரு சமூகத்தை உருவாக்க இயலும். உழைக்கும் இனத்தவர் தம் நிலையைச் சிந்திக்காத வரை இச்சமுதாயச் சீர்கேடுகளைக் களைய முடியாது என்பது அண்ணாவின் கருத்தாகும்.

நாணயத்தின் இருபக்கங்கள் போல் ஒரு பக்கம் உழைப்பு என்றால் மறுபக்கம் உரிமை என்று இருந்தால்தான் அது சீரானதாக இருக்க முடியும் என்பதை அண்ணா வலியுறுத்திக் கூறுகிறார்.

> **உரிமைகள் கேட்கப்படுகின்ற அளவுக்கு**
> **உழைப்பும் வழங்கப்பட வேண்டும்**
> **உழைக்கின்ற அளவுக்கு உரிமைகளும்**
> **தாராளமாக வழங்கப்படுதல் வேண்டும்**

என்று உழைப்பாளிகளின் நிலையையும், அவர்களுடைய உரிமைகளையும் அறிஞர் அண்ணா எடுத்துரைத்துள்ளார்.

உழைப்பாளரின் உழைப்பு சுரண்டப் பெறும் நிலையைச் ''சுரண்டலியந்திரம்' என்றும், அதன் காரணமாக உழைப்பவர் வறியவராகவும், அவ்வுழைப்பில் வாழ்பவர் செல்வந்தராகவும் இருக்கும் நிலையைப் ''பொருளாதார யந்திரக் கோளாறு'' என்றும் அண்ணா சுட்டுகிறார். உழைப்பைக் காட்டி, உரிமைகளைச் சுட்டிக்காட்டி ''உழைப்பை மதிக்காமல் இருப்பது உலகத்துக்கு உதவுவதாக இருக்க முடியாது'' என்றார் அண்ணா.

## 5. உழைப்பாளர்களின் உற்ற தோழர்

ஏழைகள், உழவர்கள், தொழிலாளர்கள் ஆகியோர் நலத்தில் அக்கறை கொண்டவர் அண்ணா. ஆட்சிக்கு வந்ததுமே அவர் தம் கவனத்தை உழவர்களின் பக்கம் திருப்பினார். உணவுப் பற்றாக் குறையை நீக்க வேண்டுமென்பது அவருடைய ஆசை. கிணறு வெட்டுவதற்கும், உரங்கள் வாங்குவதற்கும், பயிர்ச் செலவுகள் செய்வதற்கும் குறைந்த வட்டியில் கடன்கள் வழங்குவதற்கும் ஏற்பாடு செய்தார். உலகப் பயணம் மேற்கொண்ட அண்ணா அமெரிக்கத் தலைநகர் வாஷிங்டன் நகரில் தங்கினார். அங்குக் கூட உழவர்களின் முன்னேற்றம் கருதியே அவரது சிந்தனை இருந்தது. அமெரிக்காவில் அவர் பல வேளாண்மைப் பண்ணைகளுக்குச் சென்று பார்வையிட்டார். புதுமையான வேளாண்மை முறைகளைக் கேட்டறிந்தார். நம் நாட்டு வேளாண்மையில் அம்முறைகளைப் புகுத்துவது எப்படி என்று சிந்தித்துச் செயல்படுத்தினார்.

நெசவுத் தொழிலாளர்கள் உயர்ந்த பட்டாடைகளை உலகிற்கு வழங்கிவிட்டு, மாற்று உடை இல்லாமல் வாழ்க்கைச் சக்கரத்தைச் சுழற்றிக் கொண்டு வருகின்றனர். தொழிலாளர் தங்களின் ஆற்றலை உணர்ந்து செயல்புரிந்தால் சமுதாயம் மேம்பாடு அடையும் என்பதை அண்ணா கூறுகையில்;

> ''பாட்டாளிகளுடைய 'கடமை' சமுதாயத்திற்கு நன்மை
> செய்வதிலே இருக்கிறது. அவர்களுடைய 'கண்ணியம்'

> தங்களுடைய சக்தியைப் பாழ்படுத்திக் கொள்ளாததிலே இருக்கின்றது. அவர்களுடைய 'கட்டுப்பாடு' தங்களுடைய சங்கங்களை உடைப்பதற்கு யார் எந்த மாதிரி முயற்சி எடுத்துக் கொண்டாலும் ஒரு துளியும் இடங்கொடுக்காத தன்மையிலே இருக்கின்றது.''

என்கிறார்.

> ''தொழிலாளர்களுக்கு ஒற்றுமை இல்லையெனில் முதலாளிகள் அவர்களுக்குள் பிரிவை ஏற்படுத்தித் தமது ஆளுகைக்குள் வைத்திருக்க முயல்வர். தொழிலாளர்கள் இதனை உணர்ந்து ஒன்றுபட்டுச் செயல்புரிய வேண்டும்.''

என்கிறார் அண்ணா.

> ''தொழிலாளர்களுக்கும் முதலாளிக்குமிடையே உள்ள உறவுநிலையைத் தொழிலாளர்-முதலாளி என இரு தரத்தாருமே தங்கள் கடமைகளையும் உரிமைகளையும் மதித்துச் செயல்படுகிறபோது மட்டுந்தான் இந்த நிலை பிறக்க முடியும். யாரைக் காட்டிலும் யாரும் உயர்ந்தோரோ தாழ்ந்தாரோ அல்லர் என்கிற பண்பு பேணப்பட வேண்டும். கடமைகளை உணர்த்துவதை விட உரிமைகளை உணர்த்துவதில் எந்த ஒரு நாடு முன்னின்று முனைப்புக் காட்டுகிறதோ அந்த நாடு விரைவில், உள்ள உரிமைகளை இழந்துவிடும் என்பது பொதுநியதி என்னும் கருத்தை எந்த நேரத்திலும் இதயத்தில் ஏற்றி வைத்துப் பேணவேண்டும்.''

என்று அண்ணா தெளிவாக உணர்த்தியுள்ளார்.

அண்ணா மக்களோடு நெருங்கிய தொடர்புடையவர். மக்களுக்குத் துன்பம் நேர்ந்தால் அவற்றை நீக்குவதற்குத் தம்மால் ஆனவற்றைச் செய்தார். ஒருமுறை கைத்தறித் துணிகள் விற்பனை ஆகாமல் நெசவாளர்கள் தவித்தனர். நெசவாளர் துயர்துடைக்க, சிந்தித்து ஒரு தீர்மானம் கொண்டுவந்தார். அதன்படி குறிப்பிட்ட ஒருநாளில் தமிழ்நாட்டில் எல்லா நகரங்களிலும் தெருத்தெருவாகக் கழகத் தலைவர்களும், தோழர்களும் கைத்தறித் துணிகளை விற்றனர். மேலும் திருச்சிராப்பள்ளி நகரத் தெருக்களில் அண்ணாவே கைத்தறித் துணிகளை விற்று, நெசவாளர் கண்ணீர் துடைத்தார்.

ஏழைகளின் சிரிப்பில் இறைவனைக் கண்ட மாமனிதர் அண்ணா. ஒருமுறை திருச்சி, தஞ்சாவூர் மாவட்டங்கள் புயலால் பாதிக்கப்பட்டன. கழகத்தின் மூலமாக நிதி வசூலுக்கு ஏற்பாடு

செய்தார். அந்தத் தொகையைக் கொண்டு கைத்தறித் துணிகளை வாங்கினார். அவற்றை அரசிடம் கொடுத்து, பாதிக்கப்பட்ட ஏழைகளுக்கு வழங்கச் செய்தார். அண்ணா பல நல்ல செயல்களுக்கு நிதி திரட்டிக் கொடுத்திருக்கிறார். கல்லூரிக் கட்டடங்கள் கட்டுவதற்கு நிதி வசூல் செய்தும் தந்திருக்கிறார். தம் கழகத் தொண்டர்களின் வறுமையைப் போக்க நிதியும் வழங்கி இருக்கிறார்.

## 6. மதுவிலக்கு

மாமனிதர் காந்தியடிகளைப் போலவே அண்ணாவும் மது விலக்கை ஆதரித்தார். தமிழ்நாட்டில் அண்ணா முதல் அமைச்சர் பொறுப்பேற்றவுடன் புதிய வருவாய்க்கான வழிகள் காண விழைந்தார். ஒரு செயற்குழுக் கூட்டத்தில், சட்டமன்றப் பேரவை உறுப்பினர் ஒருவர், நாட்டின் வருவாய்ப் பெருக்கத்திற்கு மது விற்பனையை அனுமதிக்கலாம் என்னும் கருத்தினை முன்வைத்தார். அக்கருத்துரையைக் கேட்டு அண்ணா சீற்றம் கொண்டதோடு மட்டுமல்லாமல் ''விழியை இழந்தாலும் மதியை இழந்து மதுவை ஏற்றுக் கொள்ளமாட்டேன்'' எனப் பதிலுரைத்தார். மதுவால் பெறுகின்ற வருமானம் உகந்ததல்ல என்பது அண்ணாவின் எண்ணம். அதன் பொருட்டு மக்கள் 'அண்ணா உண்மையான காந்தியவாதி' என்று புகழ்ந்தனர், 'தென்னாட்டுக் காந்தி' எனவும் போற்றினர்.

## 7. சமுதாய அமைப்பு

அண்ணா தாம் வரைந்த மடல்களில் இந்திய சமூக அமைப்பின் அடித்தளத்தைக் கண்டு ஆய்வுகள் பல நிகழ்த்தித் தம் கருத்துகளை வழங்கியுள்ளார். நாகரிகமடைந்த சமூகத்தின் பண்பு மிகச் சிறந்த இன்பத்தை அனைத்துத் தரப்பு மக்களுக்கும் எவ்வகை வேறுபாடின்றியும் கிடைக்கச் செய்வதாகும். எல்லோருக்கும் கிடைக்கவில்லை, கிடைக்கச் செய்யவும் முடியவில்லை என்றால் காரணம் என்னவாக இருக்கும் எனச் சிந்திக்கலானார். அறியாமையாலும் ஏழைமையாலும்தாம் இந்தச் சமூகம் பின்தங்கிக் கிடக்கிறது என்பதைத் தம்முடைய மடல்களில் வெளிப்படுத்தினார் அண்ணா.

> ''பேதமும் பீடையும், அடிமைத்தனமும் அறிவீனமும், கொடுமையும் பிறவும் நெளியும் இன்றைய நாட்டிலே... வரப்புச் சண்டைக்குத் தலையைச் சீவிக் கொள்ளும் அளவிற்கு உடைமை உணர்ச்சி உள்ள நாட்டிலே... தமிழ்ச் சமுதாயம் ஏமாறும் சமுதாயம்.''

என்றார்.

> ''ஆணவம் கண்டிக்கத்தக்கது; தவிர்க்கப்பட்டாக வேண்டியது - இது பொது இலக்கணம் பாடப் புத்தகங்களில். ஆனால்

சமூக அமைப்பு இன்றுள்ள நிலையில் ஏழையை அடக்கிட, கண்டித்திட, ஆணவம் பிடித்த ஆயிரம் பேர் ஓடோடி வருவார்கள் உருட்டிய விழிகளைக் காட்டியபடி. ஆனால் செல்வத்தாலோ பதவியாலோ உயர்ந்த இடத்தில் அமர்ந்து விட்ட கனவான் ஆணவம் கக்கினால், ஏன் என்று கேட்டிட, எதிர்த்து நின்றிடப் பெரும்பாலானவர்கள் வரமாட்டார்கள். அஞ்சுவர்! ஒதுங்கிக் கொள்வர்! முணுமுணுப்பர்!

அரசியல் பிரச்சினையைத் தாமே நேரடியாக ஆராய்ந்து பார்த்து முடிவு எடுப்பவர்கள் என்று ஒரு பகுதி, மற்றவர் கூறிடும் முடிவினை ஏற்றுக் கொள்பவர்கள் என்று ஒரு பகுதி என்கிற முறையில்தான் சமூகம் இருக்கிறது.

இன்றைய சமுதாயம் வழுக்கு நிலம் போன்றது. வழுக்கு நிலத்திலே ஒருவன் எத்துணைக் காலம் விழிப்போடு நடக்க முடியும். கனத்த காற்றடித்தால் அவன் வழுக்கி விழுவது திண்ணம். ஆகவே அவன் வழுக்கு நிலத்தைச் செம்மைப்படுத்துவதுதான் சரியான மார்க்கம்.''

அண்ணாவின் இத்தகைய கருத்துகள் மக்களின் அறியாமையும் அதனால் விளைந்த தீமைகளும்தாம் சமூகத்தைச் சீரழித்து வருகின்றன என்பதை உணர்த்துகின்றன. இந்த அறியாமைக்கு மூலமாக இருப்பது மக்களின் மூடநம்பிக்கை என்பதை அண்ணா கண்டு கொண்டார்.

“எழுத்தறிவின்மைதான் மக்கள் மத்தியில் மூடநம்பிக்கைகள் பரவுவதற்குக் காரணமாகும். எழுத்தறிவு பெற்றவர்களும் கூட மூடநம்பிக்கைகளின் மொத்த உருவமாக நடமாடுவதை இன்றும் காண இயலும். இறைவன் பெயரால் சடங்குகளும், சாதியின் பெயரால் உயர்வு தாழ்வுகளும் தோன்றி, மக்களின் அறிவை அடிமைப் படுத்தி, பண்பாட்டை அழித்து ஆதிக்கம் செலுத்தி வரும் ஆரியத்தின் விளைவுகள்தாம் பெரும்பான்மையான மூடநம்பிக்கைச் செயல்கள்.''

என அண்ணா குறிப்பிடுகிறார்.

''அனுப்பிய மணியார்டர் போய்ச் சேர்ந்ததாகக் கடிதம் வருவதற்குள் துடிக்கிறார்கள், சேர்ந்ததா, இல்லையா என்று. அதே மக்கள் சென்று விட்ட பெரியவர்களுக்குத் ‘திவசம்' செய்வதன் மூலம் பண்டம் அனுப்பி வைப்பதாக நம்புகிறார்களே!''

என வேதனைப்படுகிறார் அண்ணா. வளர்ந்து வரும் ஒரு சமூக முன்னேற்றத்தின் பெருந்தடைக்கல்லாக இருப்பது இத்தகைய மூடநம்பிக்கைகள்தாம். இவை ஒழிந்தால்தான் சமூகம் மேம்படும் என்பதைக் கண்ட அண்ணா, அவர்தம் வாழ்நாள் முழுவதும் மூடநம்பிக்கை ஒழிப்புப் பணியில் ஈடுபட்டார்.

## 8. பிற சமூகச் சிந்தனைகள்

சமுதாய அமைப்புப் பற்றி அண்ணா குறிப்பிடுகையில்,

> "தனிமனித உரிமைகளும், சமுதாய நலன்களும் முரண்படாத வகையில் தனிமனிதனுக்கும், சமுதாயத்துக்கு மிடையில் சுமுகமான உறவுகள் இருத்தல் வேண்டும். வளையங்களால் ஆன சங்கிலி போன்று தனிமனிதர்களின் கூட்டுறவால் அமைவதே சமுதாயம். வளையங்கள் பலவீனப்பட்டால் சங்கிலி அறுந்துவிடும். அவ்வாறே சமூகத்தில் அதன் அங்கமான தனிமனிதன் முக்கியத்துவம் பெறுகிறான். எனவே தனிமனிதனுடைய நலனும், மேம்பாடும், ஒத்துழைப்பும் சமுதாயத்திற்குத் தேவையாகின்றன.''

என்பது அண்ணாவின் கருத்து. சமுதாயம் பற்றிய அண்ணாவின் சிந்தனைகள்:

- மாடமாளிகை, கூட கோபுரங்களில் மட்டுமே மன்னர்கள் பிறந்த காலம் மலையேறி விட்டது. பட்டி தொட்டிகள் அனைத்தும் இந்நாட்டு மன்னர்களின் பிறப்பிடமாய்த் திகழ்ந்திடும் நேரமிது.
- பாட்டாளிகளுடைய 'கடமை' சமுதாயத்திற்கு நன்மை செய்வதிலே இருக்கிறது. 'கண்ணியம்' தங்களுடைய சக்தியைப் பாழ்படுத்திக் கொள்ளாததிலே இருக்கிறது. 'கட்டுப்பாடு' ஒற்றுமையை உடைப்பதற்கு ஒரு துளியும் இடம்கொடுக்காத தன்மையிலே இருக்கிறது.
- நம்முடைய விடுதலைப் போராட்டம் இன்னும் முற்றுப் பெறவில்லை. எல்லோரும் ஓர் குலம், எல்லோரும் ஓர் நிறை, எல்லோரும் இந்நாட்டு மன்னர் என்னும் நிலையை ஏற்படுத்த வேண்டும்.
- சிந்திக்கத் தொடங்கிய முதல் சிந்தனையாளன், தன்னலமுள்ளவனாகத் தன்னைப் பற்றிய எண்ணத்தை மட்டுமே கொண்டவனாக இருந்து விட்டிருந்தால் இன்றைய நாகரிக உலகம் ஏற்பட்டிருக்க முடியாது.
- தானும் வாழ்ந்து மற்றவர்களையும் வாழவைப்பதுதான் வாழ்க்கை. ஆனால் இன்று பத்துப் பேர் கெட்டால்தான் தன் வாழ்க்கை செம்மை பெறும் என்னும் எண்ணத்தின்வழிதான் சமூக அமைப்பும் இருக்கிறது; பொருளாதார நிலையும் இருக்கிறது.

- மனம் விசாலமானதாகவும், நுழைவு வாயில் தாராளமாகவும் இல்லாத காரணத்தால் கொள்கை உள்ளே நுழையவும், வெளியேறவும் நெருக்கடியாக உள்ளது. மனமும் வாயிலும் விசாலமானதாக இருக்க வேண்டும்.
- ஒழுக்கம், பொது நீதி. ஆனால் இடத்துக்கு இடம், ஆளுக்கு ஆள் மாறுபடுகின்றது. பெண்ணுக்கு ஓர் ஒழுக்கம் சொல்கிறோம்; ஆண் அதைக் கடைப்பிடிப்பதில்லை. ஏழைக்கு ஓர் ஒழுக்கம் சொல்கிறோம்; பணக்காரன் அதைக் கடைப்பிடிப்பதில்லை.
- சாகாமலே உயிரற்றவர்களாகி விட்டவர்களும் உண்டு! செத்து உயிரோட்டம் தருபவர்களும் உண்டு!
- பேதங்கள் உருவத்தில் இல்லை. உள்ளத்தில் உண்டு. மனபேதம் உருவ பேதத்தை விடக் கொடியது.
- ஒருவன் திறமைசாலியாக, அபூர்வ ஆராய்ச்சியாளனாக இருக்கலாம். ஆனால் அவன் வெற்றி பெறத் தக்க சமயத்தில் கைகொடுத்து உதவ வேண்டும். இல்லையேல் அவன் திறமை காட்டுமலர் ஆகும்; மீட்டுவாரற்ற வீணையாகும்.
- மக்களின் ஒழுக்கம்தான் ஓர் அரசின் அச்சாணி போன்றது. ஒழுக்கம் நிறைந்த மக்களைச் சமதர்ம அரசால் மட்டுமே உருவாக்க முடியும்.

## 2.1 கல்விச் சிந்தனைகள்

மனிதனது அனைத்துச் செல்வங்களிலும் மாபெரும் செல்வம் அறிவுச் செல்வம். 'அறிவுடையார் எல்லாம் உடையார்' என்பது வள்ளுவரின் உலகப் பொதுமறை. அறிவு வளர்ச்சிதான் ஒரு சமுதாயத்தின் சக்தி, நாட்டின் வலிமை. கல்வி வளர்ச்சி என்று அடிப்படை இல்லாமல் எந்த நாடும், எந்தச் சமுதாயமும் வளர முடியாது. 'சாலைகள் வைப்பதில், அன்ன சத்திரங்கள் அமைப்பதில், குளங்கள் வெட்டுவதில், கோவில்கள் கட்டுவதில் கிடைக்கும் புண்ணியங்களை விட ஆயிரம் பங்கு அதிகமான புண்ணியம் ஓர் ஏழைக்கு எழுத்தறிவு தருவதால் கிடைக்கும்' என்று சுப்பிரமணிய பாரதி கூறினான்.

'அறிவு' என்பது ஓர் ஆயுதம் என்றார் திருவள்ளுவர். 'கல்லாதவன் வாழும் வீடு வெளிச்சமில்லா இருண்ட வீடு' என்று கூறினார் பாரதிதாசன். 'எழுத்தறிவின்மை என்பது ஒரு குற்றம், பாவம். அதை நாட்டை விட்டு அகற்றிட வேண்டும்' என்றார் அண்ணல் காந்தியடிகள். மக்களின் கல்வி, மதிக்கூர்மை ஆகியவற்றைப் பொறுத்தே ஒரு நாட்டின் முன்னேற்றம் அமையும் என்றார் சுவாமி விவேகானந்தர். மனித உரிமைகளில் முதன்மையானது கல்வி பெறும் உரிமை. கல்வி ஒன்றினால்தான் மனித உரிமையைக் காக்க முடியும்.

மனித குலத்தின் முன்னேற்றத்திற்குப் பெரும் தடைக்கல்லாக உள்ள எழுத்தறிவின்மையைப் போக்கி, கல்வியறிவைப் புகுத்த வேண்டும் என்னும் நோக்கத்தில் 1967ஆம் ஆண்டு முதல் ஒவ்வோர் ஆண்டும் செப்டம்பர் 8ஆம் நாள் 'உலக எழுத்தறிவு நாள்' ஆகக் கொண்டாடப்பட்டு வருகிறது. எழுத்தறிவுதான் அடித்தள மக்களுக்கு நலன்களைப் பெறக்கூடிய மாற்றங்களை வழங்க முடியும். நாட்டில் நிலவும் பல்வேறு விதமான சமூகப் பொருளாதாரப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணக் கல்வி ஒன்றினால்தான் முடியும்.

கல்வியின் முதல்படி எழுத்தறிவு. வாழ்க்கையைப் பயனுள்ளதாக ஆக்க எழுத்தறிவு மிகவும் தேவை. எழுத்தறிவில்லாதவர்கள் முழு வாழ்க்கை வாழ்வதாகக் கருத முடியாது. அவர்களுக்குக் கல்வியறிவு இருந்திருக்குமேயானால் அவர்களால் இன்னும் சிறப்பாக, இன்னும் மகிழ்ச்சியாக வாழ முடியும்.

இத்தகு சிறப்புகள் வாய்ந்த கல்வியைப் பாமரர்கள் பெற்றுச் சமுதாயத்தில் உயர்வு பெற வேண்டும் என்பது அண்ணாவின் ஆசை. இந்தியாவின் எழுத்தறிவற்ற இழிநிலையைப் பற்றிப் பேரறிஞர் அண்ணா பேசுகையில்,

> ''உலகின் பார்வை நமது நாட்டின் பக்கம் நன்றாகத் திரும்பும்படியான முறையில் நாம் நம் நாட்டின் பேராற்றல் பற்றிப் பாட்டு மொழியில் பேசிவிட்டோம், சற்று மிகையாகவே.''

> "என்நாடு பொன் நாடு
> ஏது இதற்கோர் ஈடு."

என்று திருப்புகழ் பாடினோம்.

> "வானை முத்தமிடும் வளமான மலைகள்
> வற்றாத ஆறுகள்
> வளம் பெருகும் ஏரிகள்
> செந்நெற் கழனிகள்
> செங்கரும்புத் தோட்டங்கள்
> கனி குலுங்கும் சோலைகள் ஏராளம்."

> "முத்துகள் உண்டு எமது கடலில்;
> தங்கம் உண்டு எமது பூமியில்."

எல்லாம் சரி! உமது நாட்டுக் கல்வி நிலையைக் கூறு? என்று கேட்டால் நாம் வெட்கித் தலைகுனியும் நிலையில் இருக்கின்றோம்.

> கூரியவாள், பலமான கேடயம்; அஞ்சா நெஞ்சு;
> ஆனால் அந்த வீரனின் விழி பழுது.''

இந்நிலை நாட்டுக்குச் சிறப்பும் அளிக்காது; நல்லாட்சிக்கு வழியும் வகுக்காது.

''மலை கண்டு நதி கண்டு மாரி கண்டு அல்ல ஒரு நாட்டை உலகம் மதிப்பது. அந்த நாட்டு மக்களின் மனவளமாகிய கல்வி வளத்தைக் கண்டே உலகம் மதிக்கும். நம் நாட்டிலோ எழுத்தறிவற்றவர் ஏராளம். இது பெருங்கேடு!.''

இவ்வாறு கல்வியாகிய மனவளமே ஒரு நாட்டின் மாபெரும் மூலதனம் என்பதனைப் பாமரர்க்கும் புரியும் வகையில் ஆணித்தரமாக எடுத்துரைக்கிறார் அண்ணா.

**1. கல்வி முறைகளில் மாற்றம்**

- பள்ளிகளில் பெருந்தலைவர் காமராசர் அவர்களால் அறிமுகப் படுத்தப்பட்ட சத்துணவுத் திட்டத்தை அண்ணா மேலும் விரிவுபடுத்தினார்.
- ஊராட்சி ஒன்றியங்களில் உணவு சமைக்கப்பட்டு, அங்கிருந்து ஊராட்சிப் பள்ளியில் பயிலும் மாணவர்களுக்கு உணவு வண்டிகள் மூலம் கொண்டு செல்லும் முறையை நடைமுறைப் படுத்தினார்.
- இருமொழித் திட்டத்தின் மூலம் பணியிழந்த இந்தி ஆசிரியர்களுக்கு அதே பள்ளியில் வேறு பணிகளை அளித்து ஊதியம் குறையாமல் பார்த்துக் கொண்டார்.
- ஏழை மக்களின் கல்வித் தரத்தை உயர்த்துவதற்காக அவர்களுக்குக் கல்வி உதவித் தொகையும், புத்தகங்களும், சீருடைகளும் அளிக்க வழி செய்தார்.
- பார்வையற்ற மாணவர்களுக்காகப் 'பிரெயில்' முறையில் புத்தகங்களை உருவாக்க, தனியாக அச்சகம் ஒன்றை ஏற்படுத்தினார்.
- கல்லூரிகளில் இலவசக் கல்வி முறையைக் கொண்டு வந்தார். 'எங்கும் தமிழ் எதிலும் தமிழ்' என்பதனை நடைமுறைப் படுத்துவதற்காகக் கல்லூரிகளில் தமிழ்வழிக் கல்வியைக் கொண்டு வந்தார்.
- தாய்மொழிக் கல்விதான் ஒரு மாணவன் முழுமையாகக் கல்வி பெற வழி வகுக்கும் என அண்ணா உறுதியான நம்பிக்கையைக் கொண்டிருந்தார்.
- தனியார் பள்ளிகளிலும், ஊராட்சி ஒன்றியப் பள்ளிகளிலும் பணிபுரிந்து ஓய்வுபெறும் ஆசிரியர்களுக்கு ஓய்வூதியம் வழங்க ஏற்பாடு செய்தார்.

அவர் உருவாக்கிய, ஏற்படுத்திய திட்டங்கள் யாவும் மக்களின் நலன் ஒன்றையே கருத்தில் கொண்டு செயல் ஆக்கம்பெற்றன.

## 2. உலக அறிவு

உலக அறிவையும், பொது அறிவையும் மிகுதியாகக் கொடுக்கக் கூடிய வகையில் பாடத்திட்டங்கள் மாற்றப்பட வேண்டும் என விரும்பினார். பழைய பாடத்திட்ட முறையில் இருக்கக்கூடிய குறைகளை அண்ணா இப்படிச் சுட்டிக் காட்டுகிறார்:

''இப்போது ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் பழைய முறைப்படியே கற்றுக் கொடுத்து வருகிறோம். பாடங்களைக் கூட மகாபாரதக் கதையில் இருந்து 'கண்ணன் வெண்ணெய் திருடிய கதை'யை, ஒருவர் முதுகின் மேல் ஒருவராக நான்கு பேர்கள் நிற்பதையும், அவர்கள் மேல் கண்ணனை நிறுத்தி, உரியின்மேல் வெண்ணெய்த் தாழி; அந்தத் தாழியில் இருக்கிற வெண்ணெய்யைக் கண்ணன் எடுத்துத் தின்பது போல் படத்தைப் போட்டு அதன் கீழே 'கண்ணன் தின்னும் பண்டம் என்ன, 'வெண்ணெய்' என்றுதான் காட்டியிருப்பார்கள்.''

எனச் சாடுகிறார்.

''புராணம் கூடாது என்று நான் பேசுவதாக யாரும் நினைக்க வேண்டாம். இந்தப் பாடம் சின்ன வயதிலே மாணவர்களுக்கு எதைக் கற்றுக் கொடுக்கிறது? பள்ளிக் கூடத்திற்குப் பக்கத்துத் தோட்டத்திலே மாங்காய் இருக்குமானால் அதைப் பறிப்பதற்கு ஏமாளியாகிய பையன்களைக் குனிய வைத்து, அவர்கள் மீது ஏறி நின்று கொண்டு, மாங்காய் பறிப்பதற்குத்தான் நாம் கற்றுக் கொடுக்கிறோம். அப்படிப்பட்ட பாடத் திட்டங்கள் திருத்தியமைக்கின்ற செயலில் இது பகுத்தறிவா? சுயமரியாதையா? என்று பார்க்காமல் உலக அறிவு என்கிற வகையில் கவனம் செலுத்தினால் நல்ல பயன் அதிகமாகக் கிடைக்கும்.''

என்கிறார் அண்ணா.

## 3. அறிவுக் கோட்டங்கள் பெருக வழி

''பள்ளிக்கூடங்கள், மருத்துவமனைகள் போன்றவை களுக்குத்தான் மக்களின் உதவியை அரசு நாடுகிறது. காவல் நிலையங்கள் அமைக்க அரசு மக்களிடம் நிதி கேட்காது. கல்வி மேம்பாட்டிற்காகச் செலவு செய்வது வீண் போகாது. உலகத்தில் மற்றைய நாடுகளில் 100க்கு 80 பேர் படித்தவர்கள் என்று சொல்லும்போது, நம்நாட்டில் 100க்கு 60 பேர் படிக்காதவர்கள் (அப்போதைய நிலை) என்கிற கணக்கைக் காணும்போது வருத்தம்தான்

ஏற்படுகிறது. நம் நாட்டிலும் 100க்கு 80 பேர் படித்தவர்கள் என்னும் நிலை வரவேண்டும். நாட்டில் அறிவுக் கோட்டங்கள் அதிகமாகப் பெருக வேண்டும். வசதிபடைத்தவர்கள் நல்ல செயல்களுக்கு ஏராளமாக நிதி உதவி செய்ய வேண்டும்.''

என்று வேண்டுகோள் விடுக்கிறார் அண்ணா.

''ஊர் மக்களின் பொருளுதவியால் உருவான பள்ளிக் கூடத்தை அந்தப் பள்ளிக்கூடத்திற்கு நிதி வழங்கியவர் ஒருமுறை உற்றுப் பார்க்கும்போது நான் கொடுத்த பணம் இந்தப் பள்ளிக்கூடத்தில் செங்கற்களாக, மேசையாக, நாற்காலியாக இருக்கிறது என்று எண்ணும்போது அவர் மனத்திலே தனி மகிழ்ச்சி ஏற்படத்தான் செய்யும். எனவே, எனக்கு மாலை போடவேண்டிய முறைக்காக ஒரு மாலை போட்டால் போதும். மற்றவைகளை எல்லாம் பணமாகத் தந்தால் 'அந்தப் பள்ளிக்கூடத்திற்கு நாற்காலிக்காக ஐந்து ரூபாய், இந்தப் பள்ளிக்கூடத்திற்கு மேசைக்காகப் பத்து ரூபாய் முதல் மந்திரியிடம் வழங்குகிறேன்' என்று கூறி வழங்குவார்களேயானால், அது மக்களுக்கும் பெருமை தரும்; எனக்கும் மகிழ்ச்சியைத் தரும்.

எத்தனையோ பள்ளிக்கூடங்களில் உடைந்த நாற்காலியும் மேசையும் இருக்கக் காண்கிறோம். இவற்றையெல்லாம் ஊரில் வசதி படைத்தவர்களின் மூலம் சரி செய்துகொள்ள வேண்டும். அரசு செய்யாதா என்றால் செய்யும். ஆனால் கால தாமதமாகும். நாற்காலி வேண்டும் என்று ஆசிரியர், அதிகாரிக்கு எழுதி, அதிகாரி மேலதிகாரிக்கு எழுதி இப்படி மேலே மேலே சென்று அமைச்சர்களின் பார்வைக்கு வருவதற்குள் மந்திரி சபையே மாறிவிடும்.''

என்று வேடிக்கையாகக் கூறினாலும் சிந்தனைக்குரிய செய்திகளை முன்வைக்கிறார் அண்ணா. மேலும்,

''கல்வியின் தரம் உயர ஆசிரியர்கள் மதிப்போடும், நட்புணர்வோடும் நடத்தப்பட வேண்டும். ஆசிரியர்கள் மதிக்கப்பட்டால்தான் கல்வியின் தரம் உயரும்.''

என்பது அண்ணாவின் கருத்து.

### 4. மாணவரின் வாழ்வியல் நெறிமுறைகள்

''மாணவர்கள் வாழ்க்கைப் பயணத்தில் ஈடுபடும்போது அவர்களுக்குப் போதுமான அடிப்படைக் கருத்துக்களில் தெளிவு இருக்க வேண்டும். வாழ்க்கையினை

மேம்படுத்துவதற்கான சிந்தனைகளை, கருத்துகளை மாணவப்பருவத்தில் சேகரித்துக் கொள்ள வேண்டும். போர்க்களத்திற்குச் செல்லும் போர்வீரன் தனக்குத் தேவையான பயிற்சியையும், ஆயுதங்களையும் முதலில் பெற்றுக் கொள்ள வேண்டும். அதற்குப் பிறகு தனது தானைத் தலைவனை நோக்கி, ''எந்தக் களம் எனக்கு, எந்தக் கோட்டையை நான் பிடிக்கவேண்டும், எந்தப் போர்முறையை நான் கையாள வேண்டும்?'' என்று கேட்க வேண்டும். அதுபோல் வாழ்க்கைக் களத்தில் இறங்குவதற்கு முன்பு பயிற்சியும், பக்குவமும், அடிப்படைக் கொள்கையில் தெளிவும் பெற வேண்டிய பருவம் மாணவப் பருவம்.

சமுதாயத்தில் சிலர் சுய விளம்பரத்திற்காக மறைவாகப் பேசியும், செயல்பட்டும் வருகின்றனர். பாமர மக்கள் உண்மை நிலையை அறிய முடியாமல் ஏமாற்றப் படுகின்றனர். சமுதாயத்தில் தீயசக்திகளை அடையாளங் காட்ட மாணவர்கள் முன்வரவேண்டும்.''

என்று அண்ணா அழைப்பு விடுக்கிறார்.

மாணவர்களுக்கு இருக்க வேண்டிய பண்பு நலம் குறித்து அண்ணா குறிப்பிடுகையில்,

- கருத்துத் தெளிவும், தன்னுரிமையும், செயல்திறனும் மிக்கோராய் வாழ்ந்திடும் உள்ளப்பாங்கும், உறுதியும் மாணவர்களிடத்தில் அமைந்திட வேண்டும்.
- சமரச நோக்கம், பரந்த மனப்பான்மை, சத்துள்ளது எது, சாரமற்றது எது, என்பதைப் பகுத்துணரும் போக்கு.
- எந்தப் பிரச்சினையையும் அச்சம், தயை, தாட்சண்ணியம், விருப்பு, வெறுப்பற்ற நிலையில் நோக்கிடும் நெஞ்சு வலிமை.
- மற்றவர்களது கருத்தையும் கண்ணோட்டத்தையும் உணர்ந்து மதித்து நடத்திடும் சகிப்புத்தன்மை.
- நன்னெறியுடன் கூடிய சான்றாண்மை.

போன்ற மனித வாழ்வின் அடிப்படைத் தத்துவங்களான இவையனைத்தும் மிக மிக கட்டாயத் தேவை எனச் சுட்டிக் காட்டுகிறார் அண்ணா.

குழந்தைகள்பால் மிகுந்த அன்பும் பாசமும் கொண்டவர் அண்ணா. அவர் ஒரு முறை மாணவர்களிடம் பேசும்போது-

''மாணவர்களே! உங்களிடம் அனைவராலும் கைவிடப்பட்ட மிகுந்த நோயாளியை ஒப்படைக்கிறேன். நீங்கள் மனிதனை மனிதனாக்கப் பாடுபட வேண்டும்.

> மூடப்பழக்க வழக்கமுள்ள மனிதர்களைத் திருத்த மருத்துவப் பட்டம் பெற்ற மருத்துவர்களால் முடியாது. உங்களால்தான் முடியும். உரிமைப் போர்ப்படையின் ஈட்டிமுனைகளான நீங்கள் எல்லோரும் சேர்ந்து அறிவு மழை பொழிய வேண்டும். அறிவின் தூதுவர்களாகச் செல்ல வெண்டும். நாட்டின் உயிர் நரம்புகள் நீங்கள்.''

என்று அவர்கள்பால் கொண்ட நம்பிக்கையையும், ஈடுபாட்டையும் வெளிப்படுத்துகிறார்.

### 5. தாய்மொழிப் பற்று

சமுதாயத்தில் மாணவர் முதற்கொண்டு அனைவர்க்கும் மொழிப் பற்று மிக இன்றியமையாயது. மொழிவளம் குன்றினால் நாட்டில் குழப்பங்கள், சிக்கல்கள் நிகழக்கூடும். மாணவர்கள் பேச்சளவில், எழுத்தளவில், மொழிப்பற்றுடன் இருந்தால் மட்டும் போதாது, வாழ்க்கையில் கடைப்பிடித்துச் செயல் ஆற்றினால்தான் மற்றவரும் அதனைப் பின்பற்றி நடக்க ஏதுவாகும் என்கிறார் அண்ணா. அண்ணா தமது தாய்மொழியாகிய தமிழன் சிறப்பைச் சுட்டுமிடத்து,

> '' 'தாய்மொழி' என்னும் தகுதிக்கு ஈடாக வேறு எந்தத் தகுதியையும் ஒரு மொழி பெற்றிடத் தேவையில்லை. ஆயினும் நமது தாய்மொழி என்பதால் மட்டுமன்று, வலிமைமிக்கது என்பதாலும் எவரும் வியந்து பாராட்டத் தக்கதாகிறது. அந்த வளம் கெடாமலும் மேலும் மதிப்புமிகு செயல்களைச் செம்மையாக்கித் தருவது உமது கடமையாகும். தமிழ் ஆட்சிமொழியாக எல்லாத் துறைகளிலும் திகழ்வதற்கான சூழ்நிலையை உருவாக்குவதில் வெற்றி பெற்றிட உமது நல்லார்வம் நிரம்பத் தேவை.''

என்று தாய்மொழி உயர்வுக்கு மாணவர் ஆற்ற வேண்டிய கடமையை நயம்படக் கூறியுள்ளார் அண்ணா.

### 6. மாணவர்களின் கல்வித்தரம்

மாணவர்கள் கல்வித் தரத்தில் எவ்வாறு சிறப்புற்று விளங்குகின்றனர் என்பதை அண்ணா குறிப்பிடுகையில்,

> ''என்னைப் பொறுத்தவரையில், நான் மாணவனாக இருந்தபோது பொது அறிவைக் கற்றுக் கொள்வதற்கு இருந்த வாய்ப்புகளைவிட, இன்றிருக்கிற மாணவர்களுக்குப் பொது அறிவைக் கற்றுக் கொடுக்கிற வாய்ப்புகள் அதிகம். பொது அறிவைப் பொறுத்தவரையில் மாணவர்களின் தரம் உயர்ந்தே இருக்கிறது என்று கருதுகிறேனேயொழிய தரம் குறைந்து இருப்பதாக நான் கருதவில்லை.''

என்கிறார்.

'கல்வியின் தரமும், மாணவர்களின் தரமும் வெகுவாகக் குறைந்து விட்டது' என்று பலர் சொல்லக் கேட்டிருப்போம். தரம் குறைந்து வருகிறது என்று சொல்லும் போது, நாம் எதைத் 'தரம்' எனச் சொல்கிறோம் என்கிற கேள்வி எழும். பேரறிஞர் அண்ணா அதற்கு விளக்கம் கொடுக்கிறார்கள்:

''ஆங்கிலத்திலே ஒருவிதக் குறையும் இல்லாமல் எழுதினால் நல்ல தரம் எனச் சொல்லுவார்கள். பேசுகின்ற போது சரளமாகப் பேசினால் நல்ல தரமென்று சிலர் சொல்வதுண்டு. ஆசிரியர் பாடம் நடத்தும்போது எழுகின்ற சந்தேகங்களைக் குறுக்கே எழுந்து கேள்வி கேட்காமல் இருந்தால் அதுவும் ஒரு தரம் என்று கருதப்பட்டிருக் கின்றது. என்னைப் பொறுத்தவரையில் முந்தைய தலைமுறையைச் சேர்ந்த மாணவர்களைவிட இந்தத் தலைமுறையில் இருக்கிற மாணவர்கள் உலகத்துப் பொது அறிவையெல்லாம் பெற்றுக் கொண்டு, உரிமையுணர்ச்சி யுடனும், கடமை உணர்ச்சியுடனும் என்னென்ன நல்ல காரியங்களையெல்லாம் செய்யலாம் என்ற முற்போக்கு உணர்ச்சியுடன் தரமாகவே இருக்கிறார்கள்.

இப்போது எந்தக் கல்லூரிக்கு வேண்டுமானாலும் போய்ப் பாருங்கள். எவ்வளவு தரமான தமிழில் பேசுகிறார்கள். எவ்வளவு தரமான தமிழ் நூல்களை எல்லாம் படிக்கிறார்கள். எங்கள் காலத்தில் மாணவர்களுக்குத் தெரியாத சங்க இலக்கியங்களை எல்லாம் தற்போது ஐயம் திரிபறத் தெரிந்து கொண்டிருக்கிறார்கள் என்பதை உணர்வீர்கள். அப்படித் தரம் உயர்ந்து இருக்கிறது. மாணவர்கள் பேரில் நமக்குள்ள ஏதோ கோபத்தில் தரம் குறைந்து விட்டது, தரம் குறைந்து விட்டது என்று எண்ணிக் கொண்டிருக்கிறோமே தவிர, அந்தத் தரம் குறைந்து இருப்பதாக நான் கருதவில்லை.''

என்கிறார். மேலும் கூறுகையில்,

''ஆசிரியர்களின் வாழ்க்கை நல்ல விதத்தில் செப்பனிடப் படுமானால் அவர்களுக்கு ஊதியம்; ஆங்காங்கே குடியிருக்க வீட்டு வசதிகள்; ஆகியவற்றைச் செய்து விட்டோமானால், கல்வியின் தரம் இன்று இருப்பதைவிட மிக நல்ல முறையில் வளரும். பொதுவாகக் கல்வியின் தரம் நல்லபடியாக இன்று உயர்ந்து இருப்பதற்குக் காரணம் மாறிவரும் சூழ்நிலைகள்தான். என்னை எடுத்துக் கொண்டால் 'வானொலி' என்னும் கருவியையோ,

'வானொலி' என்னும் வார்த்தையையோ இருபத்தைந்து அல்லது முப்பதாவது வயதில் காதில் கூடக் கேட்டதில்லை. காரணம் அப்போது இந்தக் கருவிகள் இல்லை. இப்போது 'தொலைக்காட்சி' பற்றிப் பேசப் படுகிறது. இந்த அளவுக்கு மாணவர்களிடையே பொது அறிவு வளர்ந்து இருக்கிறது. மறந்தும் கூடக் குறைத்து மதிப்பிடக்கூடாது. இப்படிச் சொல்வதனால் கல்வியின் தரத்தை உயர்த்தக் கூடாது என்று நான் சொல்வதாக நினைக்காதீர்கள்.''

என்றும் எச்சரிக்கையாகக் குறிப்பிட்டுச் சொல்கிறார் அண்ணா.

## 7. மாணவர்களிடையே பேரறிஞர் அண்ணா

மாணவர்தம் எதிர்காலம் ஏற்றம் பெற வேண்டும் என எண்ணியவர் பேரறிஞர் அண்ணா. அதற்கான வழிமுறைகளைப் பேச்சிலும் எழுத்திலும் எடுத்து விளக்கியவர் அவர். அண்ணா 1951ஆம் ஆண்டு சென்னை, தியாகராயர் கல்லூரி மாணவரிடையே ஆற்றிய சொற்பொழிவின் சிறுபகுதி இதோ:

''இவ்வுலகிலே தானே முயன்று இன்ப நல்வாழ்க்கையைத் தேடிக்கொள்வது தான் 'லோகாயுதம்'. இல்லாத இறைவனை நோக்கித் தவஞ்செய்து மறு உலகத்திலே நன்மைகளைத் தேடுவது தான் 'ஆத்மார்த்தம்'. ஆனால் சில போலிப் பக்தர்கள் லோகாயுதம் வெறுத்து ஒதுக்கக் கூடியதைப் போலவும் ஆத்மார்த்தம் ஒன்றே விரும்பக் கூடியதைப் போலவும் பேசி நடித்து வருகின்றனர். காஞ்சி கோயில்களிலே முப்பது நூறாயிரம் ரூபாய்கள் (3,00,000) பெறுமான பொன், வைரம், நவரத்தினங்கள் இவற்றாலான நகைகள் இருக்கின்றன.

இதைப்போன்று நவரத்தினங்களாலான 'சிலுவையைக்' காட்டுங்கள்! 'பொன்னாலான' இயேசுநாதரை எங்கும் பார்க்க முடியாது. கிறித்தவர்கள் கையில் வைரம் கிடைத்தால் அது 'இலயோலா கல்லூரியாக' இருக்கும்; மருத்துவமனையாக ஒளிரும். நல்வாழ்வுக் கூடங்களாக மலரும். விலைமதிப்புள்ள பொன்னும் மணிகளும் இந்துக்களிடம்; மூடச் செயலால் முடக்கப்படுகின்றன. மக்களுக்குப் பயன்படாத வகையில் ஆண்டவனின் நகைகளாக, ஆடம்பர ஊர்திகளாக மாறுகின்றன. ஆனால் கிறித்தவர்களிடையே அதே மணிகளும் வைரங்களும் கிடைத்தால் அறிவை வளர்க்கும் கல்லூரிகளாக, நலம் தரும் மருத்துவமனைகளாக மாற்றம் பெற்றுச் சமுதாய உயர்விற்கு வழிவகுக்கின்றன.''

என மாணவரிடையே சமுதாயச் சீர்திருத்தக் கருத்துகளைப் பரப்பினார் அண்ணா.

### 8. மாணவரும் சமுதாயமும்

மனித வாழ்க்கைக்குக் கல்வி இன்றியமையாதது. சமுதாயத்திற்கு ஒளி கொடுக்கும் விளக்காகக் கல்வி விளங்குகிறது. சமுதாயத்தில் நிலவும் ஏற்றத் தாழ்வுகளை அகற்றி, முன்னேற்றத்திற்கு வழிகாண, கல்வி கட்டாயம் தேவை. அத்தகு கல்வியைக் கற்றுத் தெளிவுடன் விளங்கும் மாணவர்கள், செயல்பாட்டில் துடிப்பு மிக்கவராக விளங்குவர். எனவே, மாணவர் சமுதாயத்தை அறிஞர் அண்ணா மிகவும் போற்றுகிறார்.

சமுதாய முன்னேற்றத்தில் மாணவர் பங்கு கொள்ள வேண்டும் என்பது அண்ணாவின் கருத்து. அவரே மாணவர் பருவத்தில் பெரியாரைப் பின்பற்றிப் பொது வாழ்வில் ஈடுபட்டவர் என்பது குறிப்பிடத் தக்கது. சமுதாயம் முன்னேற்றமடைவதற்கு மாணவரின் கடுமையான உழைப்பு தேவைப்படுகிறது. மாணவர் நினைத்தால் சமுதாயத்தில் நிலவி வருகிற கொடுமைகளைத் தகர்த்தெறிந்து, பண்பட்ட சமுதாயத்தை உருவாக்க இயலும். மாணவர் குறிக்கோளற்றுத் தன்னல விரும்பிகளாக இராமல், பொதுநல நாட்டமுடன் உழைக்க முன் வர வேண்டும்.

வாழ்வுக்குப் பொருள் தேவை. பொருளாதாரமே நமது வாழ்க்கை நிலையை வரையறை செய்கிறது. எனினும், அதற்காக மாணவர்கள் பொருள் தேடுதல் ஒன்றை மட்டும் குறிக்கோளாகக் கொள்ளாது, அத்துடன் பொதுநலப் பணிகளையும் மேற்கொள்ள வேண்டும் என்னும் கருத்தின் அடிப்படையில் அண்ணா பின்வரும் கருத்தை வழங்கியுள்ளார்:

> ''தனித்த வாழ்வில் சொந்தக் குடும்ப முன்னேற்றத்துக்கான அடிப்படையில் பணம்தேடுவது என்பது மட்டுமே வாழ்வின் குறிக்கோள் என்னும் முறையில் நீவிரெல்லாரும் ஒழுகிட வேண்டும் என நான் எதிர்பார்க்கவில்லை. நான் மட்டுமல்ல, நாட்டுச் சமுதாயமே அப்படித்தான் கருதுகிறது. பொருளீட்டும் நோக்கத்தோடு அதையும் விடச் சிறந்த, உயர்ந்த, மாண்பு தரும் பொதுநோக்கு, பொது நன்மை ஆகியவற்றுக்காகவும் நீங்கள் உழைத்திட வேண்டும். சமூகம் இதைத்தான் உங்களிடமிருந்து சிறப்பாக எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது.''

என அண்ணா கூறியுள்ளார்.

## 9. நிலையான செல்வம்

"ஒரு நாட்டின் நிலையான செல்வம், நிரந்தரமான செல்வம் இந்நாட்டின் அரசியல்வாதிகளே அல்லர்; இதை உண்மையாக உணர்ந்தவன் என்கிற முறையில் தெரிவிக்கிறேன். கல்வித் துறையில் ஈடுபட்டிருப்பவர்கள், பொறியாளர்கள், நிருவாக நிபுணர்கள்தான். உண்மையான, நிரந்தரமான, அழிக்கமுடியாத, அளவிடமுடியாத செல்வமாகும். அந்தச் செல்வம் நம்முடைய நாட்டிலே போதுமான அளவுக்கு இல்லாத காரணத்தால்தான் புதிய தொழிற்சாலைகளைத் தொடங்க வேண்டுமென்றால் அமெரிக்க நாட்டின் நிபுணர்களையும், இங்கிலாந்து நாட்டு விஞ்ஞானிகளையும், இரஷ்ய நாட்டுப் பொறியிய லாளர்களையும் நாடுகிறோம். கல்வித் துறைதான் இத்தகைய வாய்ப்புகளைத் தரும் அறிவுத் துறையாகும். அத்தகைய வாய்ப்புகளைப் பெற்று நல்ல நிலையை உண்டாக்கித் தரும் பெரும் பொறுப்பு மாணவர்கள் கரங்களில்தான் இருக்கிறது. அதற்கான அறிவும் ஆற்றலும் அவர்களிடம் நிறைய இருக்கிறது. அப்படிப்பட்ட உன்னத மரபில் பிறந்தவர்கள் நாம் என்பதை உணர்ந்தால் இயற்கையாகப் பெற்ற திறனோடு ஆசிரியர் தரும் பயிற்சியின் துணை கொண்டு முதல்தரக் குடிமக்களாகத் திகழ முடியும்."

என்று மாணவர்களுக்கு எடுத்துரைக்கிறார் அண்ணா.

## 10. நிறைவாக...

கல்வி வளர்ச்சிக்காக, மாணவர் முன்னேற்றத்துக்காக அண்ணா மேற்கொண்ட முயற்சிகளின் பலனாகத் தமிழ்நாட்டில் கல்வி வளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. என்றாலும், ஒரு நாட்டின், மாநிலத்தின் எழுத்தறிவின்மையை முழுமையாகப் போக்குதல் என்பது எளிதான செயல் இல்லை. அதுவும் மக்கள் தொகையை அதிகமாகக் கொண்ட நமது இந்தியாவில் எளிமையானது இல்லை. ஒளிமிக்க எழுத்தறிவு உலகத்தை அடைய வேண்டுமானால் அறியாமை என்னும் இருட்டை விரட்ட நாம் அயராது பாடுபட வேண்டும். எழுத்தறிவை அளிப்பது தனி ஒருவரின் சிக்கலாகவோ அல்லது ஒரு குறிப்பிட்ட பிரிவினரின் சிக்கலாகவோ கருதாமல், நமது நாட்டின் சிக்கலாக, சமுதாயத்தின் சிக்கலாக எடுத்துக் கொண்டு போராடும் நிலை வர வேண்டும். எழுத்தறிவுள்ள ஒவ்வொருவரும் எழுத்தறிவற்ற ஒவ்வொருவருக்கும் எழுத்தறிவித்து நமது நாட்டில் எழுத்தறிவின்மை இல்லை என்னும் நிலையை உருவாக்கிடப் பாடுபடவேண்டும்.

நாட்டின் பொருளாதார வளர்ச்சி நிலம், உழைப்பு, மூலதனம் ஆகியவற்றை மட்டுமே சார்ந்தது என்னும் கருத்து பழங்கதையாகி, அறிவுத்திறனே முக்கியக் காரணி என்னும் கருத்து உலகம் முழுவதும் விரைந்து பரவி வருகிறது. அறிவு வளத்தைப் பயன்படுத்தி, பொருள் வளத்தைப் பெருக்கி, மக்களின் வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்துவதே 21ஆம் நூற்றாண்டின் அறிவுசார் பொருளாதாரத்தின் இலக்காக உள்ளது. 2020இல் இந்தியா வல்லரசாகத் திகழும் என்னும் நாட்டுத் தலைவர்களின் கனவு நனவாகக் கல்லாமையை இல்லாமல் ஆக்க வேண்டும். இத்தகைய முயற்சிகளில் அண்ணாவின் சிந்தனைகளை சிந்தையில் கொண்டு செயல்ஆற்றுவோமாக!.

## 2.2 மொழிச் சிந்தனைகள்

நமது சமுதாயம் தாயை முதன்மையாகக் கொண்டது. மொழிகளிலும் தாய்மொழிக்கே முதலிடம். தனிமனிதனைச் சிறந்த குடிமகனாக மாற்றுவதே தாய்மொழிக் கல்வியின் உயர்ந்த நோக்கமாகும். தாய்மொழி வாயிலாகப் பெறப்படும் கல்வியறிவே மக்கள் மனங்களைப் பண்படுத்தி, பண்பாட்டை வளர்த்து, நாட்டுப் பற்றை ஊட்டி எந்த ஈகச் செயலுக்கும் அவர்களை ஆயத்தப் படுத்துகிறது.

ஆண்டுதோறும் பிப்பிரவரி 21ஆம் நாள் 'தாய்மொழி நாள்' உலகம் முழுவதும் கொண்டாடப்படுகிறது. தாய்மொழியே பயிற்று மொழியாக இருக்க வேண்டும் என ஐ.நா.வின் ''கல்வி, அறிவியல், கலைநாகரிக அமைப்பு'' (யுனெஸ்கோ) அமைப்பு 1953ஆம் ஆண்டிலேயே அறிவித்தது. அந்நிய மொழிகளின் மூலம் கற்பதைக் காட்டிலும் மிக விரைவாகக் கல்வி பெற உதவும் மொழி தாய்மொழிதான் என அது அறிவுறுத்தி உள்ளது.

உலக மொழிகள் பலவற்றுக்கும் மூத்த தாயாகிய மொழி தமிழ்மொழி. நாலாயிரம் ஆண்டுகட்கு முன்பே எழுத்து மொழியாய் ஏறுநடை போட்ட மொழி தமிழ்மொழி. மொழி பேசுவதற்குரிய ஒரு கருவி எனச் சொல்லப்பட்டாலும் தமிழ்மொழி வாழ்வியல் மொழியாய் வளர்ந்து செழித்து, தமிழ் மண்ணுக்கே உரிய பண்பாட்டையும், நாகரிகத்தையும் தழுவிக் கொண்டு தமிழினத்தை வளர்த்த மொழி நமது தமிழ்மொழி. அத்தகைய தமிழ்மொழியினை வளர்த்த பெருமைக்குரிய சான்றோர் பெருமக்களுள் அறிஞர் அண்ணா குறிப்பிடத்தக்கவர் ஆவார். தமிழ் மொழிக்கு அரும்பணியாற்றித் தமிழ் மக்களுக்கும் தமிழ் மொழிக்கும் தம்மை முழுமையாய் ஒப்படைத்துக் கொண்டவர் பேரறிஞர் அண்ணா.

### 1. செம்மொழியான தமிழ்மொழி

உலக மொழிகள் என எடுத்துக் கொண்டால் எண்ணிக்கையில் அவை அறுநூறு. அவற்றுள் இலக்கியம் மற்றும் இலக்கணம்

உடையவை எனப் பார்த்தால் வெறும் முந்நூறு. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட தொன்மை வரலாறு உடைய மொழிகள் எத்தனை எனப் பார்த்தால் எண்ணிக்கை ஒற்றை இலக்கில்தான் உள்ளது. அதாவது ஆறு மொழிகள் மட்டுமே அத்தகைய சிறப்புக் கொண்டவை. 1. தமிழ் 2. சீனம் 3. சமசுகிருதம் 4. இலத்தீன் 5. ஈப்ரு 6.கிரீக்.

இந்த ஆறு மொழிகளில் முதலிடம் ஏற்றுள்ளது தமிழ். தமிழ் மொழி மட்டுமே மனிதச் சிந்தனைகளை, நுண்ணிய உணர்வுகளை மிகத் தெளிவாக உணர்த்தும் ஆற்றல் கொண்ட மொழி என்று 'மொழியியல் தந்தை' எமினோ கூறியிருக்கின்றார்.

உலக மொழிகளில் காந்த சக்தி கொண்டது தமிழ். ஒரு மொழியை நன்கு ஆய்வு செய்த பின்னரே அம்மொழியின் வளம் பற்றிப் பேச முடியும். ஆச்சார்யா வினோபா பாவே பல மொழிகளில் தேர்ச்சி பெற்றவர். அவர் தமிழ்மொழியை நன்கு ஆராய்ந்து உலகுக்கு உரைத்தவர். அவர் அன்னைத் தமிழின் பெருமைகளைக் கூறும் போது-

> ''இலத்தீன் மொழியைப் போன்று தமிழ்மொழி அளவற்ற வினைச் சொற்களைக் கொண்டுள்ளது. ஒரு மொழியின் வளம் அதன் வினைச்சொற்களின் அளவில் அமைந்துள்ளது. அந்த வகையில், தமிழ் உயர் தனிச்செம்மொழி என்பதில் ஐயமில்லை.''

என்று கூறியிருக்கிறார்.

தமிழ் இன்று 'செம்மொழி' என அறிவிக்கப்பட்டுள்ளது. தமிழைச் செம்மொழியாக்க அன்றே முற்பட்டவர் அண்ணா. அவர் தமிழ் மொழியின் சிறப்பைக் கூறுகையில்-

> ''நமது தாய்மொழியாம் தமிழ் உலகின் உயர்தனிச் செம்மொழி. இது உலகில் வேறெந்த இனத்திற்காவது தாய்மொழியாக இருந்திருக்குமானால் இத்தனைக் காலத்திற்குள் அது உலகப் பொதுமொழியாக ஆகியிருக்கும்.''

என்று கூறியுள்ளார்.

### 2. உலகத் தமிழ் மாநாடு

உலகின் பல்வேறு நாடுகளில் வாழும் தமிழர்கள் எல்லோரையும் ஒருங்கிணைக்க வேண்டும் என்றும், அவர்கள் தமிழ் மண்ணை மிதிக்க வேண்டும் என்றும் எண்ணி 1968ஆம் ஆண்டு சென்னையில், இரண்டாம் உலகத்தமிழ் மாநாடு நடத்தி இந்தியத் திருநாட்டு மக்களைச் சென்னை மாநகர்ப் பக்கம் திரும்பிப் பார்க்க வைத்த திருமகனார் அறிஞர் அண்ணா. அந்த நேரத்தில்

பல்கலைக்கழகங்களில் பழந்தமிழின் புகழ் உரைக்கக் கலைக்கண்காட்சிகள் நடத்தியும், ஆய்வு அரங்குகள் நடத்தியும் அந் நிகழ்வுகளில் உலகின் முக்கியப் பெருமக்கள் கலந்து கொண்டு சிறப்பிக்கவும் செய்தார் அண்ணா. இரண்டாம் உலகத்தமிழ் மாநாட்டில் உற்சாகத்தோடும், ஈடுபாட்டோடும் இலட்சக்கணக்கான மக்கள் கூடினார்கள். உலகத்தில் பல்வேறு பகுதிகளில் இருந்து நுண்ணறிவாளர்களும், புலவர் பெருமக்களும் கலந்து கொண்டனர். இது தமிழுக்கும் தமிழருக்கும் அண்ணா திரட்டிய புகழ்.

தமிழ் நாட்டு மக்கள் மட்டுமன்றி இந்தியா முழுவதும் தமிழ்மொழி தழைத்தோங்கி வளர்ந்திட வேண்டும் என்று விரும்பிய அண்ணா நாட்டின் பல்வேறு பல்கலைக்கழகங்களில் தமிழ் ஆய்வு நடத்திட வேண்டும் என்று எண்ணினார். குறிப்பாகப் காசி (பனாரசு) இந்துப் பல்கலைக்கழகம், கொல்கத்தாப் பல்கலைக்கழகம், மும்பைப் பல்கலைக்கழகம், தில்லிப் பல்கலைக்கழகம், அனந்தப்பூர் பல்கலைக்கழகம், மைசூர் பல்கலைக்கழகம் ஆகியவற்றிற்குத் தமிழ்நாடு அரசின் நிதியினை வழங்கித் தமிழ் ஆய்வு நடக்கத் தமிழ் அறிஞர்களை நியமித்துத் தமிழ் மொழிக்கு அரும்பணி ஆற்றினார்.

### 3. தமிழ்மொழி - அண்ணாவின் கருத்து மணிகள்

தமிழ்-இது படிப்போரை அதன்மேல் பற்றுக் கொள்ளச் செய்யும் ஆற்றல் பெற்ற மொழி. இல்லையென்றால் பிறநாட்டினர் தமிழ்க் கற்றுத் தமிழுக்காகத் தமிழ்நாட்டிலும் மேலை நாடுகளிலும் தொண்டாற்றியிருக்க முடியுமா? இதனை அண்ணா:

> ''இங்கிலாந்திலிருந்தும் பிற நாடுகளிலிருந்தும் வருகிற நிபுணர்கள் 'தமிழ்மொழி அருமையான மொழி' என்று கூறுகின்ற நேரத்தில் அந்த மொழிக்குச் சொந்தக்காரர் நாம் என்று நினைக்கும்போது அந்த மொழி மீது நமக்குப் பற்றும் பாசமும் ஏற்படாமல் இருக்குமா?.''

என்று கேட்டு,

> ''இத்தகைய மொழிக்கு நாம் உரிமையானவர்கள் என்பதில் பெருமை கொள்ள வேண்டும் என்று தமிழின் பெருமையை எடுத்துரைக்கிறார்.
>
> இந்த நாட்டில் முதன் முதலில் கல்விக் கூடங்களை அமைத்தவர்களும், கல்விக்காகப் பெரும் பொருளைச் செலவழித்தவர்களும், அதில் அக்கறை எடுத்துக் கொண்டவர்களும் வெளிநாடுகளிலிருந்து இங்கு வந்த கிறித்தவப் பாதிரிமார்கள் என்பதை உணருகின்ற நேரத்தில்

அவர்களுக்கும், அவர்களுடைய மார்க்கத்திற்கும் நாம் என்றென்றும் கடமைப்பட்டிருக்கிறோம்.''

என்றும் தமது கருத்தினை வெளிப்படுத்தியுள்ளார்.

''தமிழ் வளமாக்கப்படவும் பாதுகாக்கப்படவும் வேண்டும். வளமாக்குவது என்று சொல்லக் காரணம் -உலகத்தில் முதன்மை பெற்ற மொழிகளில் ஒன்றாகத் தமிழ் விளங்க வேண்டும் என்பதற்காக. பாதுகாக்கப்பட வேண்டும், ஏனெனில் அது வேற்று மொழி ஆதிக்கத்தால் அழிந்து போகாமலிருக்க-சிதைந்து போகாமலிருக்க-ஊக்கம் குன்றி ஊறு நேராதிருக்க! தமிழுக்கு ஏற்படுகின்ற ஆபத்தைத் தடுத்து, அதை உலக மொழிகளில் தலைசிறந்த ஒன்றாக ஆக்க வேண்டும்.''

கண்ணை இமை காப்பது போல மொழியை அதாவது தமிழைத் தமிழர்கள் இமையைப் போல இருந்து காத்து வருதலையும், தமிழை இழிவுபடுத்துபவரைக் கண்டால் ஏற்படும் நிலையை,

''நம்முடைய மொழியை நாம் கண்போலக் காத்து வருகிறோம். அந்தக் கண்ணில் சிறு துரும்பு பட்டாலும் எரிச்சல் காணத்தான் செய்யும். அதனால் உடல்கூட எரிச்சல் காணுவது போல இருக்கும். அந்த நேரத்தில் யாரேனும் ஏதாவது கேட்டால் எரிந்து விழுவோம். நம் கண்கள் கோபத்தால் மேலும் சிவந்து விடும். இது பட்டவர்களுக்குத் தெரியும்.''

எனப் பேரறிஞர் அண்ணா உணர்ச்சியுடன் எடுத்துரைக்கிறார்.

### மொழிபெயர்ப்பு

சொல்வளத்தைப் பெற்ற தமிழை மொழிபெயர்ப்புக்கு உட்படுத்தும் போது சில வழிமுறைகளைக் கையாளுதல் வேண்டும் என்பதை:

''பிற மொழி நூல்களைத் தமிழில் மொழிபெயர்ப்பதை வரவேற்கின்றேன். ஆனால், மூலம் கெடுகின்ற வகையில் உயிரில்லாமல் உடல் மட்டும் வைப்பது பொதுவாக நல்லதன்று. ஆங்கிலத்தில் உள்ளதைத் தமிழாக்கம் செய்வதானால் ஆங்கில நூலை நன்கு படித்து அதை மனத்தில் வைத்துக் கொண்டு எந்த மொழியில் மாற்றம் செய்கிறோமோ அந்த மொழிக்காரர்கள் சுவைத்துப் படிக்கும் வகையில் மொழிபெயர்க்க வேண்டும்.''

என்று விளக்குகிறார் அண்ணா.

### பிறமொழிகளைப் பயன்படுத்தும் முறை

> ''கண்ணுக்கு மையிடுவது போலப் பிற மொழிகளைப் பயன்படுத்த வேண்டும். மை அதிகமானால் கண்ணை எப்படி அழித்துவிடுகிறதோ அது போலப் பிறமொழிகள் அதிகம் கலப்பதும் நம் மொழிக்கு ஆபத்தான நிலைமையை உண்டாக்கும்.''

என்று அண்ணா கண்ணுக்கு மையிடுதல் எனும் உவமையைக் கூறிப் பிற மொழியை அளவோடு பயன்படுத்தினால் அழகு, இல்லையேல் அது ஆபத்து என்று நனியுற விளக்கியுள்ளார்.

### கலப்படம் இல்லாத தூய தமிழ்

> ''தமிழர்களாகிய நாம் பிற மொழிகள் கலவாமல் எழுதுவது தமிழுக்குள்ள சிறப்பை உயர்த்திக் காட்டத்தான். பிறமொழிகள் கலப்பின்றி எழுதும் ஆற்றல் தமிழ் மொழிக்குத்தான் உண்டு. நம் இலக்கியங்களில் உள்ள சொற்கள் பலவற்றை நாம் பயன்படுத்த வேண்டும். தொடக்கத்தில் சிறிது தொல்லையாக இருந்தாலும் போகப் போகச் சரியாகிவிடும்.''

என்று அண்ணா மாணவர்களுக்குத் தூய தமிழ் எழுதும் முறையை ஓர் ஆசிரியர் நிலையில் இருந்து கூறுகின்றார்.

> ''எந்தப் பணியின் மூலம் தமிழ்நாட்டை அறியவும் உலகத்தை உணரவும்-தமிழ்ப் பண்பை நுகரவும் வழி கிடைத்து வந்ததோ-அந்தப் பணியினைச் செய்ய முடியவில்லை என்ற ஏக்கத்தால் தாக்கப்பட்டு, சூழ்நிலையின் கைதியாக்கப்பட்டுக் கிடக்கின்றேன்-பதவிக்கு வந்த பிறகு!.''

எனப் பேரறிஞர் அண்ணா தாம் முதலமைச்சராக இருப்பதனால் பல்வேறு அரசுப் பணிகளினால் தமிழ் படிக்க இயலாத நிலைக்கு உட்பட்டு இருப்பதைக் கூறி வருந்துவது- பேரறிஞருக்கு தமிழ்ப் படைப்புகளைப் படிப்பதில் உள்ள ஆர்வத்தையும், பற்றையும் விளக்குகிறது.

### 4. தமிழ்வழிக் கல்வி

தாய்மொழிக் கல்விதான் ஒரு மாணவனை முழுமையாக நுண்ணறிவு பெற வழி வகுக்கும் என்பதில் அண்ணா உறுதியான நம்பிக்கை கொண்டிருந்தார். சென்னை, சைதாப்பேட்டை ஆசிரியர் கல்லூரியில் ஆங்கிலத்தில் கற்பிக்கப்பட்ட கல்வியியல் பாடங்களைத்

தமிழிலே பயிற்றுவிக்கும் ஆணையைத் தாம் முதலமைச்சராக இருக்கும் போது தடைகளைத் தாண்டி நிறைவேற்றினார்.

கல்வியிலே இந்திமொழி நுழையக்கூடாது என்று எதிர்த்தார் அண்ணா. காரணம் ஆங்கிலேயர் வரவால் தமிழ்மொழி சிதைந்து வழங்கப்படுகிறது. மேலும் இந்திமொழியும் தமிழ்நாட்டில் நுழைந்தால் நம் செவ்வியல் மொழி தனது முழு ஆளுமையை இழந்துவிடும் என இந்தி எதிர்ப்புப் போராட்டத்தை அவர் நடத்தினார். 'தமிழ்வழிக் கல்வியே சிறந்தது' எனும் சிந்தனையையுடையவராக அண்ணா இருந்தார்.

ஒருவர் தம்முடைய சிந்தனைகளைத் தமது தாய்மொழியின் வழியாக மட்டுமே முழுமையாக வெளிப்படுத்த முடியும்.

> ''ஆங்கில மொழியில் எழுதுவதை விட, பேசுவதைவிட என் தாய்மொழி குசராத்தில் எழுதினால், பேசினால் எளிமையாக என்னால் கருத்துகளை வெளிப்படுத்த முடியும்.''

என்றார் மகாத்மா காந்தியடிகள். தற்காலத்தில் ஆங்கிலமே அறிவு பெருக்கும் என்னும் கருத்து ஆழமாக வேரூன்றி வருகிறது. ஆங்கிலத்தில் பேசினால்தான் நாகரிகம், கவுரவம், மதிப்பு, பெருமை என்கிற மாயை பெரும்பாலான மக்கள் மனங்களில் புகுத்தப்பட்டுள்ளது. ஆங்கில மோகத்தின் விளைவுகளைச் சமுதாயத்தில் வெளிப்படையாகவே காண முடிகிறது. உலகின் தலைசிறந்த மேதைகளாகவும் அறிஞர்களாகவும் போற்றப்படக்கூடியவர்கள் முதலில் தமது தாய்மொழியினையே விரும்பிக் கற்றனர்.

## 5. ஆட்சியில் தூயதமிழ் வளர்த்த அண்ணா

இந்தியா விடுதலை பெற்ற பிறகும் தமிழ்நாட்டில் தமிழ் ஆட்சிமொழி என அறிவிக்கப்பட்டும் அரசு அலுவல் நடவடிக்கைகள் பெரும்பாலும் ஆங்கிலத்திலேயே இருந்தன. இதனைக் கண்ட முதல் அமைச்சர் அண்ணா, அனைத்துத் துறைகளிலும் அலுவல் நடவடிக்கைகள் தமிழிலேயே அமைய வேண்டும் என்று அரசு ஆணை பிறப்பித்தார்.

1937ஆம் ஆண்டு சென்னை மாகாணத்திற்கு இரு ஆட்சிமன்ற அவைகள் தோற்றுவிக்கப்பெற்றன. அப்போது அசெம்பிளி 'கீழ்சபை' என்றும், கவுன்சில் 'மேல்சபை' என்றும் மொழிபெயர்க்கப்பட்டன. 'அவை' நிகழ்ச்சிகளிலும் கையாளப்பட்டன. அண்ணாவின் காலத்தில் பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப்படும் கூடுதல் உறுப்பினர்களைக் கொண்டு சட்டமன்றம் விளங்குவதால் அது 'பேரவை' ஆயிற்று.

அதேபோன்று ஆன்றோர் சான்றோர்களைக் கொண்டு விளங்கிய மேல்சபை அதாவது மேலோர் சபை 'சட்டமேலவை' ஆயிற்று. இரண்டும் சேர்ந்தது 'சட்டமன்றம்' தூய தமிழில் அழைக்கப்பெற்றது.

சபாநாயகர் என்னும் சொல் மாற்றம் பெற்றுப் "பேரவைத் தலைவராகவும்", சேர்மேன் என்பது "மேலவைத் தலைவராகவும்" மாற்றப்பட்டன. கவர்னர் என்பது 'ஆளுநர்' என்றும், அங்கத்தினர் என்பது 'உறுப்பினர்' என்றும், மந்திரி என்பது 'அமைச்சர்' என்றும், கனம் 'மாண்பாகவும்', மசோதா 'சட்ட முன்வடிவு' எனவும் தூய தமிழில் மாற்றம் செய்யப்பட்டன.

1956ஆம் ஆண்டு தமிழ் ஆட்சிமொழிச் சட்டம் அமலுக்கு செயல்முறைக்கு வந்தபோது சில தமிழ்ச்சொற்கள் புகுத்தப்பட்டன. எடுத்துக் காட்டாக, பட்ஜெட் "நிதிநிலை அறிக்கை" என்று தமிழில் மாற்றம் அடைந்தது. ஒருசில நேரங்களில் ஆங்கில வார்த்தைகள் பயன்படுத்தப்பட்டன. இருப்பினும் பேரறிஞர் அண்ணா அவர்கள் பொறுப்பேற்ற பிறகுதான் இந்த முறை மாற்றப்பட்டு, தூய தமிழிலேயே கூறி வாக்கெடுப்புக்கு விடப்படும் நிலை ஏற்பட்டது. 'எஸ்' (Yes) என்பதற்கு 'ஏற்போர்' என்றும், 'நோ' (No) என்பதற்கு 'மறுப்போர்' என்றும் மொழிபெயர்க்கப்பட்டன. பேரவைத்தலைவர் தீர்மானத்தை ஆதரிப்போர், 'ஆம்' என்க, தீர்மானத்தை எதிர்ப்போர் 'இல்லை' என்க என்று சொல்லும் நிலை வந்தது. இது ஒரு பெரிய தூய தமிழ்ப் புரட்சி மாற்றமாகும்.

கோயில்களில் தாய்மொழியில் வழிபாடு செய்யும் வழக்கம் ஏற்பட்டது. அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் அருளிய பன்னிரு திருமுறைப் பதிகங்கள் மற்றும் ஆழ்வார் பாசுரங்கள் ஓதப்பட்டன. சென்னை அரசுச் சின்னத்திலுள்ள 'சத்தியமேவ ஜெயதே' எனும் சொற்றொடர் "வாய்மையே வெல்லும்" என்னும் தூய தமிழில் மாற்றப்பட்டுள்ளது. சென்னை மாகாணம் "தமிழ்நாடு" எனும் பழம்பெரும் பெயரைப் பெற்று வெற்றி நடை போட்டு வருகிறது. அதற்குச் சட்டம் தீட்டியவரே பேரறிஞர் அண்ணா அவர்களே!.

'ஆகாசவாணி' என்று அழைக்கப்பட்டு வந்த வானொலி நிலையத்தை 'அகில இந்திய வானொலி நிலையம்' என்னும் பெயர் மாற்றத்தை அணணாவே பெற்றுத் தந்தார். அண்ணா ஆட்சியில் இருந்த போது 'எங்கும் தமிழ், எதிலும் தமிழ்' என்னும் முழக்கம் கொண்டு ஆயிரக்கணக்கான தமிழ்ச் சொற்களை நடைமுறைப்படுத்த ஆணையிட்டார். செகரட்டேரியட், பஸ் ஸ்டேண்ட், லைட்அவுஸ் என்று அழைக்கப்பட்டு வந்த இடங்கள் அழகுத் தமிழில் தலைமைச்செயலகம், பேருந்து நிலையம், கலங்கரை விளக்கம் என்றெல்லாம் அழைக்கப் படலாயின.

அண்ணாவின் ஆட்சியில்தான் அன்னைத் தமிழ்மொழிக்கு அருந்தொண்டாற்றிய தமிழறிஞர்களுக்குப் பரிசுகள் அளிக்கப்பட்டுச் சிறப்பிக்கப் பெற்றனர். மறைந்த தமிழ் அறிஞர்களுடைய நூல்களை நாட்டுடைமை ஆக்கியதோடு மட்டுமல்லாமல் அந்த நூலாசிரியர் குடும்பத்தினருக்கு நிதி உதவியினையும் வழங்கி ஊக்கமளித்தார் அண்ணா.

தமிழ்மொழியின் வளர்ச்சிக்காகப் பாடுபட்டோருக்கும், பண்டைக் காலத்தில் தமிழ்மொழிக்குத் தொண்டு ஆற்றிய பெருமக்களுக்கும் நன்றி செலுத்தும் பண்போடு சென்னையில் புகழ்பெற்ற மெரினா கடற்கரை சாலையில் சுப்பிரமணிய பாரதியார், கண்ணகி, அவ்வையார், திருவள்ளுவர், கம்பர், பாரதிதாசன், ஜி.யு.போப், வீரமாமுனிவர் முதலிய தமிழ்ச் சான்றோர்களுக்குத் திருஉருவச் சிலைகள் அமைத்து உலக மக்கள் எல்லாருக்கும் தமிழ் அறிஞர் பெருமக்களை அடையாளம் காட்டினார் முதல் அமைச்சர் அண்ணா.

## 6. சட்டமன்றத்தில் திருக்குறள்

பேரறிஞர் அண்ணா அவர்கள் ஆட்சிப் பொறுப்பேற்றுக் கொண்டவுடன் திருக்குறள் பட்டி தொட்டிகளில் மட்டுமல்ல, பேருந்தில் மட்டுமல்ல, சட்டப்பேரவையிலும் எதிரொலிக்கத் தொடங்கியது. மாண்புமிகு சி.பா. ஆதித்தனார் பேரவைத் தலைவராக இருந்த காலத்தில் முதலமைச்சர் அண்ணா முதன் முதலாக 17.06.1967 அன்று திராவிட முன்னேற்றக்கழக அரசின் முதல் நிதிநிலை அறிக்கையை அளித்த நாள் 'பேரவைத் தலைவர்' திருக்குறளின் முதற்குறளை அவையில் கூறிப் பிறகு அவை நிகழ்ச்சிகளைத் தொடர்ந்து நடத்தினார்.

**'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி**
**பகவன் முதற்றே உலகு'**

எனும் வள்ளுவர் வடித்த திருக்குறளை அவர் உள்ளத்தின் உவகையுடன் கூறினார். அதை உறுப்பினர்கள் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டார்கள். மொழித் தீர்மானம் அண்ணா அவர்களால் முன்மொழியப்பட்ட வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த நாளான 23.01.1968 அன்று பேரவைத் தலைவரால் சொல்லப்பட்ட திருக்குறள்-

**'தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்**
**நீங்கா நிலன்ஆள் பவர்க்கு'**

என்பதாகும். அன்று முதல் தொடர்ந்து அவை நிகழ்ச்சிகள் தொடங்கும் போது திருக்குறள் கூறித் தொடங்குவது மரபானது. இது பேரறிஞர் அண்ணாவிற்குக் கிடைத்த வெற்றி.

உலகமறைகள் அனைத்தையும் உள்ளடக்கியுள்ள திருக்குறளின் மாண்பினைப் பல்கலைக்கழகங்களுக்குக் கொண்டு செல்ல வேண்டும் என்னும் சிறந்த நோக்கோடு தாம் முதலமைச்சர் ஆனவுடன் ஓர் ஆணை பிறப்பித்தார். தமிழ்நாட்டின் தாய்ப் பல்கலைக்கழகமான சென்னைப் பல்கலைக்கழகத்தில் திருக்குறள் ஆராய்ச்சி இருக்கை ஒன்றைத் தமிழ்நாடு அரசின் நிதியில் தொடங்கி வைத்துத் திருக்குறளை முழுமையாய் ஆராய்ந்து உலகமெல்லாம் கொண்டு செல்ல வேண்டும் என்று விரும்பிய பெருமகனார் அறிஞர் அண்ணா ஆவார். அத்தோடு நில்லாமல் தமிழ்நாட்டில் உள்ள பல்கலைக் கழகங்களில் திருக்குறள் ஆராய்ச்சி இருக்கையை உருவாக்கி நிதி உதவி அளித்தார்.

பொதுமக்களிடம் திருக்குறள் சென்றடைய வேண்டுமென்னும் நல்ல நோக்கத்தில் அரசுப் பேருந்துகளில் திருவள்ளுவரின் உருவப் படத்தையும் திருக்குறள் ஒன்றையும் இடம் பெறச் செய்ய ஆணை பிறப்பித்தார். மத்திய அரசிடம் போராடித் திருவள்ளுவரின் உருவம் பதித்த அஞ்சல் தலையை வெளியிடச் செய்தார்.

''உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்'' தோற்றுவிக்கப் பெறும் என்னும் அறிவிப்பைப் பேரறிஞர் அண்ணா வெளியிட்டுப் பெருமை பூண்டார்.

## 7. இந்தி எதிர்ப்பு

தமிழ் வளர்ச்சியில் அக்கறை காட்டிய அண்ணாவிற்கு இந்தித் திணிப்பில் இருந்து மக்களைக் காக்க வேண்டிய பொறுப்பையும் மக்கள் அண்ணாவின் தலைமையில் சுமத்தினார்கள். தமிழ்நாட்டின் அரசியல் கட்சிகள் எல்லாவற்றையும் ஒருமைப்படுத்தி இந்தி எதிர்ப்புக் கொள்கையில் வெற்றி கண்டார். இந்தித் திணிப்பில் மத்திய அரசு தொடர்ந்து நடவடிக்கை எடுக்காமல் இருப்பது அண்ணா எடுத்த முடிவின் பயனாகும். இது தமிழுக்கு அண்ணா செய்த பாதுகாப்பு அரணாகும்.

தந்தை பெரியார் கட்டளை ஏற்றுத் 'தளபதி' பொறுப்பில் இந்தி எதிர்ப்பை முன்னின்று நடத்தியவர் பேரறிஞர் அண்ணா. இந்தி எதிர்ப்பிற்கு அறைகூவல் விடும்பொழுது,

> ''இது இந்தி எதிர்ப்புப் போராட்டம் மட்டுமல்ல; ஒரு விடுதலைப் போராட்டமாகவும் இருக்கும். இந்தப் போராட்டம் தொடர்ந்து நீடிக்க வேண்டும். அப்படிப்பட்ட ஒரு வீர உணர்ச்சி நம்மிடத்தில் வந்திருக்கிறது.''

என்கிறார். மேலும்,

"நம்முடைய தமிழ் மொழியைக் காப்பாற்ற முடியவில்லை என்றால் நாட்டிலும் வீட்டிலும் நமக்கு மரியாதை ஏது? மரியாதை எப்படிக் கிடைக்கும்? நாட்டை மீட்கிறோம் என்றால் நம் வீட்டைக் காப்பாற்றுகிறோம் என்று பொருள். நம்முடைய தமிழ்மொழி பிழைத்தால்தான் நம்முடைய இனம் பிழைக்கும். நம்முடைய தமிழ்நாடு நமக்குக் கிடைத்தால்தான் நாம் தலைநிமிர்ந்து வாழ முடியும்."

என்று தமிழருக்கு ஏற்பட்டிருந்த இழி நிலையை எடுத்துரைத்தார்.

1928இல் காங்கிரசுக் கட்சித் தலைவர்கள் இந்தியாவின் ஆட்சி மொழியாகப் பயன்படுத்த இந்தியைப் பரிந்துரைத்தபோது, தமிழ்நாடு மக்கள், இந்தி வட இந்தியர்களின் முக்கிய மொழியாக இருப்பதால் மற்ற மொழி மக்கள் இரண்டாம் தரக் குடிமக்களாகக் கருதப்படக் கூடும் என்று கருதிக் கடுமையாக எதிர்த்தார்கள். இதன் தொடக்கமாக 1937இல் சென்னை மாகாணத்தில் சி. இராசகோபாலாச்சாரி தலைமை அமைச்சராக ஆனதும் அனைத்துப் பள்ளிகளிலும் கட்டாய மொழியாக இந்தி பயன்படுத்த ஆணை பிறப்பிக்கப்பட்டது. ஆனால் இதை விரும்பாத பெரியார், அண்ணா, மறைமலை அடிகள், பாரதிதாசன், தமிழ் ஆன்றோர்கள், புலவர்கள், அரசியல் தலைவர்கள் என அனைத்துத் தமிழ்ப் பற்றாளர்களும் தங்களுடைய எதிர்ப்பை வெளிப்படுத்தினர்.

இது மிகப்பெரிய மொழிப் போராட்டமாக வெடித்தது. போராட்டத்தில் ஈடுபட்டவர்கள் கைது செய்யப்பட்டுச் சிறையிலும் அடைக்கப்பட்டனர். இந்தப் போராட்டத்தில் தாலமுத்து, நடராசன் இருவரும் தமிழுக்காக உயிரையும் தியாகம் செய்தனர். அவர்களின் இறப்பு, இந்தி எதிர்ப்புப் போராட்டத்திற்கு ஒரு முக்கியத் தூண்டுகோலாகவும் இருந்தது. இதன் விளைவாகப் பிப்பிரவரி 1938ஆம் ஆண்டு காஞ்சிபுரத்தில் நடைபெற்ற இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் அண்ணாதுரை, பாரதிதாசன் உட்படப் பல தமிழறிஞர்கள் கலந்துகொண்டு தங்களுடைய எதிர்ப்பை வெளிப்படுத்தினர். பின்னர், பெரியாரும், அண்ணாவும் சிறைக்கே சென்றனர்.

1950இல், இந்தியா குடியரசு நாடாக மாறிய போது, இந்தியை இந்தியாவின் அலுவலக ஆட்சி மொழியாக 15 ஆண்டுகளுக்குப் பின் 1965இல் நடைமுறைப் படுத்தப்படும் என அறிவிக்கப்பட்டது. இந்த அறிவிப்பு தமிழ்நாட்டு மக்களிடையே பெரும் கவலையை ஏற்படுத்தியது. இதனால் 1960இல் தி.மு.க. கட்சி அண்ணாவின் தலைமையில் கட்டாய இந்திமொழி திணிப்பை எதிர்த்துச் சென்னையில் உள்ள கோடம்பாக்கத்தில் 'இந்தி எதிர்ப்பு மாநாடு' நடத்தியது. பிறகு இந்தியக் குடியரசுத் தலைவர் வருகையின் பொழுது கருப்புக்கொடி காட்டித் தங்களின் எதிர்ப்பைத் தெரிவித்தனர். இதனைக்

கண்ட இந்திய தலைமை அமைச்சர் சவகர்லால் நேரு இந்தி பேசாத மக்கள் விரும்பும் வரை ஆங்கிலமே ஆட்சி மொழியாக நீடிக்கும் வண்ணம் இந்திய அரசு அமைப்புச் சட்டத்தில் திருத்தம் கொண்டு வந்து அதனை நிறைவேற்றினார். அதன் பிறகு கருப்புக்கொடி ஆர்ப்பாட்டம் கைவிடப்பட்டது. இந்தப் போராட்டம் 1967ஆம் ஆண்டு நடந்த தேர்தலில் அண்ணா வெற்றி பெற ஒரு முக்கியக் காரணமாகவும் அமைந்தது.

முதன் முதலில் நாடாளுமன்றப் பேரவையில் நுழைந்த அண்ணா அவர்கள் தம் கன்னிப்பேச்சில் I am the representation of the man in the street' என்று தம்மைக் கம்பீரமாக அறிமுகப்படுத்திக் கொண்டார். தன்னை ஈன்ற தாய்த் தமிழுக்கும் தான் பிறந்த தமிழ் மண்ணுக்கும் உரிய ஏற்றம் கிடைக்கவில்லையே என்னும் மனக்குமுறலை நெஞ்சில் ஏந்தி எழுத்தாலும் பேச்சாலும் தம் போராட்ட இயக்கத்தை நடத்தினார்.

இலக்கிய வளமும் இலக்கணச் செழுமையும் நிறைந்த தமிழின் மீது, ஆதிக்க உணர்வுடன் சட்டமெனும் குதிரைமேல் ஏறிவந்த இந்தியைத் தடுக்க மொழிப்போர் கண்டவர் அண்ணா. ஏன் இந்தியை எதிர்க்கிறோம்? என்று அவர் அடுக்கடுக்காக நாடாளுமன்ற அவையில் எடுத்து வைத்த வாதங்கள் வடபுறத்துத் தலைவர்களை வியப்பில் ஆழ்த்தின.

அண்ணா முதலமைச்சராகப் பதவி ஏற்று ஆட்சி செய்த காலம். அப்பொழுதுதான் இந்தி மொழித் திணிப்பிற்கு எதிராகப் பல எதிர்ப்புப் போராட்டங்கள் தமிழ்நாட்டிலும் இந்தியாவிலும் அரங்கேறின. ஒருவழியாக இந்தி மொழியை ஆட்சி மொழியாக ஏற்றுக்கொள்ள முடியாது என்று புறக்கணித்து அதைப் பற்றிய பேச்சே வேண்டாம் என்று மைய அரசு முற்றுப்புள்ளி வைத்திருந்தது. அந்தச் சமயத்தில் அண்ணா டில்லிக்கு ஒரு பொதுக் கூட்டத்தில் கலந்துகொள்ளச் சென்றிருந்தார். அனைவரும் பேசி முடித்த பிறகு அண்ணாவைப் பேச அழைத்தார்கள். அப்பொழுது அந்தக் கூட்டத்தில் இந்தி மொழிக்கு ஆதரவான பல ஊடகங்கள் குவிக்கப்பட்டு இருந்தன. அப்பொழுது பேசத் தொடங்கிய அண்ணாவிடம் ஒரு பத்திரிக்கையாளர் ''நீங்கள் இந்தக் கூட்டத்தில் பேசுவதை விட எங்களின் கேள்விகளுக்குப் பதில் கொடுத்தால் நன்றாக இருக்கும்'' என்று கேட்டார். அதற்கு மறுப்புச் சொல்லாமல் அண்ணாவும் பதில் அளிக்கச் சம்மதித்தார். பத்திரிக்கையாளர்:

> ''நீங்கள் எதற்கு இந்தியை ஆட்சி மொழியாக்கக் கூடாது என்று மறுக்கிறீர்கள்.''

என்று கேட்க, அண்ணாவோ

> "நீங்கள் எதற்கு இந்தியை ஆட்சி மொழியாக்க வேண்டும் என்று எண்ணுகிறீர்கள்."

என்று திருப்பிக் கேட்டார். அதற்குப் பத்திரிக்கையாளரோ

> "இது ஒரு பொதுவுடைமையான நாடு. இங்கு யாருக்குப் பெரும்பான்மை இருக்கிறதோ, அவர்களுக்குத் தான் முன்னுரிமை. அந்த வகையில் இந்தியாவில் அதிகமான மக்கள் பேசும் மொழி இந்திதானே? அப்படியென்றால் இந்திதானே தேசிய மொழி."

என்று கேட்டு இருக்கிறார். அண்ணாவோ சிறிதும் தயங்காமல் அடுத்த நொடியில் பதில் கொடுத்தாராம்.

> "நீங்கள் சொல்வது போல் பார்த்தால் இந்தியாவில் மயில்களின் எண்ணிக்கையைவிடக் காக்கைகளின் எண்ணிக்கைதானே அதிகம். காக்கைகள் அதிகமாக இருப்பதால் அதைத் தேசியப் பறவையாக வைக்கவில்லையே! மயிலைத்தானே தேசியப் பறவையாக வைத்திருக்கிறோம்."

என்றார் அண்ணா. இந்தப் பதிலைக் கேட்டு அரங்கத்தில் இருந்த அனைவரும் வியந்து கைதட்டும் ஓசை நிற்கப் பல நிமிடங்கள் ஆயின.

**8. தமிழ் ஆராய்ச்சியாளர்கள்**

> "தமிழ்ப் புலவர்களே! ஒரு வார்த்தை. தாராளமாக நீங்கள் இலக்கியங்களை ஆராய்ச்சி செய்யுங்கள். ஆனால் ஆராய்ச்சியிலேயே மூழ்கி விடாதீர்கள். அடிக்கடி வெளியே வந்து, ஆராய்ச்சியில் கண்ட முடிவுகளைக் கூறி மக்கள் வாழ்வை வளமாக்க வேண்டியது உங்கள் கடமை."

என்று ஆராய்ச்சியாளர்களின், ஆசிரியர்களின் கடமையை எடுத்துக்கூறி,

> "தமிழின் ஆராய்ச்சி என்பது புத்தகத்தோடு முடிவு பெறாமல் அது மக்களிடம் சென்று மாற்றத்தைத் தோற்றுவிக்கக் கூடியதாக அமைய வேண்டும்."

என்று அண்ணா விளக்கியுள்ளார்.

உலகத் தமிழுக்காக, தமிழருக்காக **உலகத் தமிழ் மாநாட்டையும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தையும்** ஏற்படுத்தியவர். தமிழினத்தின் உரிமைக்காகவும், மொழிக்காகவும் பாடுபட்டவர். மதிப்பிட முடியாத இலக்கியத்திற்கும், உலகின் முதல் ஆதி மொழிக்கும் நாம் உரிமையாளர்கள் என்பதை விளக்கியவர்.

பேரறிஞர் அண்ணாவின் இவைபோன்ற தமிழ்மொழி, தமிழ் இலக்கியம், தமிழ்க்கல்வியியல் சார்ந்த கருத்துகள் அவரின் நூல்களினூடே வெளிப்படையாகவும், மறைமுகமாகவும் இருக்கின்றன. அவற்றை வெளிக்கொணர்ந்தால் அந்தந்தத் துறைக்குக் கருவூலங்களாக அவை அமையும் என்பதில் ஐயமில்லை. தமிழ்மொழியை வளர்க்க வேண்டும்; பாதுகாக்க வேண்டும்; தமிழ்வழிக் கல்வி பெற வேண்டும்; தமிழையும் அதன் தன்மைகளையும் விட்டுக் கொடுக்கக்கூடாது என்பதையே அண்ணாவின் மொழிச் சிந்தனைகள் வலியுறுத்துகின்றன.

### 9. அண்ணாவின் பிற தமிழ்மொழிச் சிந்தனைகள்

- தமிழ்நாட்டைப் போல் வேறு எந்த நாட்டிலும் அந்த நாட்டின் மொழி அல்லாத வேறு மொழியில் இசை பாடுவதைக் கேட்க முடியாது.
- தமிழ் எவ்வளவு சிறப்பான மொழி என்பதைத் தமிழினிடத்திலேயே, தமிழன் எடுத்துச் சொல்ல வேண்டி நேரிட்டிருப்பது அவமானத்தின் அறிகுறி.
- மகன் பேசும் ஆங்கிலத்தைக் கேட்டு வியப்படையும் தந்தை, மேலதிகாரி பேசும் ஆங்கிலத்தைக் கேட்டு வியப்படையும் ஊழியர், தமிழ்நாட்டிலே அதிகரித்ததும் தானாகவே தாய்மொழிக்குத் தாழ்நிலை ஏற்பட்டது.
- மொழி உணர்வுக்கு மதிப்பு அளிக்கப்படுவது உண்மையாயின், ஒரு மொழி எத்தனை சதவிகிதத்தினரால் பேசப்படுகிறது என்ற ஆராய்ச்சியே தேவை அற்றது.
- தமிழில்தானே வாதாடினாள் கண்ணகி. தமிழில்தானே ஆணைகள் பிறப்பித்தார்கள் அரசர்கள். நாம் புதிதாக எதையும் செய்ய வேண்டியதில்லை. இருந்ததைப் பெற்றால் போதும்.
- இசை இன்பம் தரவேண்டுமென்றால் யார் முன்னால் பாடல் பாடப்படுகிறதோ, அது அவர்கள் புரிந்து கொள்ளக் கூடிய மொழியில் இருக்க வேண்டும்.
- தமிழ், தமிழ்ப்பேச்சு, தமிழ் எழுத்து, தமிழ்ப் புலவர், தமிழ்ப் புத்தகங்கள் என்றால் ஏதோ வேறு வழியற்றவன், விதியற்றவன் தமிழைக் கட்டியழுகிறான் என்றிருந்த காலம் மாறி, இன்று தமிழன், தமிழினம், தமிழகம், தமிழ்நாடு என்றெல்லாம் போற்றப்படும் நிலை உண்டாகி இருக்கிறது.
- தாய்மொழிப்பற்று யார் தடுத்தாலும், யார் மறுத்தாலும் அடங்கி விடாது; பொங்கித்தான் வழியும். தேசியத்தைப் பேசித் தாய்மொழிப் பற்றைக் குறைத்துவிட முடியாது.

தாய்மொழியாம் தமிழ்மொழி மீது மாறாத பற்றுக் கொண்ட இப்படிப்பட்ட ஒரு மாமனிதரை முதலமைச்சராகப் பெற்றிருந்ததை எண்ணிப் பெருமை கொள்வோம். அவருடைய படைப்புகளைப் பாதுகாத்து அவற்றைப் பற்றிய திறனாய்வுகளை வெளிக்கொணருவோம்.

## 2.3 பெண்ணியச் சிந்தனைகள்

இறைவனின் அற்புதப் படைப்புகள் ஆணும் பெண்ணும். இருவருமே சம அளவில் முதன்மை நிலை வாய்ந்தவர்கள். இதைத்தான் சிவம் பாதி, சக்தி பாதி என்று புராணங்கள் கூறுகின்றன. அரசு அமைப்புச் சட்டம் மகளிருக்குச் சம உரிமை வழங்கியிருக்கிறது. 'பட்டங்கள் ஆள்வதும், சட்டங்கள் செய்வதும் பாரினில் பெண்கள் நடத்த வந்தோம், எட்டுமறிவினில் ஆணுக்கிங்கே பெண் இளைப்பில்லை காணென்று கும்மியடி' என்று பாடினான் மகாகவி சுப்பிரமணிய பாரதி.

வீட்டிற்குள் முடங்கிக் கிடந்த பெண் சமுதாயம் வெளிஉலகில் தன்னுரிமையோடு வலம் வருவதற்கு வித்திட்ட போராட்டங்கள் பலப்பல. 19ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட தொழிற்புரட்சியின் காரணமாக, பெண்கள் தொழிற்சாலைகளில் அடியெடுத்து வைத்தபோது எண்ணற்ற சிக்கல்களை எதிர்நோக்க வேண்டியிருந்தது. 1870ஆம் ஆண்டு மார்ச் 8ஆம் நாள் அன்று நியுயார்க் நகரில், பஞ்சாலைகளில் 16 மணி நேரம் உழைத்து வந்த ஆயிரக்கணக்கான பெண்கள், வீதியிலிறங்கி 8 மணிநேர வேலை கோரி, வீரஞ்செறிந்த போராட்டத்தை நடத்தினர்.

'எட்டு மணி நேர வேலை' என்னும் பொருளாதாரக் கோரிக்கையையும், வாக்கு உரிமை என்னும் அரசியல் கோரிக்கையையும் முன்வைத்து உருவான உழைக்கும் பெண்கள் நாள்தான், காலப்போக்கில் 'உலகப் பெண்கள் நாள்'ஆக உருமாறி இன்று அரசியல், சமூக, பொருளாதார வழியாகப் பெண்களின் சாதனைகளைக் கொண்டாடும் அனைத்து நாட்டுப் பெண்கள் நாள் ஆக ஆண்டுதோறும் மார்ச்சு மாதம் 8ஆம் நாள் கொண்டாடப்படுகிறது.

பெண்களைப் போற்றுவதும், மதிப்பதும் பாரதத்தின் பண்பாடு. கல்விக்குக் கலைமகள், செல்வத்திற்கு இலட்சுமி, வீரத்திற்கு மலைமகள் என்று அனைத்துச் செல்வங்களுக்கும் பெண்பால் கடவுளர்களையே அதிபதிகளாகச் சித்திரித்துள்ளனர். நதிகளுக்கும் கங்கை, யமுனை, காவேரி என்னும் பெண்பால் பெயர்களையே சூட்டியுள்ளனர்.

அரசியல் உரிமைக்காகக் களம் இறங்கிய சான்சிராணி, இலட்சுமிபாய், கல்வி உரிமைக்காகப் போராடிய முத்துலட்சுமி ரெட்டி,

அண்ணல் காந்தியாரோடு அரும்பணியாற்றிய தில்லையாடி வள்ளியம்மை, இலக்கியத் தளத்தில் சாதனை படைத்த சரோசினி நாயுடு, விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்ட அன்னிபெசன்ட், புற்றுநோய்க்குத் தீர்வு கண்டு நோபல் பரிசு பெற்ற மேடம் கியூரி போன்றோர் வரலாறு படைத்தவர்கள்.

கருணையுள்ளம் கொண்ட அமைதிக்கான நோபல் பரிசு பெற்ற அன்னை தெரேசா, இசைமேதை எம்.எஸ்., சுப்புலட்சுமி, உலக அளவிலான புக்கர் பரிசைப் பெற்ற அருந்ததி ராய், விண்வெளியில் பறந்து அறிவியல் விளக்காக ஒளிவிடும் கல்பனா சாவ்லா, திகார் சிறையில் சாதனைகள் பல புரிந்த கிரண் பேடி, இசைத்துறையில் ஒளிவீசும் லதா மங்கேஷ்கர், டென்னிஸ் வீராங்கனை சானியா மிர்சா போன்றோர் சாதனை படைத்த, படைத்துக் கொண்டிருக்கும் மங்கையர்களே.

நாட்டின் குடியரசுத் தலைவராக, தலைமை அமைச்சராக, முதல் அமைச்சராக, கட்சிகளின் தலைவர்களாக, பல்கலைக்கழகத் துணை வேந்தர்களாக, இந்திய ஆட்சிப் பணி (ஐ.ஏ.எஸ்.,), இந்திய காவல் பணி (ஐ.பி.எஸ்.,) அதிகாரிகளாக, மருத்துவத் துறை அதிகாரிகளாக, விஞ்ஞானிகளாக, உலகப் புகழ்பெற்ற நிறுவனங்களில் இயக்குநர்களாகப் பல்வேறு துறைகளிலும் உயர் பதவிகளைப் பெண்கள் ஏற்று சாதனை புரிந்து வருகின்றனர்.

உலகம் முழுவதும் பல சமூகச் சீர்திருத்தவாதிகள் பெண்களுக்காகப் போராடினர். இந்தியாவில் இராசாராம் மோகன்ராய், மகாத்மா காந்தி, விவேகானந்தர் போன்ற பெருமக்கள் குரல் கொடுத்தனர். தமிழ்நாட்டில் தந்தை பெரியார், திரு.வி.க. போன்ற தலைவர்களும், நீதிபதி வேதநாயகம், சுப்பிரமணிய பாரதியார், பாரதிதாசன் போன்ற சிந்தனையாளர்களும் பெண்களுக்காக வாதாடினர்.

அந்த வரிசையில் திராவிடர் இனத்தில் புரட்சியை ஏற்படுத்த முயன்ற அண்ணா, பெண்களின் விடுதலையிலும் அக்கறை காட்டினார். பெண்களின் முன்னேற்றமே நாட்டின் உண்மையான முன்னேற்றம் என்பதை உணர்ந்த அண்ணா தம்முடைய மேடைப் பேச்சுகளிலும், கட்டுரைகளிலும், சிறுகதைகளிலும் பெண்களின் நிலை, பெண்கள் விடுதலை குறித்துப் பல்வேறு கருத்துகளை வலியுறுத்தியுள்ளார். பெண் விடுதலைக்கான பேரறிஞர் அண்ணாவின் சிந்தனைகளும் செயல்களும் போற்றுதலுக்கும் பின்பற்றுதலுக்கும் உரியன.

பெண்ணியம் என்றாலே ஆண்களை எதிர்ப்பது என்கிற எண்ணம் சமூகத்தில் பரவலாக நிலவி வருகின்றது. உண்மையில் பெண்ணியத்தின் நோக்கம் அதுவன்று. காலம் காலமாக அடிமைப்பட்டு, வதைப்பட்டு வாழும் பெண்களை அடிமைத் தளையிலிருந்து மீட்டு அவர்களுக்குக் கல்வியின் மூலம் விழிப்புணர்வு ஊட்டிச் சமூகத்தில் ஆண்களுக்குச் சமமான மதிப்பினைப் பெற்றுத் தருவதே பெண்ணியத்தின் நோக்கமும் செயற்பாடும் ஆகும்.

1. பெண்களின் உரிமை குறித்து அண்ணா

ஆணும் பெண்ணும் சம உரிமையோடு வாழ்கின்ற சமுதாயத்தில்தான் முன்னேற்றம் ஏற்பட முடியும் என்பது பேரறிஞர் அண்ணாவின் கருத்தாகும்.

> ''ஆளப் பிறந்தவர்கள் ஆண்கள் என்று கூறுகின்ற சமயங்கள் ஒழிக்கப்பட வேண்டியவை.''

என்று அவர் கூறியுள்ளார்.

> ''பெண்கள் வெறும் கூண்டுக் கிளிகளாக இருக்கும் மட்டும் நாட்டு வாழ்வு நிமிராது, நல்ல நிலை ஏற்படாது.''

என அவர் உறுதியாக எண்ணினார்.

பேரறிஞர் அண்ணா பெண்களுக்கு வேண்டியதும், வேண்டாததும் எது எதுவென்று பட்டியலிட்டுக் குறிப்பிடுகையில்,

> ''பெண்களுக்கு அடக்கம் இருக்க வேண்டும். ஆனால் அசடாக இருக்கக் கூடாது. பக்தி இருக்க வேண்டும். ஆனால் போக்கிரித்தனம் கூடாது. அழகு இருக்க வேண்டும். ஆனால் ஆளை மயக்கும் நோக்கம் இருக்கக் கூடாது. படிப்பு இருக்க வேண்டும். ஆனால் பகட்டு இருக்கக் கூடாது. முழு உரிமை இருக்க வேண்டும். ஆனால் மூடச்செயல்களுக்குப் பயன்படுத்தக் கூடாது.''

என்று பெண்களின் உரிமையை மிக எளிமையாக எடுத்துரைக்கின்றார். மேலும்,

> ''பெண்கள் குழந்தை பெற்றெடுக்கும் இயந்திரமாக இருக்கக் கூடாது; உயர்ந்த பதவியினை ஏற்று, நாட்டை ஆளக்கூடிய அளவிற்கு நிருவாகத் திறமையினை வளர்த்துக் கொள்ள முன்வரவேண்டும்.''

என்னும் கருத்தையும் தெளிவுபடுத்துகிறார்.

ஒரு சமுதாயம் மேன்மை பெறுவதிலும், சிறுமை அடைவதிலும் பெண்ணிற்குச் சரிபங்குக் கடமையுண்டு என்பதை மறுப்பதற்கில்லை என்பதைக் கருத்தில் கொண்டு பெண்களின் சமஉரிமைக்கு அன்றே அடிக்கல் நாட்டினார் அண்ணா.

> ''பெண் கல்வி, நாட்டில் எந்த அளவுக்கு உயருகிறதோ அந்த அளவு நாடு மேம்பாடு அடைகிறது.''

என்று அண்ணா அறைகூவல் விடுத்தார். பெண்களின் முன்னேற்றத்திற்கும், வளமான வாழ்விற்கும் தடைகளாக உள்ள பல்வேறு சிக்கல்கள் குறித்து ஆராய்ந்து பெண்களின் அடிமை உணர்வையும், ஆண்களின் ஆதிக்க அடக்குதலையும் எடுத்துக் காட்டிச் சமுதாயம் சீர்படப் பெண்களுக்கு அடிப்படை உரிமை தேவை என்று வேண்டினார்.

அண்ணா தம் படைப்புகளில் பெண்களின் அவலங்களாகக் குழந்தை மணம், பொருந்தா மணம், கட்டாய மணம், முறையற்ற காதல், காதலில் தோல்வி, விலை மகளிர், வரதட்சணை, சாதித் தொல்லை, கைம்பெண் (விதவை) நிலை ஆகியவற்றைச் சுட்டிக்காட்டி அவற்றிலிருந்து விடுபட ஒட்டுமொத்த சமுதாயமும் பணியாற்ற வேண்டும் என்று கூறினார்.

2. சமுதாயத்தில் மகளிர் பங்கு

பெண்கள் போலி விளம்பரத்தை நம்பி ஏமாற்றம் அடையாமல் நாட்டு நிலையறிந்து செயல் ஆற்றவும் ஆயத்தமாக இருத்தல் வேண்டும். அதற்கேற்றவாறு அறிவுத்திறனையும், பொருள் செல்வத்தையும் சேர்த்துக் கொண்டு செயல்புரிய முன்வந்தால் சமுதாயம் முன்னேற்றமடையும் என்பது அண்ணாவின் கருத்து.

சமுதாயத்தில் மகளிர் பங்கு குறித்து அண்ணா குறிப்பிடுகையில்:

> ''சமூகத்தின் ஓர் அங்கம் (உறுப்பு) குடும்பம். இது அன்பின் அடிப்படையில் அமைய வேண்டும்.''

என்பது அண்ணாவின் விருப்பமாகும்.

இக்கருத்தை வலியுறுத்தும் வகையில் கதைகள், கட்டுரைகள், துணுக்குகள் முதலானவற்றை இதழ்களில் வெளியிட்டு வந்தார். திருமணம் என்பது இரண்டு இதயங்களை இணைப்பதாக அமைய வேண்டுமென வலியுறுத்தினார். அன்பால் இணைந்த குடும்பங்கள் அமைந்தால் சமுதாயம் சீராக மேம்பட்டு ஒட்டுமொத்தமாகச் சமுதாயம் முழுவதற்கும் நன்மை பயக்கும். என்று கூறினார்.

சமுதாயத்தில் ஆடவராகப் பிறந்துவிட்ட ஒரே காரணத்திற்காக அவரால் இழைக்கப்படுகிற துன்பங்களை எல்லாம் பெண்கள்

பொறுமையுடன் ஏற்றுக் கொண்டு செயல்பட வேண்டும் என்னும் கருத்து நிலவி வருகிறது. ஒவ்வொரு ஆணும் பெண்ணின் மனவியல்பினை அறிந்து ஒன்றுபட்டு, வாழ்க்கையை நடத்த வேண்டும். இல்லையேல் இருவரிடையேயும் காழ்ப்புணர்ச்சி ஏற்படும். இதேபோன்று பெண்களும் தங்கள் உரிமையைப் பற்றி மட்டுமே பேசிக் கொண்டிராமல் தம் கடமைகளையும் உணர்ந்து செயல்பட வேண்டும் என்பது அண்ணாவின் கருத்தாகும்.

> ''உரிமை உரிமை என்று கேட்டுக் கொண்டிருப்பதால் மட்டும் உயர்வு வந்துவிடாது. உரிமை வேண்டும் என்று கேட்கிறபோதே நமக்குக் கடமையைப் பற்றிய எண்ணம் மேலோங்கி நிற்க வேண்டும். 'கடமை என்றால் கல்லானாலும் கணவன், புல்லானாலும் புருசன்' என்பார்களே அதுபோல அல்ல; கணவனுடைய இயல்பறிந்து நடந்து கொள்ள வேண்டும். ஆனால் அடிமையாகிக் கிடக்கக் கூடாது.''

என்னும் சொல்மணிகள் அண்ணாவை அடையாளம் காட்டுகின்றன.

இன்றைய சமுதாயத்தில் திரைப்படம் இன்றியமையாத ஒரு கலையாக வளர்ந்து விட்டது. அது அன்றாட வாழ்க்கையில் நடைபெறும் நிகழ்ச்சியினைப் படம்பிடித்துக் காட்டவல்லது. சமுதாயத்தை மாற்றக்கூடிய ஆற்றல் பெற்றது. சமுதாயத்தைச் சீர்குலைத்து மக்களின் எண்ணங்களை மாற்றி அழிவுப்பாதைக்கு இழுத்துச் செல்லக்கூடிய தீமையும் அதன்கண் காணப்பெறுகிறது. எனவே, நன்மை, தீமைகளை ஆய்ந்தறிந்து மனக்கட்டுப்பாடுடன் செயல்படுமாறு அண்ணா பெண்களுக்கு அறிவுரை வழங்கியுள்ளார்.

### 3. நாட்டின் மேன்மை பெண் கல்வி

> ''பெண்களுக்குக் கல்வி முக்கியம். படித்த ஆண்கள் தவறான வழியில் செல்லும்போது படிப்பறிவில்லாத பெண்கள் கூட அவர்களைச் சரியான வழிக்குத் திருப்பி விடுகிறார்கள். இந்தக் குடும்ப அறிவை எந்தப் பள்ளியிலும் பயிலாமலே அவர்கள் கற்றுக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு முறையான கல்வியறிவு கிடைத்தால் சமுதாயம் உயர்வதற்கும். சந்ததிகளின் வாழ்க்கை சீர்பெறுவதற்கும் மிகுந்த பயனுடையதாக இருக்கும்.
>
> மேலை நாடுகளில் நூற்றுக்கு அறுபது பேர், எழுபது பேர், எண்பது பேர், தொண்ணூறு பேர் என்று படித்தவர்களாக இருக்கிறார்கள். ஆனால் நம் நாட்டில் நூற்றுக்கு அறுபது பேர் எழுத்தறிவற்றவர்களாக இருக்கிறார்கள். ஆனால்

> நூற்றுக்கு எண்பது பேர் அறிவுள்ளோர் வாழும் நாட்டு மக்கள் நம்மை மதிக்கவேண்டுமென்று நாம் எண்ணுவதற்கு நாம் மெத்த துணிச்சல்காரர்களாகத்தான் இருக்க வேண்டும்.''

என்று கல்வியறிவு பெருக்கிக் கொள்ள வேண்டியதன் கட்டாயத் தேவையை மறைமுகமாகக் குறிப்பிடுகிறார்.

> ''ஒருநாட்டின் வளர்ச்சியைக் கணக்கு எடுக்கின்றபோது அங்கே எத்தனை தொழிற்சாலைகள் உள்ளன என்று பார்ப்பதைவிட அங்கே எத்தனை பேர் படித்திருக்கிறார்கள் என்று பார்த்து அதை வைத்து அந்த நாட்டின் முன்னேற்றத்தைக் கணக்கிட்டு விடலாம். இப்படி பள்ளிகள் பெருகுவதும், பள்ளிகளில் இடநெருக்கடி ஏற்படுகின்ற அளவுக்குப் படிக்கின்ற ஆர்வம் பெருகுவதும் ஒரு நாட்டின் முன்னேற்றத்துக்கு நல்ல அறிகுறிகள் ஆகும். இதைச் செய்வது ஓர் அரசினுடைய வேலை என்பதாக மட்டும் இருந்துவிடாமல் வசதி வாய்ப்பு உடையவர்கள் இப்படிப்பட்ட அறிவாலயங்களைத் துவக்குவதில் ஈடுபடவேண்டும்.''

என்று அண்ணா அழைப்பு விடுக்கிறார். பெண்களைப் பற்றிய அண்ணாவின் சிந்தனைகள்:

- இருண்ட இந்தியாவில் எத்தனை முறை வேண்டுமானாலும் ஆண்மகன் திருமணம் செய்து கொள்ளலாம். ஆனால் கணவன் பிணமானால் மனைவி கைம்பெண் ஆகி விட வேண்டும். விந்தையான இந்த நோய் போகச் சமூகத்தில் உள்ள பித்தம் தெளிய மருந்து தர வேண்டும். அப்போதுதான் அபலைகளை அலைக்கழிக்கும் அந்த நோய் போகும்.
- ஒரே குடும்பத்தின் மணிகளிலே ஒன்று மாணிக்கமாக்கப்பட்டு, மற்றொன்று மண்ணாங்கட்டியாக்கப்படுகிறது. சொத்து, தன்னுரிமை (சுதந்திரம்) ஆணுக்கு! சமையலறையில் வேகவும், படுக்கை அறையில் சாயவும் பெண்!
- அவலங்களுக்கு ஆளான அபலைகளைக் கொண்டு நீதி வழங்கச் சொன்னால் கண்ணியமானவர், நாணயக்காரர் என்றெல்லாம் புகழப்படுபவர்கள் கடுந்தண்டனை பெறவேண்டி நேரிடும்.
- கணவனை இழந்த காரிகைதான் என்றாலும், கணவன் இறந்தான் என்று அழுது புலம்பாமல் நீதிக்குப் போராடிய கற்புத் தெய்வம் கண்ணகி.

## 4. நிறைவாக . . .

உலக அளவில் சட்ட வழியாகப் பெண்களுக்கு கூடுதல் உரிமைகளைக் கொடுத்திருக்கும் நாடுகளில் இந்தியாவும் ஒன்று. எனினும் பெண்கள், குறிப்பாக நாட்டுப்புறப் பெண்கள் இன்றும் அடிப்படை உரிமைகள் மறுக்கப்பட்டவர்களாகவே வாழ்ந்து வருவது துயருக்குரியது. பெண்களுக்கு எதிரான கொடுமைகள், தாக்குதல்கள் பற்றிய செய்தி இல்லாத நாளே இல்லை எனச் சொல்லும் அளவுக்குப் பெண்கள் ஏமாற்றப்படுவதும், அவமானப் படுத்தப்படுவதும், வேதனைக்கு உள்ளாக்கப்படுவதும், வதை செய்யப்படுவதும், சுரண்டப்படுவதும், கற்பழிக்கப்படுவதும், கொலை செய்யப்படுவதும் தொடர்கதையாகவே உள்ளன.

சமுதாயம்- பெண்களை வீட்டில் சம்பளம் இல்லாமல் வேலை செய்யும் ஒரு வேலைக்காரியாகவும், பிள்ளைகளைப் பெற்றுத் தரும் பதிவு செய்யப்பட்ட இயந்திரமாகவும் கருதுகின்றது. பெண் என்பவள் காலம்காலமாக உடல் வழியாகவே பார்க்கப்பட்டு வருகிறாள். பெண்கள் எத்தனை அருஞ்செயல்கள் புரிந்தாலும் அறிவாளிப் பெண் என்பதைவிட அழகான பெண் என்பதற்கே முதன்மை நிலை தரப்பெற்று வருகிறது.

பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் எனப் பெண்ணின் பருவங்களை நம்முடைய இலக்கியங்கள் வரிசைப்படுத்துகின்றன. இந்த ஒவ்வொரு பருவத்திலும் மகளாய், தமக்கையாய், தங்கையாய், தோழியாய், மனைவியாய், தாயாய், பாட்டியாய்ப் பல்வேறு நிலைகளில் சிறப்புகளைப் பெற்றாலும் பெண்கள் வன்முறைக்கு ஆளாக்கப்படுவது தொடர்கதையாகத்தான் இருக்கிறது.

'ஆணும் பெண்ணும் சமம்' என்கிறது அரசமைப்பு சட்டம். ஆண் உயர்ந்தவன், பெண் தாழ்ந்தவள் என்கிறது சமூகச் சட்டம். அது கூடாது. ஆணாக இருந்தாலும், பெண்ணாக இருந்தாலும் அவர்களின் தரத்தைத் தாழ்த்தாமல் வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்துவதே உண்மையான மேன்மையாக இருக்கும்.

பெண் குழந்தைகளுக்கு எதிரான ஓரவஞ்சனை மனப்பான்மையை ஒழிப்பதற்கும், பெண் குழந்தைகளின் முன்னேற்றத்திற்கும் இடையூறாக உள்ள தடைகளைத் தகர்ப்பதற்கும் நாம் ஒவ்வொருவரும் உறுதி பூண வேண்டும்.

> ''பெண்களின் மேம்பாடு சமுதாய மேம்பாடு. சமுதாய மேம்பாடு நாட்டின் மேம்பாடு. நாட்டின் மேம்பாடு நம் அனைவரின் மேம்பாடு.''

என்னும் அண்ணாவின் சிந்தனைகளை மனத்தில் கொண்டு பெண்கள் முன்னேற்றத்திற்குப் பாடுபடுவோமாக!

## 2.4 பகுத்தறிவுச் சிந்தனைகள்

சமுதாயத்தில் தமக்கென ஒரு கொள்கையை வகுத்துக் கொண்டு செயல்வெற்றி படைத்தவர் அண்ணா. மூடநம்பிக்கையின் காரணமாகப் பல உண்மைகளைத் தெரிந்து கொள்ளாமல், அச்சம் காரணமாக ஒதுங்கி வாழ்ந்த மக்களைத் தம்முடைய பகுத்தறிவின் துணைகொண்டு விழிப்படையச் செய்த தந்தை பெரியார் அவர்களின் பகுத்தறிவுத் தொண்டர்களுள் அண்ணாவுக்கு முதலிடம் உண்டு.

அண்ணாவின் பகுத்தறிவு வாதம் என்பது அடிப்படை உண்மை நெறிகளை மறுப்பது என்பதில்லை. போலித்தனமான எண்ணங்களையும், செயல்களையும் அழித்தொழிப்பதுதான் பகுத்தறிவு வாதமாகும்.

### 1. பகுத்தறிவு என்பதன் விளக்கம்

பகுத்தறிவு என்பது அடிப்படை உண்மைகளை, நெறிகளை மறுப்பது அன்று. எந்த ஒன்றையும் ஆய்ந்தறிந்து உண்மை நிலையைக் காண்பதாகும். போலித்தனமான எண்ணங்களை, மடமைச் செயல்களை ஒழிப்பது தான் "பகுத்தறிவு" ஆகும்.

பக்தி என்பது அறிவுக்குப் பொருந்தும் அளவுடன் இருக்க வேண்டும். அளவுக்கு மிஞ்சினால் அது வாழ்க்கையை அழித்து விடும் என்பது அண்ணாவின் கருத்து. "பிள்ளையாரையும் உடைக்க மாட்டேன் பிள்ளையாருக்குத் தேங்காயும் உடைக்க மாட்டேன்" என்று அண்ணா கூறியிருப்பதன் மூலம் அவருடைய கடவுள் கொள்கை எத்தகைய தன்மையுடையது என்பதை அறிந்து கொள்ள முடியும்.

> ''நெருப்பு வேண்டுமா? வேண்டாமா? என்று கேட்டால் என்ன பதில் சொல்வது? நிச்சயமாக வேண்டும் அடுப்புக்கு; அடுப்புக்குப் பயன்பட வேண்டிய நெருப்பு வீட்டுக் கூரையைப் பிடித்துக் கொண்டால் என்ன செய்வோம்? அக்னிதேவன் திருவிளையாடல் என்றா கூறுவோம்? மக்களில் பலர், கடவுள் பெயரைச் சொல்லிக் கொண்டு தம்முடைய பொருளைச் செலவிட்டுப் பிறகு வாழ்க்கையை நடத்த இயலாமல் வறுமையில் உழன்று துன்பப்படுகின்றனர். எனவே மக்கள் சிந்தித்துப் பகுத்துணர்ந்து செயல்பட்டால் உண்மை வழிபாடு போற்றப்படும், மதிக்கப்படும்.''

என்று எடுத்துரைக்கின்றார்.

## 2. அறியாமை எனும் இருள்

தமிழ்ச் சமூகம் பல்வேறு நிலைகளில் அடிமைப்பட்டு வாழ்வதற்கு அறியாமைதான் காரணம் என்பது அண்ணாவின் தெளிவான கருத்து. அறியாமைதான் ஒரு சமூகம் தாழ்வுறக் காரணமாக இருக்கின்றது என்பதை உணர்ந்தார் அண்ணா. இந்த அறியாமைக்கு மூலமாக இருப்பது மூட நம்பிக்கைகள் மீது மக்கள் கொண்டிருந்த எண்ணங்கள்தாம் எனக் கண்டு கொண்டார். ஆகவே அண்ணா தம் வாழ்நாள் முழுவதும் மூடநம்பிக்கை ஒழிப்புப் பணியில் ஈடுபட்டார்.

இறைவன் பெயரால் சடங்குகளும், சாதியின் பெயரால் உயர்வு தாழ்வுகளும் தோன்றி மக்களின் அறிவை அடிமைப்படுத்திப் பண்பாட்டை அழித்து ஆதிக்கம் செலுத்தி வரும் ஆரியத்தின் சாதிமுறை விளைவுகள் தாம் பெரும்பான்மையான மூடநம்பிக்கைச் செயல்கள் என அண்ணா கூறுவதன் மூலம் மூடநம்பிக்கைகள் மீது அவருக்கிருந்த வெறுப்பினை உணர முடிகிறது.

## 3. வாழ்க்கை நெறி

'யாதும் ஊரே, யாவரும் கேளிர்', 'எல்லோரும் ஓர் இனம் எல்லோரும் ஓர் நிறை' எனும் இலக்கிய வரிகள் தமிழர்தம் உயரிய சிந்தனையைத் தரணிக்கு உணர்த்துவனவாகும்; உலக ஒற்றுமைக்கு வித்திட்ட வைர வரிகளாகும். இத்தகைய ஒற்றுமையினைச் சீர்குலைக்கும் வகையில் இடையில் எங்கோ இருந்து நுழைந்த ஆரியம், தன்னலம் காரணமாக உயரிய சிந்தனையைச் சிதைத்தது. பல கடவுளர்களையும் ஏற்படுத்திச் சமுதாயத்தில் சாதி வேற்றுமையினைத் தோற்றுவித்தது. சமூகத்தின் ஒற்றுமையை வேராறுக்கும் இத்தகைய கொள்கைகளைப் பொய்யாக்கும் விதத்தில் அண்ணாவின் சமுதாயப் பணி அமைந்திருந்தது. அப்பணியின் விளைவாக, திருமூலரின் 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' எனும் உயர் நெறியை ஏற்றுக் கொண்டார். அதனை மேடைகள் தோறும் முழங்கினார்.

## 4. தன்மானக் கொள்கை

பகுத்தறிவின் துணைகொண்டுதான் சமூகத்தில் புரையோடிப் போயிருக்கும் ஏற்றத் தாழ்வுகளையும், பிரிவினைகளையும் போக்க இயலும் என அண்ணா எண்ணினார். பகுத்தறிவுத் தந்தை பெரியாரின் சுயமரியாதைக் கொள்கையை ஏற்றுக் கொண்டார். பகுத்தறிவுச் சொற்பொழிவுகளை நிகழ்த்தி அறியாமை எனும் இருளைப் போக்கப் பாடுபட்டார்.

## 5. சடங்கு

தமிழ்நாட்டிலுள்ள எல்லா மதத்தாரும் சடங்கு முறையை வகுத்துக் கொண்டு அவரவர்க்கேற்ற முறையில் பின்பற்றி

வருகின்றனர். இந்துக்கள் இரதம் இழுப்பது, பால்குடம்-சந்தனக்குடம் எடுப்பது, தேங்காய் உடைத்தல், ஆன்மீகப் பெருமக்களை வழிபடுவது, முன்னோர் வழிபாடு, கருவிகளை வழிபடுதல், பேய்-பிசாசு வழிபாடு, வீர வணக்கம், மரங்களை வழிபடுவது, உயிரின வழிபாடு எனப் பல்வேறு சடங்குகளைச் செய்து வந்தனர்.

சமுதாயத்தில் நிலவி வருகிற பொருளற்ற சடங்கின் வாயிலாகக் காலத்தையும், பணத்தையும் வீணாக்குகிற மக்களுடைய மனத்தை மாற்ற அண்ணா பல பரப்புரை(வன்)முறைகளைக் கையாண்டார். எழுத்தையும், பேச்சையும் பயன்படுத்தினார்.

பகுத்தறிவின் காரணமாகச் சமுதாயத்தில் நல்ல மாற்றங்கள் நிகழ்ந்து வருகின்றன. இருப்பினும் மக்கள் மந்திரக்காரரின் சொற்பொழிவில் மயங்கி விடுகின்றனர். சடங்கு என்கிற பெயரால் மூடநம்பிக்கைகளைப் பின்பற்றுகின்றனர். இம்மாற்றம் நிலையானதன்று. மக்கள் விழிப்படைந்து மந்திரக்காரரின் முகத்திரையை விலக்கிச் சமுதாயத்துக்கு அடையாளங் காட்ட வேண்டும் என்று கூறினார். இதன் தொடர்பாக அண்ணா கூறுகையில்;

> ''அநேக நாட்களாக மந்திரக்காரர்கள் பாமர மக்களை ஏமாற்றி 'நான் அது செய்கிறேன், இது செய்கிறேன். உமது எதிரிகளைக் கொன்று விடுகிறேன். மிட்டாய் தருவித்துக் கொடுக்கிறேன். ரூபாய்கள் தருவித்துத் தருகிறேன்' என்று மக்களிடம் ரூபாய்களைக் கொள்ளையடித்து ஒட்டாண்டிகளாக்கிக் கொண்டு திரியும் புரட்டர்களிடமிருந்து மக்களைத் தப்புவிப்பதற்கும் இதுகாறும் பொருட்களையும் நாட்களையும் அறிவையும் இழந்து புண்பட்டிருப்பதை ஆற்றுவதற்கே யன்றிப் புண்படுத்துவதற்கல்ல. இதுவும் நான் மாத்திரம் புதிதாகச் சொல்லிவிடவில்லை, சுயமரியாதைக்காரர் யாவருமே சொல்லுவார்கள்.''

என்று கூறுகிறார்.

### 6. சகுனம் பார்த்தல்

திருமணம் செய்து கொண்டு இல்லறத்தை நடத்தி வரும் தம்பதியர்க்குக் குழந்தை பிறக்கவில்லையெனில் மருத்துவரிடம் சென்று இருவரின் குருதியைச் சோதனை செய்ய வேண்டும். சோதனை செய்து மருந்து சாப்பிட்டு வந்தால் குழந்தை பிறக்க வாய்ப்பு ஏற்படும். சகுனத்தின் பெயரால் பணத்தைச் செலவிட்டு ஏமாற்றமடைவது தேவையற்ற செயல் என்கிறார் அண்ணா. அவ்வாறே பல்லி சகுனம், பூனைச் சகுனம், இராகு காலம் பற்றிய அச்சம் முதலானவற்றைச் சாடியுள்ளார். சகுனங்கள் பற்றி அண்ணாவின் கருத்து ஒன்று வருமாறு;

> ''சகுனங்களில் மக்களுக்கு நிறைய நம்பிக்கை இருந்து வருகிறது. பயணம் தொடங்கும் போது கால் இடறுவது கெட்ட சகுனம். பலர் தங்கள் வீட்டு வாயிலில் நின்றபடியே நல்ல சகுனத்தை எதிர்பார்த்து அது ஏற்பட்ட பிறகே புறப்படுகிறார்கள். காகம் கரைவது விருந்தினர் வரப்போவதற்கு அறிகுறி. சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போதோ, திருமணச் சடங்கின் போதோ விளக்கு அணைவது கெடுதலுக்கு அடையாளம் என்பர். வீட்டிற்குள் மலைப் பாம்பு வருவதும், கிராமத்திற்குள் நரிகளும், முயல்களும் புகுவதும் கெட்ட சகுனங்கள்.''

இத்தகைய மூடச் சகுனங்களை அண்ணா பட்டியலிட்டுக் காட்டியிருப்பதுடன் அவற்றைக் களைந்தாலொழிய சமுதாயம் மேம்பாடு அடையாது என்னும் தம்முடைய கருத்தை உணர்த்தியுள்ளார்.

> மக்களிடையே நிலவும் இந்நிலை மாற வேண்டுமெனில் மூடநம்பிக்கை பற்றிக் கவலை கொள்ளாமல் 'நடப்பவைகள் நல்லவனாக இருக்கட்டும்' என்னும் கொள்கையுடன் அனைவரும் செயல்பட வேண்டும். அதன் மூலம் நாளடைவில் மூடநம்பிக்கை குறைந்து புதியதொரு சமுதாயம் உருவாக வாய்ப்பு ஏற்படும்.

என்பது அண்ணா நல்கும் நல்லுரையாகும்.

### 7. புராணம்

> ''சமுதாயத்தில் குற்றம் புரிவோரைத் தண்டிக்கச் சட்டமும், சிறைக் கூடங்களும் இருக்கின்றன. அதனை விடுத்துச் சாமியார்கள் சிலர் கடவுளின் பெயரைப் பயன்படுத்தி மக்களிடையே கலவரத்தை உண்டாக்குகின்றனர். இதனால் நாட்டில் அமைதி குலைகிறது. சாமியார்களின் செல்வாக்கும், மூட நம்பிக்கைகளும் வளர்ந்த வண்ணமிருக்கின்றன. இந்நிலை மாற வேண்டுமெனில் புராணக் கருத்துகளை அப்படியே ஏற்காமல் உண்மையெனில் ஏற்று, பொய் எனில் விலக்கியும் செயல்பட வேண்டும்.''

என்றார் அண்ணா.

புராணத்தை நம்பும் பழமையாளரை நோக்கி அண்ணா கூறுகையில்:

> ''இன்ப துன்பங்களாகிய இரண்டையும் நுகர்வது இவ்வுலகத்தில் என்றால் இன்ப துன்ப நுகர்ச்சிக்கான மேல்,

கீழ் உலகங்கள் உண்டென உளறுவானேன். சிற்றின்பமும், சிறு துன்பமும் நுகர்வதற்கு இவ்வுலகமும், பேரின்பமும், பெருந்துன்பமும் நுகர்வதற்கு அவ்வுலகங்களும் என்றால், சிற்றின்பங்களையும், சிறு துன்பங்களையும், நுகர்வதற்கு இருவேறு தனித்தனி உலகங்கள் இங்குமிருத்தல் வேண்டுமன்றோ? இன்பம் நுகர்வோரும், துன்பம் நுகர்வோரும் இவ்வுலகத்தில் ஒருங்கிருக்கும் போது பேரின்பப் பெருந்துன்பங்களை நுகர்வதற்கு அங்கும் ஓர் உலகம் இருந்தால் போதாதா, நரக உலகம், மோட்ச உலகம் என்ற இரண்டு உலகம் அங்கு இருப்பானேன், இங்கு மட்டும் ஒன்று இருப்பானேன்?.''

என்கிறார் அண்ணா.

8. இறைக்கொள்கை

மக்கள் தாங்கள் விரும்பும் கடவுளை வழிபடுவதை அண்ணா குறை கூறவில்லை. கடவுளின் பெயரால் மக்களை ஏமாற்றுவதைத்தான் அவர் கண்டிக்கிறார்.

''கல்யாணச் செலவுக்காகப் பெற்றுவந்த கடன் தொகையைக் கொண்டு காவடி, திருவிழா நடத்தி விட்டால் கல்யாணந்தான் நடக்குமா? பட்ட கடனைத் தீர்க்கத்தான் வழி கிடக்குமா? கந்தன் அருள் கிடைக்கலாம் அங்கே! இங்கே? கடன் கொடுத்தவன் 'பிடிவாரண்டு' அல்லவா அனுப்புவான்!''

என்று சாடுகிறார்.

''மனிதனுக்காகப் பாடுபடும் மாவீரனாக, மனிதனை நேசிக்கும் தோழனாக, மனிதனை மாண்புள்ளவனாக்கும் மகத்தான சேவை செய்யும் நண்பனாகக் கடவுளைக் கொள்வது சாலச் சிறந்ததாகத் தெரிகிறது. அத்தகைய ஈசனை அறிய முடிந்தால் இன்பந்தான்.''

எனத் தம் இறைக் கொள்கையை முன்வைக்கிறார் அண்ணா.

9. உழைப்பே கடவுள்

கடவுளின் பெயரைச் சொல்லிக் கொண்டு மக்களை ஏமாற்றிப் பிழைப்பவரைக் கண்டு மனம் வருந்தினார்.

''உழைப்பை விடச் சிறந்த கடவுள் உலகில் வேறெதுவுமில்லை.''

என்பது அண்ணாவின் கருத்து.

''ஆண்டவனின் பெயரைச் சொல்லிக் கொண்டு மனிதர்கள் மனிதர்களையே ஏமாற்றிக் கொண்டிருக்கிறார்கள். ஆண்டவன் பெயரைச் சொல்லிக் கொண்டு மக்களை இதுவரை ஏமாற்றியது போதும். இனியாவது 'மனிதனே கடவுள்' என்று எவனொருவன் உழைக்கிறானோ அவனே இந்த நாட்டின் கடவுள்.''

என்றார் அண்ணா.

''சமுதாய முன்னேற்றத்திற்கு உறுதுணையாயிருப்பது உழைப்பு. உழைப்பின் பலனை அனைவரும் அறிந்தால்தான் வாழ்வில் ஏற்றம் பெற்றிட முடியும். சிலரின் உழைப்பில் பலர் இன்பங்காண விழைந்தால் அவரின் இல்லற வாழ்வு, சமுதாய உணர்வு தழைத் தோங்காது. உழைப்பாளருக்குக் காலம் விரைவாகப் போகிறது. உழைக்காதவன் வீணே காலத்தைப் போக்குகிறான்.

என்று வேறுபட்ட வகுப்பாரின் நிலையினை எடுத்துரைத்தார் அண்ணா.

''இராமர் காலத்தில் இரயில் கிடையாது, ஆகவே இரயில் கூடாது என்று இந்த நாளில் தள்ளிவிட முடியுமா? அல்லது இராமரே ஏறாத இரயிலில் நாம் ஏறுவதா, என்று இரயிலில் ஏறாமல் இருக்க முடியுமா? அரிச்சந்திரன் காலத்தில் ஆகாயவிமானம் இல்லையென்று விமானம் ஏறாமல் இருக்க முடியுமா? எனவே அந்தக் காலம், அந்தக் காலம் என்று கூறி அவற்றை அப்படியே பின்பற்ற வேண்டும் என்று பிடிவாதம் செய்வதும் பொருத்தமற்றவைகள். எந்தக் காலத்துப் பழக்கமானாலும் சரி, அது இந்தக் காலத்துக்குப் பொருந்துகிறதா? வாழ்க்கைக்குத் தேவையானதுதானா? அறிவுக்கு ஏற்றதா? என்றுதான் நாம் பார்த்துப் பின்பற்ற வேண்டுமே தவிர, அந்தக்காலப் பழக்கம் என்பதற்காகக் கண்ணை மூடிக்கொண்டு எதையும் அர்த்தமற்றும், பொருத்தமில்லாமலும் பின்பற்றக்கூடாது.''

என்றார். அண்ணாவின் இத்தகைய பகுத்தறிவுச் சிந்தனைகள் ஆழ்மனதில் கொள்ள வேண்டியவை.

## 10. அண்ணாவின் சில பகுத்தறிவுச் சிந்தனைகள்

மவுனமாக இருப்பவனை ஊமையென்று கருதுவதும், சண்டையிலே ஒருவன் சேராததாலேயே அவனுக்குச் சக்தியில்லை என்று எண்ணுவதும் முட்டாள்தனமாகும்.

- நீங்கள் யாரென்று கேட்டால் படையாச்சி, பிள்ளை, செட்டியார், கோனார், நாடார், நாய்க்கர் என்று சொல்கிறார்களே தவிர நான் தமிழன், திராவிடன் என்று சொல்வதில்லை. இடைக்காலத்தில் கட்டிவிடப்பட்டவையே சாதிகள்.

- அறம் ஆப்பரிக்காது. அத்து மீறிய செயலுக்கு மக்களைச் செலுத்தாது. அதன் பயணம் விரைவாக இராது. ஆனால் தூய்மையானதாக இருக்கும். அறம் வெல்லும்; நிச்சயமாக வெல்லும். ஆனால் கடுமையாகக் காணிக்கைகளைக் கேட்கும்!

- தீண்டாதவர்கள் ஊரார் சொத்தைத் தீண்டியதில்லை; வஞ்சனையைத் தீண்டியதில்லை; சூது சூழ்ச்சியைத் தீண்டியதில்லை; பாபத்தை தீண்டியதில்லை.

- விடுதலையைப் பெற்றுவிடுவது கூட எளிது. அதைப் பாதுகாப்பது அதைவிடக் கடினம். பாதுகாப்பதுகூட எளிது. விடுதலையில் ஏற்படும் பயன் எல்லோருக்கும் சேரச் செய்வது கடினம்.

- வகை அறியாதவர் அல்லர் பாமரர்; காலம் வரட்டும் என்று காத்திருக்கும் பொறுமைசாலிகள். அறிவற்றவர்கள் அல்லர் மக்கள்; ஆத்திரத்தை அடக்கிக் கொள்ளக் கற்றவர்கள். பிடி சாம்பலாகிப் போனவர்கள் அல்லர் அந்த மக்கள்; நீறு பூத்த நெருப்பாகி நிற்பவர்கள்.

- நெடி வேறு, மணம் வேறு. மணம் மெள்ளக் கிளம்பும்; வேகமின்றிப் பரவும். ஆனால் நீண்ட நேரம் நிலைத்திருக்கும். நெடி சடுதியில் கிளம்பும்; துளைக்கும், பரவும். ஆனால் மிக விரைவிலேயே மடிந்து போகும். கோபம் நெடி போன்றது. பொறுத்துக் கொள்ளும் பண்பு மணம் போன்றது.

- துணிக்கடைக்குச் சென்றால் கண்ணுக்குப் பிடித்தமான எல்லாத் துணிகளையுமேவா வாங்குகிறோம்? அதுபோலத்தான் மனித வாழ்விலும். மனம் நாடுவதோ பல; கிடைப்பதோ ஏதோ ஒன்று.

- என்றாவது ஒருநாள் நமக்கு இடையூறுகள் வரும் என்று எதிர்பார்க்காமல் இருப்பவன் ஏமாளி. ஆனால் சதா அதனையே எதிர்பார்த்து வருந்திக் கிடப்பவன் கோழை.

- போற்றப்பட வேண்டியவை உண்மை, உழைப்பு, உயர்வு. பின்பற்றப்பட வேண்டியவை கனிவு, பணிவு, துணிவு. பேணப்பட வேண்டியவை கடமை, கண்ணியம், கட்டுப்பாடு.

- மாலை தொடுத்தலில் கைத்திறன் முழுதும் காட்டி, காகிதப் பூமாலை தொடுத்தால் என்ன பயன்? மாலைக்கு முதற்பொருள்

மணமுள்ள மலர். அதுபோலப் பேச்சுக்கு முதற்பொருள் பயனுள்ள கருத்துகள்.

சாதியும், மக்களாட்சியும் ஒன்றாக இருக்க முடியாது. மூடநம்பிக்கையும், விஞ்ஞானமும் ஒன்றிணைந்து வாழ முடியாது.

விதியை நம்பி, மதியைப் பறிகொடுத்து, பகுத்தறிவற்ற மனிதர்களாய் வாழ்வது மிகமிகக் கேடு, தீங்கு. நல்ல எண்ணங்களைத் தூவினால்தான் அவை நல்ல பலனைத் தரும். பகுத்தறிவால் பண்படாத எந்த உள்ளத்திலும் நல்லெண்ணத்தை விதைத்தாலும் அது நல்ல விளைவைத் தராது. பகுத்தறிவைப் பயன்படுத்துவதில்லை என்று முடிவு செய்துவிட்ட பிறகு, மனிதனிடம் வாதிடுவது செத்துப்போன மனிதனுக்கு மருந்து ஊட்டுவதற்கு நிகராகும். பாடத்திட்டத்தில் பகுத்தறிவைப் புகுத்தினால்தான் மக்களுக்குப் பழமையிடத்திலுள்ள பாசம் குறையும்; மனதிலுள்ள மாசு நீங்கும்; காலத்திற்குத் தக்கதுபோல கருத்து வளரும். பகுத்தறிவை ஆயுதமாகக் கொண்டவர்களால்தான் வீழ்ந்த சமுதாயத்தை உயர்த்த முடியும். இதுதான் ஒரே படை; கடைசிப் படை! அண்ணாவின் இனச் சிந்தனைகள் இன்றைக்கும் ஏற்புடையதாகத்தாம் இருக்கின்றன.

# 3. பொருளாதாரச் சிந்தனைகள்

நாட்டின் பொருளாதார வளர்ச்சி நிலம், உழைப்பு, மூலதனம், ஆகியவற்றை மட்டுமே சார்ந்தது என்னும் கருத்து பழங்கதையாகி, அறிவுத்திறனே முக்கியக் காரணி என்னும் கருத்து உலகம் முழுவதும் விரைந்து பரவி வருகிறது. அறிவு வளத்தைப் பயன்படுத்தி, பொருள் வளத்தைப் பெருக்கி, மக்களின் வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்துவதே 21ஆம் நூற்றாண்டின் அறிவுசார் பொருளாதாரத்தின் இலக்காகும்.

ஒரு நாட்டின் வளர்ச்சியை அளவிடும் முறை குறித்து அறிஞர்களிடையே ஒருமித்த கருத்து இன்று வரை ஏற்படவில்லை. 'எது வளர்ச்சி' என்பதற்கான விளக்கம் காலந்தோறும் மாற்றம் பெற்று வருகின்றது.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் 'வளர்ச்சி' என்பது தேசிய வருமானம் என்னும் அளவுகோலைக் கொண்டே மதிப்பிடப்பட்டு வந்தது. அதிலும் குறிப்பாகத் தலாவருமானம் உயர்ந்து விட்டதென்றால் அந்நாடு மேம்பட்ட நிலையில் உள்ளதாகக் கருதப்பட்டது. எனவே, தேசிய வருமானத்தை உயர்த்துவதே அரசின் தலையாய கடமை என்று பொருளியல் அறிஞர்கள் வலியுறுத்தி வந்தனர்.

பல நாடுகளில் தேசிய வருமானம் மற்றும் தலாஆள் வருமானம் உயர்ந்த போதிலும் மக்களின் வாழ்க்கைத்தரம் உயரவில்லை; சீரான வளர்ச்சி ஏற்படவில்லை; செல்வந்தர்களுக்கும் ஏழைகளுக்கும் உள்ள இடைவெளி குறையவில்லை.

'வளர்ச்சி' என்பதற்குச் சரியானதொரு பொருள் தேடிக் கொண்டிருந்த தருணத்தில், 1976ஆம் ஆண்டு 'பன்னாட்டுத் தொழிலாளர் அமைப்பு' (ILO) வெளியிட்ட ஓர் அறிக்கையில் 'அடிப்படை வசதிகளை' அனைவருக்கும் கிடைக்கச் செய்வதே வளர்ச்சி எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. உடல்நலம் (சுகாதாரம்), கல்வி, பாதுகாப்பான குடிநீர், உறைவிட வசதி மற்றும் பொது வாழ்வில் பங்கெடுக்க உரிமை, தங்கள் கலாச்சாரத்தை வெளிப்படுத்திக் கொள்வதற்கான தடையற்ற வாய்ப்புகள் ஆகியவற்றை அனைத்து மக்களும் பெறுவதையே அரசுகள் நோக்கமாகக் கொள்ள அந்த அறிக்கை வலியுறுத்தியது.

இப்படி வளர்ச்சி என்பதன் இலக்கணம் படிப்படியாக மாற்றம் பெற்று வருகையில் 1990ஆம் ஆண்டு 'ஐக்கிய நாட்டு வளர்ச்சித்

திட்டம்', 'வளர்ச்சி' என்பது பொருளாதார வளர்ச்சியை உள்ளடக்கியதாக மட்டும் அல்லாமல் மனிதஇன வளர்ச்சியை உள்ளடக்கிய ஒன்றாக இருக்க வேண்டும் என்று 'மனித இன வளர்ச்சிக் குறியீட்டெண்' (Human Development Index) என்னும் புதிய அளவுகோலை அறிமுகப்படுத்தியது. இதுதான் தற்போது நடைமுறையில் இருந்து வருகிறது.

இன்றைய இந்திய சமூகம் பல வகைகளிலும் ஏற்றத் தாழ்வுகளைக் கொண்டுள்ளது. குறிப்பாக, பொருளாதார அடிப்படையிலான ஏற்றத்தாழ்வு இன்னும் இருக்கிறது. அடுத்தடுத்து மேற்கொண்ட முயற்சிகளும் முழுப் பலனைத் தரவில்லை. ஏற்றத்தாழ்வும் அகலவில்லை. எனவே அரசியல் வல்லுநர்கள் பலரும் பொருளாதார அமைப்பு முறைகளில் கவனம் செலுத்தி இன்னும் முயற்சிகளை மேற்கொண்ட வண்ணம் இருக்கின்றனர்.

பேரறிஞர் அண்ணா பொருளாதாரச் சீர்திருத்தங்களிலும் தம் சிந்தனையைச் செலுத்தியுள்ளார். ஒரு நாட்டின் பொருளாதார அமைப்பு முறை எப்படி அமைய வேண்டும் என்பதை அழகாக எடுத்துரைக்கிறார் அண்ணா.

## 1. பொருளாதார அமைப்பு முறைகள்

### முதலாளித்துவம்

பொருளாதார அமைப்பு முறைகளில் முக்கியமானது முதலாளித்துவம். ஒரு நாட்டில், உற்பத்தி அமைப்புகள் யாவும் தனிப்பட்ட மனிதர்கள் கையில் இருப்பது முதலாளித்துவப் பொருளாதார முறையாகும். உடைமை, நிருவாகம், உற்பத்தி, விநியோகம், இலாபம் அனைத்தும் தனிப்பட்ட மனிதர்களுக்குச் சொந்தமானதாக இருக்கும் என்பதுதான் முதலாளித்துவக் கொள்கையின் அடிப்படை. இத்தகைய ஒரு பொருளாதார அமைப்புக்குச் சிறந்த எடுத்துக்காட்டு அமெரிக்கா.

முதலாளித்துவச் சமுதாயம் என்பது முதலாளிகளால் மட்டும் ஆக்கப்பட்ட சமுதாயம் அன்று. அது முதலாளிகளை ஒரு புறமும், ஏழைகளை ஒரு புறமும் பிரித்து, அந்நிலையிலும் அவர்களை நீடித்து நிற்கவிடாமல் ஓயாது சுழற்றிக் கொண்டே இருக்கும் முறை ஆகும். முதலாளித்துவம் என்பது பணம் மிகுந்தவர்க்கு ஒரு நியாயத்தையும், பணம் இல்லாருக்கு ஒரு நியாயத்தையும் வழங்கக் கூடியது. இதனை உணர்த்தும் கதைகளையும் அண்ணா படைத்துள்ளார். முதலாளித்துவம் ஒழிந்தால் மட்டுமே சமூகம் சீர்படும் என்னும் தம் கருத்தைச் சிறுகதைகளில் வெளிப்படுத்தியுள்ளார் அண்ணா.

முதலாளித்துவமுறை, ஏழை, பணக்காரர் என்னும் வேறுபாட்டுக்கு அடித்தளம் அமைக்கும் முறையாகும். பதுக்கல்,

சுரண்டல், ஏய்த்தல் முதலான தீமைகளுக்கும் இதுதான் காரணம். முதலாளித்துவ முறையில் இன்பம் கண்டோர் இம்முறையை நீட்டிக்க வைப்பதில் தனிக் கவனம் செலுத்துவர். முதலாளித்துவ முறையால் பயனடைந்தோரும், பயனடைய விரும்புவோரும் சேர்ந்துகொண்டு முதலாளித்துவமுறைப் பொருளாதார அமைப்புக்கு ஆதரவாகத்தான் இருப்பார்கள்.

> ''முதலாளித்துவம் செல்வந்தர்களைத்தான் மேலும் செல்வம் உடையவர்களாக்குகிறது. ஆதலால் தனியார் உடைமையை ஆதரிக்கும் இப்பொருளியல் கொள்கையை அண்ணா எதிர்த்தார். நாடு பணக்காரர்கள் கையில் சிக்கிக்கொண்டுள்ளது. அவர்களிடமிருந்து நாட்டை விடுவிக்க வேண்டும். அதற்காக மக்களைத் தயார் செய்ய வேண்டும். செல்வந்தர்களால்தான் பெரிய குற்றங்கள் விளைகின்றன. ஆள்வோர் போக்கு அச்செல்வந்தர்களுக்குத் துணையாக இருக்கிறது.''

என்று எடுத்துக்கூறி முதலாளித்துவத்தைக் கண்டனம் செய்வார் அண்ணா.

### அறக்கட்டளை (தருமகருத்தா) முறை

செல்வந்தர்களிடம் சேர்ந்துள்ள செல்வம் ஏழைகளுக்காக ஆண்டவனால் ஒப்படைக்கப் பெற்றது. செல்வந்தர்கள் அவற்றை நிருவகித்து, ஏழைகளுக்காகச் செலவிடும் தருமகர்த்தாக்கள் ஆவர். அவர்களிடம் சேர்ந்துள்ள செல்வம் அவர்களுக்காக அன்று என்பது அறக்கட்டளை (தருமகருத்தா) முறைப் பொருளாதார அமைப்பின் சாரம். காந்தியடிகள் வலியுறுத்தி வந்த பொருளாதார முறை இதுதான். ஆனால் இந்த முறையையும் அண்ணா ஏற்கவில்லை. ஒன்றிரண்டு தருமகருத்தாக்கள் நெறி தவறாது நடந்து கொண்டாலும் சமூக அமைப்பு மாறாது என்பது அண்ணாவின் கருத்தாகும். தருமகருத்தா முறையை ஆதரிப்பவர்கள்

> ''இல்லாதார் இன்னல்களை உடையவர்கள் துடைத்து விடுவார்கள் என்று உபதேசம் பேசி வருவது, கண்ணைப் பறித்துவிட்டுக் கைக்கோல் தருவதற்கு ஒப்பாகும்.''

என்கிறார் அண்ணா.

### பொருளியல் சமநீதி (சோசியலிசம்)

பேரறிவாளர்கள், 'மனிதன் வாழப் பிறந்தவன், எல்லாம் எல்லோருக்கும் என்றே உளது'- என்னும் அடிப்படையைக் காட்டிச் சோசியலிசம் என்ற சமநீதிப் பொருளாதாரத்தை உருவாக்கினார்கள். சோசியலிசத்தின் அடிப்படை எதுவென்றால், 'தொழில்கள்

உற்பத்தியைப் பெருக்க வேண்டும், அந்த உற்பத்தி மக்களின் வசதிகளை அதிகப்படுத்தப் பயன்பட வேண்டுமேயன்றி, முதலாளிகளின் இலாபத்தைப் பெருக்கிடப் பயன்படக்கூடாது' என்பதுவேயாகும்.

சோசியலிசம் பற்றிப் பேசி வந்த காங்கிரசுக் கட்சியைப் பார்த்து அண்ணா இப்படி கூறுகிறார்:

> "பணம் ஒரு சிலரிடம் போய்க் குவிந்து கொள்வதற்கான வழியை அமைத்துக் கொடுத்து விட்டு, காங்கிரசுக் கட்சி சோசியலிசம் பேசுவது என்பது, 'கன்றுக்குட்டி இறந்த பிறகு வைக்கோலால் செய்த உருவத்தின் மீது அதன் தோலைப் போர்த்தி வைத்து, அதைக் காட்டிப் பசுவை ஏய்த்துப் பால் கறந்திடும் தந்திரம் போன்றதாகும்."

எனச் சுட்டிக் காட்டுகிறார் அண்ணா.

அந்தக் காலக்கட்டத்தில் காங்கிரசுக் கட்சி பேசி வந்த 'சனநாயக சோசியலிசம்' என்பது பற்றி அண்ணா கூறும்போது,

> சுயராச்சியம் வருகிறது, புது வாழ்வைத் தொடங்கப் போகிறது என்று ஆண்டு பல பேசியாகிவிட்டது. அதன் சுவை குறைந்துவிட்டது. ஆகவே 'சோசியலிசம் வருகிறது, உன் இன்னல் ஒழிந்துவிடப் போகிறது, உனக்குப் பாதுகாப்பு கிடைக்கப் போகிறது' என்ற புதிய பேச்சு ஆரம்பமாகி இருக்கிறது. இது வெறும் 'சொல்லாடை'. 'சோசியலிசம் பேசி மக்களை ஏமாற்றுவதை எதிர்க்கிறோம். சோசியலிசத்தை எதிர்க்கவில்லை.

என விளக்கம் அளிக்கிறார் அண்ணா. ஆதலால், சோசியலிசம் இந்நாட்டிற்கு ஏற்றது. அதை நிறைவேற்றும் முறைகளில்தான் குறைபாடுகள் உள்ளன என அண்ணா தெளிவாக்கினார்.

### பொதுவுடைமை

பொதுவுடைமை என்பது உற்பத்தி அமைப்புகள் யாவும் அரசுடைமையாக இருக்கவேண்டும் என்பதாகும். உடைமை, நிருவாகம், உற்பத்தி, விநியோகம் மற்றும் இலாபம் எல்லாம் அரசாங்கத்தைச் சேர்ந்தவை. சோவியத் இரசியா, சீனா, அங்கேரி முதலான நாடுகள் இவ்வகையிலான பொருளியல் அமைப்பு முறையைக் கொண்டவை.

அண்ணா பொதுவுடைமைக்கு எதிரியல்லர். ஆனால் பொதுவுடைமைவாதிகளின் நடைமுறைப் போக்கு அவருக்கு உடன்பாடாக இல்லை. அதற்கு அவரே ஒரு விளக்கம் கொடுக்கிறார்.

> " 'நண்பரே, இந்த மூட்டை பளுவாக இருக்கிறது. தூக்கிப் போட ஒரு கை கொடுத்து உதவும்' என்று கேட்கும் போது,

"உதவி செய்திடத் தோன்றுகிறது. ஆனால், 'ஏ பயலே இந்த மூட்டையைத் தூக்கடா, பளு அதிகமாக இருக்கிறது' என்று கூப்பிட்டால், மானமுள்ள எவனும் வரமாட்டா னல்லவா?. எனக்குத் தெரிந்த அளவில் கம்யூனிஸ்டுகள் உளநூல் படிப்பதில்லை. மக்களை உளநூல்களாகக் கொள்வதில்லை."

எனக் குறிப்பிடுகிறார்.

ஆதலால், மக்களின் உளவியல் அறிந்து அதனடிப்படையில் வன் செயல் இல்லா வழியில் பொருளாதார அமைப்பு முறையை உருவாக்க வேண்டும். அவ்வமைப்பு மக்களின் உணர்வுகளுக்கு மதிப்பளிப்பதான தன்மைகளில் அமைந்திருக்க வேண்டும். அப்போதுதான், பொதுவான எண்ணம் மக்கள் மத்தியில் திரண்டெழும். மக்களின் எண்ணம், வலிமை, செயல் ஆகியன வெற்றிக்கு வழிகோலும் என்பது அண்ணாவின் கருத்து.

## 2. வெளிநாட்டு 'மூலதனம்'

இன்று அதிக அளவில் பேசப்படும் வெளிநாட்டு மூலதனம் பற்றி அண்ணா 1949ஆம் ஆண்டே 'திராவிட நாடு' இதழில் தம் சிந்தனைகளைப் பின்வருமாறு பதிவு செய்திருக்கிறார். அவருடைய அன்றைய சிந்தனை இன்றைக்கும் பொருத்தமாக உள்ளது.

"வெளிநாட்டு 'மூலதனம் எனும் கழுகு இங்கு வட்டமிடுவது புதியதோர் ஆபத்து. இத்தகைய பேராபத்தை வலியச் சென்று பெறும் முறையிலே, நேருவும் நடந்து கொள்கிறாரே, வெளிநாட்டு வல்லுநர்களுக்கு அழைப்பு அனுப்புகிறார்களே என்று மனம் நொந்து நாம் நிலைமையை விளக்கிக் காட்டினோம்.

வெளிநாட்டு மூலதனம் இங்கு ஏன் புக அனுமதிக்கப் படுகிறது, முதலாளித்துவ முறைக்குச் சர்க்கார் பணிகிறது என்பதற்கு இதுவும் ஓர் எடுத்துக்காட்டுதானே, என்று கேட்டோம். நாட்டுப்பற்றும், வல்லரசுகளின் போக்கை உணரும் பக்குவமும், பொருளாதாரப் பிடியின் பயங்கரச் சக்தியை அறிந்து கொள்ளும் திறனும் உள்ள எவரும், வெளிநாட்டு மூலதனத்தைப் புகவிடுவதைச் சரியான காரியம் என்று கூறமாட்டார்கள்.

பல கோடி பவுன்களையோ, டாலர்களையோ இங்குக் கொண்டு வந்து கொட்டி, புதிய தொழில்களைத் துவக்கி, 'பரோபகாரம்' செய்யும் பண்பு கொண்டவர்களல்ல எந்த

நாட்டு முதலாளியும், தொலை தூரத்திலிருந்து இங்கு வந்து பணம் போடுவதானால், தன் சொந்த நாட்டிலே கிடைக்கக்கூடிய இலாபத்தையும் ஆதிக்கத்தையும் விட அதிகமாகக் கிடைப்பதாக இருந்தால் தானே இசைவார்கள்! இதை விளங்கிக் கொள்ள நுண்ணறிவுகூட வேண்டாமே!. சாமானியமான அறிவே போதும்.

பல நூறு கோடி டாலர்களை இங்குக் கொண்டுவந்து கொட்டித் தொழில்களைத் தொடங்கும் நிலையை அமெரிக்கா பெற்றால், அவர்கள் இங்கிருந்து இலாபம் சுரண்ட முடியும் என்பது மட்டுமல்ல; இவ்வளவு தொகையும் பாதுகாக்கப்பட வேண்டும் என்கிற எண்ணம் கொண்டு அதற்கான சூழ்நிலையும் ஆட்சி முறையும் வேண்டும் என வற்புறுத்தவும் செய்வார்கள். உலகச் சூழ்நிலையில் அவ்வப்போது ஏற்படும் நிலைமைக்கு ஏற்றபடி தமது கருத்துக்கு ஒத்த முறையில் இந்தியத் துணைக்கண்டம் நடந்துகொள்ள வேண்டும் என நிபந்தனைகள் விதிப்பதுமான போக்கிலேதானே நடந்து கொள்வார்கள்?.

பணத்தைக் கொட்டிவிட்டுப், பலனை நீங்கள் அனுபவித்துக் கொள்ளுங்கள் என்று கூறிவிட அவர்கள் என்ன பித்தர்களா! 'பணம் போடுகிறோம் தொழிலில். ஏதோ 'தர்ம நியாயமான' வட்டியும் இலாபமும் மட்டும் கொடுத்தால் போதும். வேறு ஆதிக்க ஆசை எமக்குக் கிடையாது' என்று கூற அவர்கள் என்ன ஏமாளிகளா! நிச்சயமாக, போட்ட முதல் எவ்வளவு அதிகமாக இலாபம் தருமோ அவ்வளவையும் 'உறிஞ்சவும்' இலாபத்துடன் கூட, முதலீடு கெடாமல் இருக்கும் நிலையை உண்டாக்குவதிலே அதிகாரப் பொறுப்பும் பெறத்தான் விரும்புவர். அதற்கு இந்திய அரசு (சர்க்கார்) இணங்கத்தான் வேண்டிவரும்.

கடன் வாங்கிக் கட்டிய மாடி வீட்டிலே மந்தமாருதம் வீசும் அந்திப் போதிலே உலவினாலும், உண்மை நிலையை உணருபவனுக்குத் தணல் காற்று வீசுவது போலத்தானே இருக்கும்! கடன் கொடுத்தவனின் போக்கு மாறினால் தன் நிலை தாழ்ந்துவிடும்; தடுமாறிவிடும். ஒரு பெரிய நாட்டிலே, பிரமிக்கத்தக்க அளவு தொகையுள்ள பணத்தை அந்நிய நாட்டு முதலாளிகள் கொண்டுவந்து போட்டுத் தொழில் தொடங்குவது என்றால்,

பொறுப்புணர்ச்சியுள்ள யாருக்குத்தான் கவலையும் அச்சமும் தோன்றாமலிருக்க முடியும்?.

வெளிநாட்டு முதலாளிகளின் வேட்டைக்காடாக ஆகிவிடும்படி இந்நாட்டைச் செய்துவிடும் விபரீதக் காரியம் இது என்று எச்சரிக்கிறோம். பொது மக்களை, குறிப்பாகக் காங்கிரசிலே உள்ள இளைஞர்களைக் கேட்டுக்கொள்கிறோம்: 'தலைவர்களைத் தவறான வழியிலே செல்லவிடாதீர்கள்! நாட்டை அடகு வைக்கும் நாசகாரியம் நடைபெற அனுமதிக்காதீர்கள். வல்லூறுகளை இங்கு வட்டமிட அழைக்காதீர்கள்' என்று.

வெளிநாட்டு மூலதனம் ஏன் தேவைப்படுகிறது என்பதற்கும், வெளிநாட்டவர் மூலதனம் போட்டாலும் ஆதிக்கம் பெற முடியாதபடி செய்யப்படும் என்றும் பசப்புகின்றனர் சிலர். உண்மை நிலை விளங்காமல் இவ்விதம் பசப்பியிருந்தால் நாம் பரிதாபப்படுகிறோம் அவர்களிடம். நிலைமை தெரிந்திருந்தும் வேண்டுமென்றே மக்களின் மனத்திலே எதையாவது போட்டு நிரப்பி, தவறான எண்ணத்தை உண்டாக்க வேண்டுமென்பதற்காகப் பசப்பியிருப்பின் அவர்களைச் சமூகத் துரோகிகள் என்று குற்றம் சாட்டத் தயங்கோம்.

வெளிநாட்டு மூலதனம் இங்குப் புகுவது நியாயம் என்று வாதாட ஒரு விசித்திரமான காரணம் சொல்லப்படுகிறது. இந்நாட்டு முதலாளிகளுக்குத் தைரியம் உண்டாக்கக் கூடிய விதமாகவும், உணர்ச்சி ஊட்டக் கூடிய முறையிலும், பயத்தைப் போக்கக் கூடிய வகையிலும், இந்திய அரசு (சர்க்கார்) தமது திட்டத்தையும் கொள்கையையும் விளக்கியும் கூட இந்திய முதலாளிகளின் மனம் மாறவில்லை. அவர்கள் தம்மிடம் உள்ள மூலதனத்தைப் பதுக்கி வைத்துவிட்டார்கள். இலாபத்தைக் கட்டுப்படுத்தவில்லை. வருமான வரியிலே மாறுதல் செய்கிறோம், தொழில்களைச் அரசு (சர்க்கார்) உடைமையாக்கி விடமாட்டோம், அஞ்ச வேண்டாம் என்றெல்லாம் கூறியும்கூட, முதலாளிகள், புதிய தொழில்களைத் தொடங்க முன்வரவில்லை. பணம் போட மறுக்கிறார்களே. எனவேதான் 'நம் தலைவர்கள்' வெளிநாட்டு மூலதனத்தைத் தேடவேண்டி வருகிறது. நாடவேண்டி ஏற்படுகிறது என்று விளக்கம் தரப்படுகிறது.

'வெளிநாட்டு மூலதனம் கேடுதான் செய்யும்; ஆனால் என்ன செய்வது, இங்கே உள்ள முதலாளிகள்

பணமூட்டையைப் பாதாளக் கிடங்குகளில் போட்டு மூடிவிட்டார்கள், புதிய தொழிலுக்குப் பண மூலதனம் இல்லை. வேறு என்ன செய்வது, வெளிநாட்டு மூலதனத்தை நாடித்தானே ஆகவேண்டும்' என்று நினைத்துக் கொள்ளும் வகையில் தலைவர்கள் தவறான பாதையில் செல்கிறார்கள் என்பதை மக்கள் அறியவிடாதபடி தடுக்கிறார்கள்.

தீராத தலைவலியைத் தீர்த்துவிடும் திருப்பதி பிராண்டு தைல வியாபாரி திருவரங்கம் பிள்ளை, ஏராளமான வி.பி. பார்சல்களை அனுப்பிய அலுப்பினால் ஏற்பட்ட தலைவலியைப் போக்கிக்கொள்ள அமிர்தாஞ்சனத்தை விலைக்கு வாங்கி வரும்படி கடைப்பையனை அனுப்பும் கதை போலிருக்கிறது நிலைமை.

உள்நாட்டு முதலாளிகளைத் திருப்திப்படுத்தி வழிக்குக் கொண்டுவர முடியவில்லை. இந்தத் தோல்வியை ஒப்புக்கொண்டு இதையே கூறிக்கொண்டு, வெளிநாட்டு முதலாளிகளிடம் மூலதனம் கேட்டால் அவர்கள் கைகொட்டித்தானே சிரிப்பார்கள்! 'என்னய்யா வேடிக்கை! உங்கள் நாட்டு முதலாளிகளுக்கே, மூலதனத்தைப் போட்டுத் தொழில் நடத்தலாம் என்ற எண்ணம் பிறக்கவில்லை. நீங்கள் ஏதேதோ கூறியும் அவர்கள் இணங்கவில்லை. இந்நிலையில் அவர்களைச் சரிக்கட்ட முடியாத நீங்கள் உங்கள் பேச்சினால் எங்களை மயக்கியோ, மகிழ்வித்தோ, ஆசையைக் கிளறியோ, 'மூலதனம்' பெற முடியும் என்று எண்ணுகிறீர்களே, இதென்ன பித்தம்' என்று கேட்கமாட்டார்களா!? கூரை ஏறிக் கோழிபிடிக்கத் தெரியாதவன் கோபுரம் ஏறி நட்சத்திரத்தைப் பிடிப்பதாகக் கூறுவது போலிருக்கிறதே!

ஏன் முடியவில்லை, இந்நாட்டு முதலாளிகளைச் சரிப்படுத்த? அரசின் பிரச்சாரபலம், இராணுவப் போர் பலம் முழுவதும், ஏழைத் தொழிலாளியை அடக்கவும் அவன் சார்பாக, பணிபுரிவோரை வேட்டையாடவும் தானே பயன்படுத்தப்படுகிறது?. அந்தச் 'சக்தி' முதலாளிகளின் மீது உராய்ந்திருந்தால் கூடப் போதுமே, பணமூட்டைகள் வெளியே கிளம்பியிருக்குமே மளமளவென்று! செய்தனரா? செய்யும்படி ஆட்சிப்பீடத்தில் காங்கிரசாரை அமர்த்திய வீர இளைஞர்கள் கேட்டனரா? கேட்பாரா இனியாகிலும்? இந்நாட்டு முதலாளிகள், பொது மக்களின் அரசு,

காந்தியரின் சீடர்களால் அமைக்கப்பட்ட அரசு கேட்டும் கெஞ்சியும், ஏன் பிடிவாதத்தை விட மறுக்கின்றனர்? அவர்களை நல்வழிக்குக் கொண்டுவர, ஏன் அரசு முயற்சிக்கவில்லை? ஏன் வெற்றி கிட்டவில்லை? உள்நாட்டிலே வெற்றிபெற முடியவில்லை? என்று கூறிவிட்டு வெளிநாட்டிலே பணம் கேட்டால் கிடைக்குமா?

தங்கள் ஆட்சியின்போது, அற்புதமான முன்னேற்றம் நடைபெற்றதாகவும், புதுப் புதுத் திட்டங்கள் தீட்டப் பட்டதாகவும் காட்டிக் கொள்ளவேண்டும் என்னும் எண்ணம் ஆளும்கட்சிக்கு ஏற்படுவது இயற்கை. ஆனால் அதற்காக, எதிர்காலத்தைக் கெடுக்கக்கூடாது. இந்நாட்டை வல்லரசுகள் நடத்தும் அரசியல் சொக்கட்டான் காயாக ஆக்குவதும் கூடாது! இதனைத் தைரியமாக எடுத்துக் கூறவேண்டிய பொறுப்பு ஏடுகளுக்கு இருக்க வேண்டும். கட்சிக்கு ஒரு தம்பட்டமாக மட்டும் இருப்பது கூடாது. மக்கள் முரசாக வேண்டும்; மாறவேண்டும்.''

என எவ்வளவு அற்புதமாக அந்நிய முதலீட்டின் ஆபத்தை எடுத்துரைத்திருக்கிறார் அண்ணா!.

### 3. கூட்டாட்சி எனும் புதிய ஏகாதிபத்தியம்

''உறவுக்குக் கைகொடுப்போம், உரிமைக்குக் குரல் கொடுப்போம்', 'மாநிலத்தில் சுயாட்சி, மத்தியில் கூட்டாட்சி' என்று முழக்கமிட்டுத் திராவிடநாடு தனியாட்சி பெற வேண்டும் என்று அண்ணா கூறி வந்த காலம் உண்டு. அத்தகைய சிந்தனை, ஒருமைப்பாட்டுக்கு ஊறு விளைவிப்பதாக எண்ணக்கூடும். அவருடைய சிந்தனை எவ்வளவு தொலைநோக்குப் பார்வையோடு தெளிவாக இருந்திருக்கிறது என்பதற்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டு. நாடு விடுதலை பெற்ற பிறகு காங்கிரசுக் கட்சி! ஆட்சியாளர்கள் ஒரு புதிய ஆட்சிமுறைத் திட்டம் தீட்டுவது குறித்து 1948இல் 'திராவிட நாடு' இதழில் அண்ணா எப்படி தம் சிந்தனைகளை வடித்திருக்கிறார் என்பதைப் பாருங்கள்.

இருமன்னர்கள் போரிட்டனர். அதிலொருவன் போரில் புலி. மற்றவன் குணத்தால் நரி. புலி எனப் போரிடும் மன்னன் சிவனடியார்களைக் கண்டால் பக்தியில் உறைந்து போகும் குணமுடையவன். இது தெரிந்த முத்தநாதன் என்னும் நரிக் குணத்தான், நன்றாகக்

குழைத்து நீறுபூசிக் கொண்டான். உருத்திராட்ச மாலை அணிந்து கொண்டான் கூறிய கத்தியைப் பட்டுத் துணி கொண்டு மறைத்தெடுத்துக் கொண்டான். வீரவேந்தனைத் தனியாகக் கண்டு பேச அனுமதி கோரினான்; வேடத்தைக் கண்ட வேந்தன் ஏமாந்தான். ''மெய்ப்பொருள் உணர்த்த வந்தேன்'' என்றான் வேடதாரி. சூதறியா மன்னன் உயிரை இழந்தான்.

இதனை மெய்ப்பொருள் நாயனார் கதை எனக் கூறுவர். இதனைப் பெரிய புராணத்தில் வேடத்தைக் கண்டு ஏமாறலாகாது என்னும் அறிவுரைக்குப் பயன்படுத்துவது இல்லை. மாறாக சிவபக்தியின் மேன்மைக்கு ஓர் எடுத்துக் காட்டாகவே பயன்படுத்துகின்றனர். கதைகளைப் பக்தர்கள் எங்ஙனம் பயன்படுத்துகிறார்கள் என்பதைக் கூற அல்ல, இதனை நாம் இங்குத் தீட்டுவது. சைவத்தின் மீது அளவுகடந்த பற்றுக் கொண்டவரை 'சிவவேடம்' பூண்டு ஏய்த்து, மாய்த்த, அந்தப் பெரிய புராணத்தின் மறுபதிப்பென இப்போது நமது நாள்களிலே, அரசியல் துறையிலே நடைபெறும் உரிமைப் படுகொலைகளைப் பற்றிக் குறிப்பிடவே இதனைக் கூறினோம்.

நெற்றியிலே நீறு. எனவே நேர்மையிலே நாட்டமிருக்க வேண்டும். கழுத்திலே சிவச்சின்னம். ஆகவே அதை அணிந்திருப்பவரின் உள்ளம் தூய்மையானதாக இருந்தே தீர வேண்டும். கக்கத்திலே ஏதோ இருக்கிறது. சிவக் கோலத்தவரிடம் சிவாகம ஏடுதான் இருக்கும் என்னும் முடிவுக்குப் பக்தியின் காரணமாக வந்து உயிரை இழந்த மன்னன் போல, வேடத்தைக் கண்டு ஏமாந்து உரிமையை இழந்துவிடும் பரிதாபத்துக்குரிய மக்கள் அரசியல் துறையிலே அனேகர் உள்ளனர்.

மெய்ப்பொருள் உரைக்க வந்துள்ளார் என்று எண்ணி வேந்தன் உயிரிழந்தது போலவே அரசியலில் வேடத்தைக் கண்டு மயங்கி, அந்த வேடதாரிகள் நற்பொருள் தர வந்திருக்கிறார்கள் என்ற நம்பிக்கை கொண்டு, பிறகு தமது உரிமையை நாசம் செய்து கொள்ளும் மக்கள் இதுபோல் ஏராளமாக உள்ளனர்.

யாருக்கும் ஏதேனும் ஒன்றின் மீது, பற்று மிகுதியாக இருப்பின், அவர்களை எத்தர்கள் ஏய்க்க எண்ணும்போது

எதன் மீது அவர்களுக்கு விருப்பம் அதிகமோ அதே கோலம் பூண்டு வந்தே ஏய்ப்பர்; ஏய்த்திருக்கின்றனர்; ஏய்த்து வருகின்றனர். ஏமாளிகள் உள்ள வரையில் இத்தகைய எத்தர்கள் இருக்கத்தான் செய்வர். பற்று இருக்கத்தான் வேண்டும் ஏதேனும் ஒரு கொள்கையினிடம். மரக்கட்டைகளாக இருத்தலல்ல மாந்தர்க்கழகு. ஆயினும், பற்று, நமக்குப் பகுத்தறிவையும் பாழாக்கும் மூடுபனியாகும் படியாக மாறிவிட அனுமதிக்கலாகாது.

நம் மக்களுக்குள்ள நாட்டுப் பற்று எவ்வளவு ஆழ்ந்தது என்பதைக் கண்டு கொண்ட சிலபலர், தமது சிறுமைச் செயலை மறைக்க, சதிச் செயலை மறைக்க, சுயநலத்தை மறைக்க, நாட்டுப் பற்றுடையோர் வேடமிட்டுக் கொள்கின்றனர். வெள்ளை உள்ளத்தினரை வீழ்த்த இதில் வெற்றியும் பெற்று வருகின்றனர். சிவ வேடம் கண்டு, சித்தத்தை முதலிலும், உயிரைப் பிறகும் பறிகொடுத்த மன்னன் போல, மக்கள், நாட்டுப்பற்று வேடமிட்டுவரும் நயவஞ்சகர்களை நல்லவர்களென்று நம்பித் தமது உயிரினும் மேலான உரிமையை இழந்து விடுகின்றனர்; வேடதாரிகள் வெற்றிப்புன்னகை புரிகின்றனர்.

நாட்டை மீட்டிடப் போரிட்டவர்களை நாம் நம் மாவீரர்களாக, தலைவர்களாக, வழிகாட்டிகளாகக் கொள்ள வேண்டும். அவர்களைப் போற்ற வேண்டும். அவர் காட்டும் வழியில் சென்று, அவரிடும் ஆணையை நிறைவேற்றி, அவருக்குப் பணிபுரிந்து இன்புற வேண்டும் என மக்கள் எண்ணுகின்றனர். அது அவர்களின் பண்புக்கு நல்லதோர் எடுத்துக்காட்டு.

நாட்டுப்பற்றுக் காரணமாக இந்த நிலை கொண்ட மக்களை வேடமிட்டு வீழ்த்துவதைக் காணும்போது உண்மையிலேயே வேதனையாகத்தான் இருக்கிறது. பாவம்! மக்கள் எவ்வளவு ஆழ்ந்த நம்பிக்கை கொண்டு இருக்கிறார்கள். அந்த நம்பிக்கையை, நாசகாரர்கள் எவ்வளவு தீய செயலுக்குப் பயன்படுத்திக் கொள்கிறார்கள் என்பதைக் காணும்போது மிகமிக அதிகமான வேதனையாகத்தான் இருக்கிறது.

அதோ, டில்லியிலே கூடி நாட்டுக்குப் புதிய ஆட்சிமுறைத் திட்டத்தை வகுக்கிறார்கள். மெய்ப்பொருளைக் காட்டுகிறார்கள். எவ்வளவு மக்கள், அங்குக் கூடிடும் முன்னணியினரின்

வேடத்தைக்கண்டு ஏமாந்து, தமது உரிமையை இழந்து கொண்டிருக்கிறார்கள்! அங்கு நடைபெறுவதன் சூட்சமத்தை ஓரளவுக்கேனும் தெரிந்து கொள்ளக்கூடிய நிலையில் உள்ளவர்களே மிகச் சிறு தொகையினர்தான்! அவ்வளவு ‘சமர்த்தாக’க் காரியம் நடைபெறுகிறது.

அதிகார வெறியர்கள், ஏகாதிபத்திய விரும்பிகள், முதலாளிமார்கள், முப்புரியாளர்கள் என்பன போன்றார்களெல்லாரும் அங்குத் ‘தேசிய வேடம்’ புனைந்து கொண்டுள்ளனர்! அந்தக் கோலத்தைக் கண்டு நாட்டுப் பற்றுக் கொண்டுள்ள நம் மக்கள் ‘தேசீயத் தலைவர்கள் தீட்டிடும் திட்டம் தேச மகாசனங்களுக்கு நன்மை தரும் திட்டமாக இருந்தே தீரும்’ என்று எண்ணுகின்றனர், நம்புகின்றனர், வேடத்தைக் கண்டு ஏமாறுகின்றனர். அவர்களோ, அங்கு ஒரு புதிய வல்லாட்சியை (ஏகாதிபத்யத்தை) அமைத்துக் கொண்டிருக்கிறார்கள்!

பல நாடுகளின் ‘கதம்பம்’ ஒரு கண்டம்; இந்தியாவை எவரும் ஒரு துணைக்கண்டம், சிறு அளவினதான கண்டம் என்றே கூறினர், கூறுவர்- அதன் நிலப்பரப்பைக் கவனித்து மட்டுமல்ல; மக்களின் நிலை, வரலாற்று நிலை, ஆகியவற்றினையும் கவனித்து! அப்படிப்பட்ட துணைக் கண்டத்துக்கு இப்போது, தயாரிக்கப்படும் ஆட்சி முறைத்திட்டம் என்ன, ஒரு புதிய ஏகாதிபத்தியத் திட்டம் தயாரிக்கப்படுகிறது! கூட்டாட்சி என்பது பெயர். நாட்டின் பல பகுதிகள் ஒன்றோடொன்று கூட்டாகி, அந்தக்கூட்டு விவகாரத்தைக் கவனிக்க, கூட்டுப்பொறுப்பை ஏற்க, ஒரு நடு அலுவலகத்தை, மத்திய அரசை அமைத்துக் கொள்ளும், ‘பெடரல்’ முறை அங்குத் தீட்டப்படுவதாகக் கூறுகிறார்கள். ஆனால் திட்டத்தை அலசிப் பார்த்தால், இந்த மாகாணங்களை ஆட்டிவைக்கும் சூத்திரக் கயிறு மத்திய அரசிடத்தில் தரப்பட்டிருப்பதும் விளங்கும்.

வெள்ளையர் மீது குறை கூறியபோது, மிக முக்கியமாக வலியுறுத்தப்பட்ட கருத்து மாகாணங்களுக்குப் போதுமான, மக்களாட்சிக்குத் தேவையான அளவுள்ள, பலமும் அதிகாரமும் தரப்பட வில்லை என்பது. மாகாண சுயாட்சி வேண்டும் என்னும் மூல முழக்கத்தை மக்கள் மறந்து விட்டிருக்கமாட்டார்கள் என நம்புகிறோம். இப்போது உருவாக்கப்படும் ஆட்சித் திட்டத்தின்படி இந்த

மூல முழக்கம், அடிப்படைக் கோரிக்கை, மாகாண தன்னாட்சி (சுயாட்சி) ஆகியவை வெறும் கேலிக் கூத்தாக்கப் படுகின்றன. மாகாணங்களுக்குத் தரப்படும் அதிகாரத்தின் தன்மை, நிதியின் அளவு ஆகியவற்றைக் கவனிக்கும்போது, ஒரு பெரிய மாவட்டக் கழகம் (ஜில்லா போர்டு) போன்ற நிலையே மாகாணங்களுக்குத் தரப்பட்டிருப்பது விளங்கும்.

வெளிநாட்டுடன் தொடர்பு, உலகப் போக்குவரத்து, உலகில் மற்ற நாடுகளுடன் வணிகத் தொடர்பு போன்ற பெரிய இந்தத் துணைக்கண்டத்தின் பாதுகாப்புக்கான கடமைகளைக் கவனித்துக் கொள்ள மட்டுமே ஒரு பலம் பொருந்திய அமைப்பு வேண்டும்; அவ்வளவு பொறுப்பான கடமையை எந்த ஒரு தனிப்பட்ட மாகாணமும் தானாகவே செய்து கொள்ள முடியாது. எனவே இதற்கோர் மத்திய அரசு வேண்டும் என்றுதான் பலரும் இதுநாள் வரை வாதாடி வந்தனர்; இந்தத் துணைக் கண்டத்தை ஒரே பேரரசுக்கு உட்படுத்த வேண்டும் என்றோ, இங்குத் தனிப் பண்புகளுடன் உள்ள பல்வேறு பகுதிகளையும் உருக்கி ஒரே அச்சில் வார்த்து எடுக்க வேண்டுமென்றோ எவரும் சொன்னதில்லை! இப்போதோ, இந்தத் திட்டத்தை முன்னின்று நடத்துபவர்கள் 'நாட்டுப்பற்றுக் கோலம் பூண்டிருப்பதால், மக்கள் மயங்கிப் போயுள்ளனர். தமது உரிமை பறிபோவதை உணராமலும் இருக்கின்றனர்.

மெய்ப்பொருள் நாயனார் கதை அரசியலில் நடைபெறுகிறது! சிவவேடம் அன்று. இன்று தேசியக் கோலம்! மொழி, கலை எனும் உயிர்ப் பிரச்சினைகள் முதற்கொண்டு வரி, அதிகாரம் எனும் பிரச்சினைகள் வரையிலே 'மைய அரசு' ஆதிக்கம் செலுத்துவதற்கான திட்டம் தயாரிக்கப்பட்டு விட்டது!

இது என்ன அக்கிரமம்! இந்தி மொழி ஏகாதிபத்தியமா? எப்படி இதனை ஏற்பது? என்று வெகுண்டு ஒருவர் கேட்கும் போதும் சரி, 'சகல அதிகாரங்களையும் டில்லியிலே கொண்டுபோய்க் குவிக்கிறீர்களே, எங்கள் மாகாணத்திலே நாங்கள் என்ன வேலைதான் செய்வது, எதைச் செய்யத்தான் அதிகாரமிருக்கிறது, என்று ஒருவர் கேட்டாலும், 'பணப் பெட்டியை டில்லியில் வைத்துக் கொண்டு, எங்களைப் பஞ்சைகளாக விட்டுவைத்தால் நாங்கள் பட்டம் சூட்டிக்கொண்டு பலன் என்ன,' என்று

சிலர் பதறிக் கேட்டாலும், 'வருமான வரி போன்ற பெரிய புள்ளியை நீங்கள் எடுத்துக்கொண்டு வளராத வரிகளை எமக்கு என்று கூறுகிறீர்களே, எங்கள் மாகாணத்து நலனைக் கவனிக்க முடியாதே நாங்கள் என்ன செய்ய,' என்று எவரேனும் அழுகுரலுடன் கேட்டாலும் எல்லாவற்றுக்கும் ஒரே பதிலாகப் 'பலமான மைய அரசு வேண்டும். நாட்டுப் பற்றுடையவரின் திட்டம் இது' என்று கூறிவிட்டு, 'இதோ எம்மைப் பாரீர்! எமது கோலத்தைக் காணீர்! கதர் ஆடை! காந்தி குல்லாய்!' என்று பேசி மக்களை மிரட்டி விடுகிறார்கள். மக்களும் வேடத்தைக் கண்டு மயங்குவதும், மிரள்வதுமாக உள்ளனர். இந்தத் துணைக் கண்டத்தின் பல்வேறு பகுதிகள், தனிப்பண்பும், தனிவரலாற்றுச் சூழ்நிலையும் கொண்ட பகுதிகள் யாவும், தன்னாட்சியை இழந்து அதன் பலனாக முழுவாழ்வும், முழுவளர்ச்சியும் பெற முடியாமல், உருக்குலையப் போகின்றன.

மாநிலங்களின் நல்வாழ்வுக்குத் தேவையான எல்லாக் கடமைகளையும் கல்வி, சுகாதாரம், போக்குவரத்து, உட்பாதுகாப்பு வளத்தை ஏற்படுத்துவது போன்ற எல்லாக் துறைகளும் மாநில அரசின் பொறுப்புகள்; இவைகள் சரிவரச் செய்யப்பட்டால்தான், 'அந்நியராட்சி ஒழிந்து நமது ஆட்சி ஏற்பட்டது; அதன் பயனாகப் புதுவாழ்வு பெற்றோம்' என்று மக்கள் பூரிப்புடன் கூறமுடியும். இந்த வெற்றி கிடைக்க வேண்டுமானால் மாநில அரசுக்கு நிதி ஏராளமாக வேண்டும்; வளரக்கூடிய வழிவகை வேண்டும்.

புதிய திட்டம் முதலில் இதற்கு வழி அமைக்கவில்லை. மாநிலங்களுக்கென ஒதுக்கி வைக்கப்படும் வரி மாநிலங்களின் பெரிய பொறுப்புகளை நிறைவேற்றுவதற்குப் போதுமானது அல்ல. இதைக் கூறுவது, காங்கிரசாரை நிந்திப்பதாகக் கூறப்படும் நாமல்ல. காங்கிரசு மந்திரி இது பற்றி அடிக்கடி குறைபடுகிறார்; குமுறுகிறார்.

அதிகாரங்களைப் பற்றியோ கூற வேண்டியதில்லை. மைய அரசின் எடுபிடிகளாக மட்டுமே, மாநில அரசு இருக்கமுடியும். எதற்கும் 'டில்லி தேவதை'களின் உத்தரவு தேவை! நாட்டுக்கு ஏதேனும் நெருக்கடி என்று தோன்றினால் மைய அரசு இந்த 'அல்ப சொல்ப' அதிகாரத்தையும் கூட நீக்கம் (இரத்து) செய்துவிடலாம்! 'நெருக்கடி' என்பதற்கு வியாக்யானம் கூறும் பொறுப்பும் மைய அரசுடையது.

இந்தியத் துணைக்கண்டத்துக்கு 'ஓர் அரசு' என்னும் திட்டம் வகுக்கப்பட்டால் இப்படித்தான் மாநிலங்களைப் பட்டினி போடும் திட்டமாக இருக்குமென்பதை அறிந்துதான் நாம் "திராவிடநாடு தனியாட்சி பெற வேண்டும்" என்று கூறி வந்தோம்; கூறிவருகிறோம்.

ஒவ்வொரு பகுதியும் அதிலும் சிறப்பாகத் தனியாட்சி செலுத்திவந்த செலுத்துவதற்குத் தகுதியும் திறமையும் வாய்ந்த தனிப்பண்பு கொண்ட மக்கள் வாழ்கின்ற பகுதிகளை, ஒரே பட்டியில் போட்டு அடைத்து அதிகாரமற்ற, பொருள்பலமற்ற இடங்களாக்கி அவ்வளவு அதிகாரங்களையும் மைய அரசு எனும் ஒரே இடத்தில் குவித்து விடுவது நல்லதல்ல, நடைமுறைக்கு ஏற்றதல்ல, சனநாயகமல்ல."

என்று குறிப்பிட்டிருக்கிறார் அண்ணா. இன்றைக்கும் பேசப்பட்டு வருகிறது அண்ணாவின் இந்தச் சிந்தனை.

### 4. கறவை மாடும் - குரைக்கும் நாயும்

அரசு கடன் வாங்குவதை எதிர்க்கவில்லை. ஆனால் அப்படி வாங்கும் கடன் உற்பத்திக்கு உகந்த கடனாக இருக்க வேண்டுமே அன்றி நுகர்வுக் கடனாக இருக்கக் கூடாது என்பது அண்ணாவின் கருத்து. அண்ணா கடன் வாங்குவது பற்றிக் கூறியதாவது:

"ஒரு 500 ரூபாய் என்னுடைய நண்பனிடத்தில் கடன் வாங்கி, நான் ஒரு பசுமாடு வாங்கி, பால் கறந்து நானும் சாப்பிட்டு மற்றவர்களுக்கும் விற்றுக் கடனை அடைத்தால், நண்பனிடம் வாங்கிய கடனைக் கொடுக்கின்ற வாய்ப்பு கிடைக்கிறது. அப்படி வாங்கப்படும் கடன் முறையாகப் பெறும் கடன்.

அதற்குப் பதிலாக ஒரு 500 ரூபாயைக் கடனாகக் கொடுங்கள் என்று கேட்டு வாங்கி ஒரு அல்சேஷன் நாய்க்குட்டியை வாங்கினேன் என்றால், அது வாங்கக் கூடிய கடனல்ல. அந்தக்கடனை வாங்கினால், திருப்பிக் கொடுக்கமுடியாது. காங்கிரசுக் கட்சி உறுப்பினர் சிலர் சொல்லலாம். அல்சேசன் நாய் குட்டி போடாதா- விற்கக் கூடாதா- அதிலிருந்து இலாபம் வராதா- என்று சொல்லலாம். அவர்கள் அப்படியெல்லாம் கேட்க மாட்டார்கள் என்று நினைக்கிறேன். கேட்பார்கள் என்றால் அதை அல்சேசன் ஆண்நாய்க்குட்டி என்று சொல்லி விடலாம் என்று கருதுகிறேன். ஆக வாங்கப்படும் கடன் பயன்படுத்தப்படும் முறையைக் கொண்டு கடனின் தன்மையைத் தீர்மானிக்க

> வேண்டும். அதற்காகக் கடனே வாங்கக்கூடாது என்று சொல்லுகிறோம் என்று அர்த்தம் இல்லை.

என்று கடனின் இரண்டு வகையான உற்பத்திக் கடன் மற்றும் உற்பத்திசாராக் கடன் என்பதைப் பாமரரும் புரிந்து கொள்ளும் வகையில் அண்ணா விளக்கிக் கூறியுள்ளார்.

5. நெசவாளர் துயர் துடைப்பு

கோடிக் கணக்கான நெசவுத் துணிகள் விற்பனை செய்ய இயலாமல் குவிந்து கிடந்தன. நெசவாளர்களோ அரைவயிற்றுக் கஞ்சிக்கே அல்லாடினார்கள். அவர்களின் துயரைப் போக்குவது கழகத்தின் கடமை என்று அண்ணா நினைத்தார். கழக உறுப்பினர்களுடன் சேர்ந்து கொண்டு அத் துணிகளைத் தமிழ்நாடு முழுவதும் ஊர் ஊராகச் சென்று கூவி விற்றார். தேங்கிக் கிடந்த துணிகள் ஒரே நாளில் இலட்ச ரூபாய்க்கு மேல் விற்றுத் தீர்ந்தன.

அண்ணா மக்களின் நலன் பேணுவதைத் தலையாய கடமையாகக் கருதினார். மக்கள் இன்னல்களுக்கு ஆளாகும் சமயங்களில் எல்லாம் அவர்களின் சிக்கல்களை ஆராய்ந்து அவற்றைத் தீர்ப்பதற்கான வழியில் இறங்குவார். அதுதான் அவரின் நேர்மையான அரசியல். சிக்கல்களைப் பெரிதாக்கி ஆளும் கட்சினருக்குத் தொல்லைகளைக் கொடுக்கும் அரசியலை அண்ணா கையாளவில்லை.

6. படி அரிசித் திட்டம்

'ஒரு ரூபாய்க்கு ஒரு படி அரிசி' என்னும் திட்டத்தை அமலுக்கு கொண்டு வந்தார் முதல் அமைச்சர் அண்ணா. சென்னை, கோயம்புத்தூர், கன்னியாகுமரி போன்ற ஊர்களில் இத்திட்டத்தை வெற்றிகரமாகச் செயல்படுத்தினார். எனினும் இத்திட்டத்தை தம் ஆட்சியில் முழுமையாகச் செயல்படுத்த முடியாமைக்காக வருந்தினார் அண்ணா.

7. நிதிநிலை அறிக்கை

16.3.1960 அன்று தமிழ்நாடு சட்ட மன்றத்தில் நடைபெற்ற நிதிநிலை அறிக்கை விவாதத்தின்போது எதிர்க்கட்சித் தலைவராக பேரறிஞர் அண்ணா பேசியுள்ளதைக் கேட்டால் அவருடைய பொருளாதாரச் சிந்தனைகளை நன்கு புரிந்து கொள்ள முடியும்.

> ''கனம் சட்டமன்றத் துணைத் தலைவர் அவர்களே! தலைவர் அவர்களின் உத்திரவின்படி இந்த நிதி நிலை அறிக்கையின் மீது என்னுடைய கருத்துகளை எடுத்துக் கூற விரும்புகிறேன்.

ஆண்டிற்கு ஆண்டு தயாரிக்கப்படும் நிதி நிலை அறிக்கை ஒவ்வோர் ஆண்டின் முன்னேற்றத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கக் கூடிய வகையில் இந்த அறிக்கை தயாரிக்கப்படவில்லை. ஒரு சிலருடைய தகுதிக்குத் தக்க வகையில் இந்த அறிக்கை தயாரிக்கப்பட்டிருக்கிறது என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். ஒவ்வோர் ஆண்டிலேயும் காங்கிரசுக் கட்சி ஆட்சியால் தரப்படும் நிதிநிலை அறிக்கையில் இருந்து அடுத்த ஆண்டிலே எந்த அளவிற்கு எல்லாத் துறைகளிலும் முன்னேற்றம் அடைந்திருக்கிறோம் என்பதைச் சுட்டிக் காட்டத்தக்க வகையில் நிதிநிலை அறிக்கை தயாரிக்கப் படுமானால் மிகவும் பயனுள்ளதாக இருக்கும் என்று நான் கருதுகிறேன்.

சென்ற ஆண்டு நிதிநிலை அறிக்கையில், எவ்வளவு பேர்களுக்கு வேலைவாய்ப்பு தரப்பட்டது என்பதும், எத்தனை தொழிற்சாலைகள் நாட்டில் உள்ளன என்பதையும், அவைகளில் எவ்வளவு தனியார் துறையில் இருக்கின்றன என்பதைப் பற்றிய விவரங்கள் எல்லாம் தரப்பட்டன. இந்த ஆண்டு நிதிநிலை அறிக்கையில் அதனைத் தொடர்ந்து எத்தனை பேர்களுக்கு இப்பொழுது புதிதாக வேலை வாய்ப்பு தரப்பட்டிருக்கிறது? எத்தனை புதுத் தொழிற்சாலைகள் துவக்கப்பட்டிருக்கின்றன? என்ற வகையில் நிதிநிலை அறிக்கை இருந்திருக்குமானால் அரசு செய்திருக்கும் காரியங்களின் சாதனைகளைப் பற்றி அதன் ஆதரவாளர்கள் மகிழ்வும், அதிலுள்ள குற்றங் குறைகளை எடுத்துக் காட்டக் கூடியவர்கள் அவைகளை எடுத்துக் காட்டவும் வாய்ப்பு ஏற்பட்டிருக்கக் கூடும்.

ஆனால் இந்த ஆண்டு நிதிநிலை அறிக்கை வேறு ஒரு வகையில் திருப்பப்பட்டிருக்கிறது என்பதை நான் கவனித்துப் பார்க்கிறேன். இது தவறு என்று நான் சொல்ல வில்லை. ஆனால் வளர்ந்து வருகிற சனநாயகத்தில் மக்களாட்சியில் ஒவ்வோர் உறுப்பினரும் தங்கள் கடமைகளைச் சரிவரச் செய்ய வேண்டுமென்று அரசு விரும்பினால் நிதிநிலை அறிக்கைகள், ஒவ்வோர் ஆண்டும் தரப்படுகிற நிதிநிலை அறிக்கையின் முறை மாறுபடாமல் அவைகளைத் தொடர்ந்து ஒப்பிட்டுப் பார்க்கும் விதத்தில் அமைந்திருக்க வேண்டுமென்று தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

என்று நிதிநிலை அறிக்கைகள் குறித்துத் தெளிவுபடப் பேசியுள்ளார் அண்ணா.

## 8. தொழிலாளர் சிந்தனை

தொழிலாளர் நிலைபற்றி அண்ணா கூறுகையில்,

> ''தொழிலாளர்கள் இன்பமாய் வாழவேண்டுமானால் முதலில் அடிப்படையில் மாற்றம் செய்தாக வேண்டும். இன்று தொழிலாளர்களில் பலர் மாயப் பிரபஞ்ச வாழ்வைப் பற்றியும், ஆண்டவன் திருவடியில் இரண்டறக் கலப்பது எப்படி என்பதைப் பற்றியும் சிந்தனை செய்து கொண்டிருக்கிறார்களே அதை முதலில் அகற்ற வேண்டும். தொழிலாளர்களுக்கு முதலில் வாழ்க்கையிலே உள்ள சலிப்பைப் போக்க வேண்டும். இந்த உலகம் பெரியது, விழுமியது, வளமுள்ளது என்கிற விரிந்த மனப்பான்மை அவர்களிடையே தோன்றவேண்டும். நாம் வாழப் பிறந்துள்ளோம் என்பதை அவர்கள் உணர வேண்டும்.
>
> நாகரிகம் என்பதன் பொருள் என்ன? நாகரிகமென்பதன் பொருள் விலங்கினங்களைவிட மனிதன் குறைவாக வேலை செய்து அதிகப் பயன் அடைவதுதான். ஆலையில் (மில்லில்) வேலை செய்யும் ஒரு தொழிலாளி விடியற் காலையிலே அயர்ந்து உறங்கும் ஆசைமனைவியிடம் "போய் வருகிறேன்" என்று சொல்லாமலே வெளியில் கிளம்பி விடுகிறான். பால்மணம் மாறாப் பச்சிளங் குழந்தையின் பால்வடியும் வதனத்தைப் பார்த்துக் கொண்டே வெளியேறுகிறான். காலை 6 மணிக்கு மனிதனாக ஆலைக்குள் சென்று நீண்ட நேரத்திற்குப் பின் முன்னாள் (மாஜி) மனிதனாகத் திரும்பி வந்தால் அவன் மனிதனாவது எப்படி?
>
> கோழியோடு அதிகாலையில் விழித்தெழுந்து கோட்டானோடு தூங்குகிறான் நம் தொழிலாளி! ஓயாமல் உழைத்து உழைத்து அருமையான பொருள்களை உற்பத்தி செய்கிறான் தொழிலாளி. ஆனால் அவன் வாழும் வாழ்க்கை எப்படி? சுருங்கச் சொன்னால், அவன் விலங்கு (மிருக) வாழ்க்கை வாழவேண்டியிருக்கிறது. மிருகங்களுக்குக் கிடைக்கும் ஓய்வுகூட ஏழைத் தொழிலாளிக்குக் கிடைக்கவில்லை! உற்பத்தியைப் பெருக்கும் தொழிலாளி உயர முடிகிறதா, பாருங்கள்!

என்று தொழிலாளர்களின் நிலையை வேதனையோடு அண்ணா குறிப்பிடுகிறார்.

சேலத்தில் 200ஆம் நெம்பர் வேட்டியை (உயர்ந்த தரம்) நெய்கிற தொழிலாளி உடுத்துவதோ 30ஆம் நெம்பர்

(குறைந்த தரம்) மோட்டா வேட்டி. தொழிலாளி கட்டுகிறான் நான்கு அடுக்கு மாடிகள். அவன் வாழ்வதோ நாற்றமெடுக்கும் ஓட்டைக் குடிசையில். அந்த ஓட்டைக் குடிசையிலோ ஒன்பதுபேர். மூவாயிரம் வகை நெல் நம்நாட்டிலே பயிராகிறது. ஆனால் பயிரிடும் விவசாயிக்கு உண்ணக் கிடைப்பது கேழ்வரகோ, சோளமோதான். உற்பத்தி பெருகினால் மட்டும் தொழிலாளிக்குப் போதுமா? தொழிலாளிக்கு முக்கியமாக வேண்டியதென்ன? தேவைக் கேற்ற வசதி, சக்திக்கேற்ற உழைப்பு! அரசாங்கம் இதை முறைப்படி வகுக்க வேண்டும். அதிகமாக வேலை செய்யும் மாட்டின் மீது நாம் அதிகக் கவனம் செலுத்து கிறோம். தொழிலாளிக்கோ என்றும் ஒரே நிலை! தொழிலாளி மேனி கருக்க உழைக்கிறான். அவன் உற்பத்தியைப் பெருக்காவிட்டால் நமக்கு உணவேது? உடையேது? வெளியிலிருந்தெல்லாம் சென்னை வந்து குடியேறிய மக்களுக்கு வீடேது? தொழிலாளியின் உழைப்பாலன்றோ பிர்லாவின் பணப்பை நிரம்பியது!. மிட்டாதாரும், மிராசுதாரும் எப்படி உயர்ந்தார்கள்? அவர்கள் நாட்டில் சில நாளும் நகரத்தில் சில நாளும் எப்படி வாழ்க்கை நடத்துகிறார்கள்? தொழிலாளியின் இடைவிடா உழைப்பாலன்றோ வாழ்கிறார்கள்!.''

என்றார் அண்ணா.

9. பணம்

'' 'பணம்'-மனிதனின் கண்டுபிடிப்பு. பொறியியலில் சக்கரமும், அறிவியலில் நெருப்பும், அரசியலில் வாக்குச் சீட்டும் அடிப்படையான கண்டுபிடிப்புகள். அதுபோலப் பொருளியலின் அடிப்படையான கண்டுபிடிப்பு 'பணம்'. ஆதிமனிதன் பணத்தை அறியாதவன். தனக்கு வேண்டிய பொருளைத் தானே தேடிக்கொண்டான். தேடியும் கிடைக்காத போது உற்பத்தி செய்து கொண்டான். காலப்போக்கில் தன்னிடம் உள்ளதைக் கொடுத்து, தனக்கு வேண்டியதைப் பண்டமாற்று முறையில் பெற்றுக் கொண்டான். பண்டமாற்று முறையில் ஏற்பட்ட சிக்கல்களைத் தீர்க்கத்தான் பணம் ஒரு இடையீட்டுக் கருவியாக உருவாக்கப்பட்டது.

பணம் வாழ்க்கைக்கொரு கருவியே ஒழிய அதனை ஆசைக்குரிய பொருளாகக் கொள்ளுதல் கூடாது.

பணப்பித்து கூடாது. வெறும் அலங்காரங்களுக்கும், ஆடம்பரத்துக்கும் பணம் தேடிக் கொண்டிருப்பவனின் வாழ்வு பாழ்படும். அவன் அலைந்து திரிவானே ஒழிய வாழ்க்கையில் இன்பம் காண மாட்டான்.''

என்பது அண்ணாவின் கருத்து.

### ஏழை-பணக்காரன் ஒப்பீடு

செல்வத்தில் திளைக்கும் சீமானுக்கும், வறுமையில் உழலும் ஏழைக்கும் உள்ள வேறுபாட்டை அண்ணா இப்படி கூறுகிறார்:

''ஏழைக்கு உழைக்கும் இடம் ஒன்றில் இருந்து மட்டுமே வருவாய் கிடைக்கும். சீமானுக்கு வருவாய் பல இடங்களிலிருந்து கிடைக்கும். ஆனால் ஏழைக்கும் சீமானுக்கும் ஒரே வயிறுதான், அதில் வேறுபாடு இல்லை. சீமானுக்கு அங்கே பணம் பணத்தை பெற்றுத் தருகிறது. ஏழைக்கு இங்கே உழைப்பு உடலை வாட்டி, உள்ளத்தைக் கசக்கிப் போடுகிறது. அங்கே சீமானுக்குச் செலவு போக இருந்திடும் மிச்சம் முந்திரித் தோப்பாக, மூன்றடுக்கு மாடியாக மாறுகிறது. இங்கே ஏழை உழைத்து உழைத்து உருக்குலைந்ததன் பலன் காசம், குன்மம், கடன்.''

### பணக்காரன்-முதலாளி ஒப்பீடு

'பணக்காரன்தான் முதலாளி என்று தவறாகக் கருதுகின்றனர்; பணக்காரன் முதலாளியல்ல' என்பது அண்ணாவின் கருத்து. அந்தக் கருத்தை அண்ணாவே இப்படி விளக்குகிறார்.

''ஐந்து கோடி வைத்திருப்பவன் அதனை ஐந்தே கால் கோடி, ஆறு கோடி, பத்துக் கோடி என்று பெருக்கும் வகையில் ஆலையை, தொழிற்சாலையை வைத்திருப்பவன் முதலாளி. பிறரை உழைக்க வைத்து விதைக்காது அறுத்தெடுக்கும் முறையை, தொழிலை, தந்திரத்தைக் கையாள்பவன் முதலாளி. ஆனால் பணக்காரன் அப்படியல்ல. பணக்காரன் குளம் குட்டைக்குச் சமமானவன். மழை பெய்தால்தான் குளம், குட்டைகளில் நீர் இருக்கும். இன்றேல் வறண்டு விடும். முதலாளி ஊற்றுக்குச் சமமானவன். ஆனால் ஊற்றோ என்றும் நீர் சுரந்து கொண்டே இருக்கும். ஆக, பணக்காரனை விட முதலாளியின் நிலை பொருளாதார வழியில் உயர்ந்தது.''

என்பது அண்ணாவின் கருத்து.

## 8. சிறப்புத் திட்டங்கள்

உணவு, காவல்துறைச் செலவு, மின்வாரியக் கடன் என்று செலவினங்கள் அதிகரித்துக் கொண்டிருந்த நேரம். இந்தப் பற்றாக்குறையைச் சமாளிக்கவும், அரசின் வருமானத்தை அதிகரிப்பதற்காகவும் பரிசுச் சீட்டுத் திட்டத்தைக் கொண்டு வந்தார் முதல் அமைச்சர் அண்ணா. இது ஒரு தோட்டத் தொழில்; இதிலிருந்து என்ன வருமானம் வந்துவிடும் என்று கூறி வந்த எதிர்க்கட்சியினர் கூடப் பரிசுச்சீட்டுத் திட்டத்திலிருந்து வந்த வருவாயைக் கண்டு மலைத்துப் போனார்கள். நாட்டின் நிதி நிலைமை என்னவாகுமோ, என்று அஞ்சிய மக்களுக்கு ஆறுதல் தரும் விதமாகத்தான் இருந்தன முதல் அமைச்சர் அண்ணாவின் செயல்களும், ஆட்சியும்.

கலப்புமணம் செய்பவர்களுக்குப் பரிசு, வீராணம் ஏரித் திட்டம், தூர்வாரும் திட்டம், புற நகரில் பணிபுரிவோருக்கு நகரப்படி வழங்கல், இலவசக் கல்வி, நில உச்சவரம்பு குறைத்தல், பேருந்து தேசிய மயமாக்கல், சீரணிப்படி போன்ற திட்டங்கள் மக்களை உற்சாகமூட்டின. நாட்டின் நிதி நிலையை உயர்த்த அண்ணாவின் தலைமையில் ஆலோசனை மையம் அமைக்கப்பட்டது. ஆலோசனை மையத்தின் வாயிலாகச் சிறுசேமிப்பின் கட்டாயத் தேவையை மக்களுக்குப் புரிய வைத்தனர். குறைந்த காலத்தில் வருமானத்தைப் பெருக்கிய பெருமை அண்ணாவுக்கு உண்டு. இவையனைத்தும் அண்ணாவின் கூரிய அறிவாலும், நிருவாகத் திறமையாலும் ஏற்பட்டவை ஆகும்.

## 9. அண்ணாவின் பிற பொருளாதாரச் சிந்தனைகள்

- இதுவரை அறிவியலின் விருந்தை நாம் சுவைத்தவர்களே தவிர, சமைத்தவர்கள் இல்லை. வெளிநாட்டார் படைத்து, அழைத்தால் போய் அருந்திவிட்டு, பிறகு குறையும் கூறி இருக்கிறோமே தவிர நாமாக எதையும் கண்டுபிடிக்கவில்லை.
- மனிதனைக் காட்டிலும் திறமையாய்ப் பணியாற்றும் நவீனக் கருவிகளைப் பற்றிக் கூறுகிறார்கள். அதையும் மனிதன்தான் செய்தான் என்பதை மறந்து விடலாகாது.
- அந்நிய நாட்டுப் பணத்தைக் கடனாகவும், இனாமாகவும் பெற்றுத் தொழில் வளர்த்திட முனைவதைத் தேசிய தன்மானத்தைக் கெடுப்பதற்கு ஒப்பாகும்.
- சமூகத்திடமிருந்து பெற்ற உதவிகளை எந்த விதத்திலாவது திருப்பிச் செலுத்திடாமல் போனால் சமூகத்தின் கருவூலம் வறண்டு விடும். பொதுவாழ்வு பாலைவனமாகிவிடும்.

- பொருள் அதற்காகப் பாடுபட்டவனுக்குப் போய்ச் சேர வேண்டும். போய்ச் சேரும் பொருளும் பயனுள்ள செயலுக்குச் செலவிடப்பட வேண்டும்.
- சமனிலைப் பொருளியல் நீதி (சோசியலிசம்) என்பது நல்வாழ்வு என்பது மட்டுமல்ல. சமத்துவத்தை உண்டாக்கப் பாடுபடுவது. சமத்துவம் என்பது எல்லோரையும் ஒரே மாதிரியாக நடத்துவது அல்ல; எல்லோருக்கும் சம வாய்ப்பு தருவதாகும்.

## 3.1 அரசியல் சிந்தனைகள்

ஒரு நாட்டை, சமூகத்தைக் காக்க உருவானது அரசு. அரசு நாட்டை நடத்தும் வழி முறைக்கு அரசியல் என்பது பெயர். நாடு, மக்கள், அரசு, ஆட்சிமுறை முதலியன அரசியலின் நிலைக்களன்கள். அரசியல் முறைகளைச் செம்மையுற நடத்திச் சென்ற சான்றோர்களுள் அண்ணா குறிப்பிடத் தக்கவர். அரசியல் பற்றிய அண்ணாவின் கருத்துகள் தனித்தன்மை வாய்ந்தவை. ''ஒவ்வொருவரும் நாட்டைத் தம் கண் போல் போற்றிப் பாதுகாத்தால்தான் அரசியலும், பண்பாடும், நாடும் நல்ல நிலையில் முன்னேற்றமடையும்.''

என்பது அண்ணாவின் கருத்து.

> ''எல்லாவற்றிற்குமே அடிப்படையானது நாடு. நாடு நலம் பெறத்தான் அரசு. அந்த அரசு நல்ல முறையில் அமைந்து வழிகாட்டவே கட்சிகள். வழி அமைப்பதிலேதான் கட்சிகளுக்குள் வேறுபாடுகள்.''

என்று குறிப்பிடுவது அண்ணாவின் அரசியல் தெளிவு. எனவேதான் அண்ணாவை 'அரசியல் உலகின் அரிமா' என மக்கள் போற்றிக் கொண்டாடினர்.

திராவிட இயக்கம், சுயமரியாதை இயக்கம் ஆகிய இவ்விரண்டும் திராவிடச் சமுதாயம் பெற்றிருக்கும் இரு பெரும் உரிமைப் பாசறைகள் (கருவூலங்கள்). தென்னாட்டின் வாழ்க்கையை வளமுள்ளதாக ஆக்க வந்த ஒப்பற்ற வழிகாட்டிகள். திராவிட இயக்கத்திற்கு அடிப்படை அமைத்தவர் டாக்டர் சி. நடேச முதலியார். அவர் தாம் 'திராவிட சங்கம்' என்பதை 1912ஆம் ஆண்டு சென்னையில் முதல் முதலில் தோற்றுவித்தார். சுயமரியாதை இயக்கத்திற்குக் கால்கோள் நிகழ்த்தியவர் பெரியார் ஈ.வெ.இராமசாமி அவர்கள். இவ் இரண்டு இயக்கங்களையும் அவை அடைபட்டுக் கிடந்த சின்னஞ்சிறு வட்டத்திலிருந்து வெளி உலகத்துக்கு அழைத்துச் சென்று அந்த இயக்கங்கட்கு ஒப்பற்ற செல்வாக்கையும் சிறப்பையும் புகழையும் பாராட்டையும் ஈட்டித் தந்த பெருமை அண்ணாவைச் சேரும்.

அண்ணா தம் எழுத்து, சொல் எனும் இருபெரும் கப்பல்களைத் துணையாகக் கொண்டு எதிர்ப்பு எனும் அலைகடலைக் கிழித்துக் கொண்டு நெடுந்தொலைவு சென்று, புதிய புதிய மண்டலங்களில், திராவிட, சுயமரியாதை இயக்கங்கட்கு, ஆதரவையும் பாராட்டையும் மலைக்கத் தக்க மலை அளவு தேடிக் குவித்தார்.

உலக நாடுகள் பலவற்றின் வரலாறு, அரசியல், மனிதவியல் பற்றியெல்லாம் படித்து ஆட்சி முறைகளுள் வல்லாட்சி (சர்வாதிகாரம்) கேடானது என்றும் மக்களாட்சியே நல்லது என்பதும் அண்ணாவின் அழுத்தமான கருத்தாகும். அவ்வாறு கூறுவதற்கான காரணங்களை நடைமுறை எடுத்துக் காட்டுகள் தந்து விளக்குகிறார் அண்ணா.

## 1. அண்ணாவின் அரசியல் கோட்பாடு

அரசியல்வாதிகளுக்கான சமூக அக்கறை எப்படி இருக்க வேண்டும் என்று அண்ணா இலக்கணம் வகுத்துக் காட்டுகிறார். நாட்டை ஆள்பவர்கள் மக்களின் முன்னேற்றத்தில் பங்கு கொள்பவராக இருக்க வேண்டும். அவர்கள் மக்களின் உரிமைக்கு முதன்மைநிலை (முக்கியத்துவம்) தருபவராக இருத்தல் கட்டாயம் தேவை. நாட்டைப் பாதிக்கும் எந்தக் கொள்கைக்கும் முக்கியத்துவம் கொடுக்கக் கூடாது. போலிகளை நீக்கி, உண்மைகளை உணரத் தலைப்பட வேண்டும். பகட்டுக்கு ஆளாகிப் பண்பிழந்து, திசை மாறிச் சென்று விடக் கூடாது என்று தெளிவுமிளிர உரைக்கிறார். ஒவ்வொருவரும் தமக்கென்று ஒரு கொள்கையினை வகுத்துக் கொண்டு செயல்பட வேண்டும். கொள்கையற்று வாழ்பவர்கள் வாழ்ந்தும் பலனில்லை. கடைப்பிடிக்கும் கொள்கையினை எந்தச் சூழ்நிலையிலும் விட்டுக் கொடுக்காமல் எதிர்த்துப் போராடி வெற்றி காண வேண்டும் என்று அரசியல்வாதிகளுக்கான சமுதாய அக்கறையை எடுத்துக் கூறியுள்ளார்.

## 2. பண்பாட்டு அடிப்படையில் அரசியல்

வாழ்க்கையோடு அரசியல் ஒன்றிவிட்டது. சமூக, பொருளாதார முறைகள் அரசியல் முறை உறவை ஒட்டி அமைகின்றன. ஆதலால் அண்ணா தம் கழகத்தின் தலையாய கொள்கையை, சமூக, பொருளாதார முறை உறவில் நிலைப்படுத்தாமல், அரசியல் முறை உறவில் நிலைப்படுத்தனார் என்பது குறிப்பிடத் தக்கது.

அண்ணா விரும்பும் அரசியல் முறை உறவு தமிழர் உள்ளிட்ட திராவிட இன மக்களின் முன்னேற்றத்திற்குப் பொருத்தமான ஓர் அரசியல் முறை. ஒவ்வோர் இனத்தாருக்கும் தனித்தன்மை பொருந்திய தனித்தனிக் குணங்கள், பண்புகள் உள்ளன. சமுதாயத் தலைவர்களின் எண்ணங்கள், அந்தப் பொது நினைவோட்டத்தை ஒட்டியே இயங்கும். அப்போதுதான் அத்தலைவர்கள் தீட்டும் சமுதாய, பொருளாதார

வாழ்க்கைச் சீரமைப்பு முயற்சிகள் எதிர்ப்பின்றி அமைதியாக நிறைவேறும். அதனை நிறைவேற்ற மக்கள் ஆற்றல் (சக்தி) திரண்டெழுந்து துணை நிற்கும்.

அரசியல், சமூக, பொருளாதார சிக்கல்களை வரலாற்றுப் பின்னணியில் சிந்தித்து, உளவியல் கண்ணோட்டத்தில் ஆராய்ந்து, பண்பாட்டு அடிப்படையில் தீர்வுகாண முயன்றது அண்ணாவின் தனித் தன்மை.

அறவொழுக்கம் ஒரு நாட்டின் ஆணிவேர்' என்பது அறிஞர் ரூசோவின் கருத்து. இக்கருத்து அண்ணாவிற்கு ஏற்புடைய ஒன்றாகும்.

> ''ஒரு நாடு நல்ல நாடு எனப் பெயர் பெறுவதைக் காட்டிலும் மேலான, நிலையான செல்வம் வேறு இல்லை. எது நல்ல நாடு? ஒருவரையொருவர் தாழ்த்தும் இழி தன்மை இல்லாதது நாடு. நிறம், மதம், மொழி, குலம் எனும் பிரிவுகள் ஏற்படாமல் 'எல்லோரும் ஓர் குலம், எல்லோரும் ஓரினம்' என்று ஏற்றுக் கொள்ளப் பெற்றுள்ள இடமே நல்ல நாடு ஆகும். ஒரு நாட்டின் சிறப்பு, அந்நாடு மக்களை எத்துணை நேர்த்தியாக வாழ வைத்திருக்கிறது, பிற நாடுகளுக்கு எத்துணை நட்புணர்ச்சி காட்டுகிறது, உலகம் மேம்பாடு அடைய, மனித குலம் தழைத்திட, பண்பாடு மிகுந்திட எவ்வகையில் பணி புரிகிறது என்பதிலேயே இருக்கிறது.''

என்பார் அண்ணா.

### 3. நாட்டுப் பற்று

மக்கள் கொண்டிருக்கும் பற்றுகள் எல்லாவற்றுக்கும் நாட்டுப்பற்றுதான் அடிப்படையான பற்றாகும் என்பது அண்ணாவின் அசைக்க முடியாத நம்பிக்கை. நாட்டுப்பற்று, இனப்பற்று, மொழிப்பற்று எதுவானாலும் நன்மை செய்வதாய் இருத்தல் வேண்டும். வேறு யாருக்கும், மாற்றுப் பற்று உள்ளவர்களுக்கும் எந்தப் பொல்லாங்கும் விளையக் கூடாது என்பதிலே கண்ணும் கருத்துமாக இருந்து வந்தார் அண்ணா.

> ''மற்ற எந்த வகையான பற்றுடன் நாம் வாழ்ந்திட வேண்டும் என்றாலும், இருந்திட ஒரு நாடு; அந்நாட்டுக்கு ஒரு நிலையான வாழ்வு; அடிமைப்படுத்தப்படாத ஒரு நிலை; இருந்தாக வேண்டும். ஒரு நாட்டுக் குடிமகனாக இருந்துகொண்டுதான், மொழிப்பற்று, மதப்பற்று போன்ற எந்தப் பற்றினையும் பெற்றுப் போற்றி வாழ முடியும். நாடோடி நிலையோ அல்லது வலுத்தவன் தாக்குதலுக்கு

> அடிபணிந்திடும் போக்கோ இருக்குமானால், வேறு எந்தப் பற்றும் கொண்டிட வழி கிடையாது. சுவர் இருந்தால் தானே சித்திரம். ஆதலால் பற்றுகள் எல்லாவற்றுக்கும் நாட்டுப் பற்றுதான் அடிப்படையான பற்றாகும்.''

மாநிலம், நாடு இவற்றைக் கடந்து உலகளாவிய பார்வையும் அண்ணாவுக்கு உண்டு.

> ''ஒவ்வொரு குடிமகனுக்கும்; நாட்டுப்பற்று இன்றியமையாதது. ஆனால் அது, நாட்டை வளப்படுத்த உதவ வேண்டும். தூய்மையுடையதாக விளங்க வேண்டும். தனது நாட்டுத் தத்துவம், மொழி, இலக்கியம், கலை, தொழில் நுட்பம் என்று கூறிப் பெருமையடைவது முதல் கட்டம். ஆனால் அது படிப்படியாக வளர்ந்து உலகிலே பல்வேறு நாட்டாரால் பாராட்டப் பெறுவது இரண்டாவது கட்டம். 'வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ்நாடு' என்றன்றோ சி. சுப்பிரமணிய பாரதியார் கூறினார். தமிழ் நாட்டைப் பாடியவர் உலகினையும் மறந்தாரில்லை.''

இவ்வாறு அண்ணா எடுத்துக் காட்டி விளக்கும்போது அவர்தம் நாட்டுப் பற்று விரிவானது என்பது தெளிவு பெறுகிறது.

### 4. நாட்டு ஒற்றுமை

1965இல் பாகிஸ்தான் இந்தியாவின் மீது படையெடுத்தபோது அவர் ''தம்பிக்கு மடல்களில்'' எழுதியவை நாட்டு ஒற்றுமையில் அண்ணா கொண்டிருந்த ஆர்வத்தைப் புலப்படுத்துவன.

> ''கட்சிப் பூசல்கள், கிளர்ச்சிகள் எல்லாம் தாமாக மறைந்துவிட்டன. நாட்டைக் காத்திடும் பணியில் நாம் அனைவரும் ஒன்று என்ற முழக்கம் கேட்பது மட்டுமன்று; உறுதியும் ஏற்பட்டுள்ளது.''

என்னும் குறிப்புரை நாட்டுப்பற்றில் அவர் கொண்டிருந்த உறுதியைக் குறிப்பதாக உள்ளது.

> "தம்பி! சமூகத்தில் எந்தவிதமான சலசலப்பும், பரபரப்பும், ஒற்றுமைக் குறைவும் ஏற்படக் கூடாது. ஓர் உன்னதமான ஒற்றுமையுணர்ச்சி மலரவேண்டும். அதற்கு ஆவன செய்திட முனைந்திடு! வதந்திகள், வீண் விவாதங்கள், இட்டுக் கட்டுதல் இவை அறவே தவிர்க்கப்பட வேண்டும்."

என்று ''தம்பிக்கு மடல்'' எழுதினார் அண்ணா.

## 5. அரசு

மக்களுக்காகத்தான் அரசு. அரசுக்காக மக்கள் என்னும் கூர்மையான எண்ணம் எப்போதோ பட்டுப்போய்விட்டது. மக்கள் பண்புகள் அரசு ஆணைகளால் வலிந்து புகுத்தப் பெற்று வளர முடியாது. ஆதலால் மக்களுடைய இன்றியமையாத உரிமைகளைப் போற்றுவது ஓர் அரசின் கடமையாகும். மனித இனத்துக்குரிய அறங்களையும் நியாயங்களையும் தொலைநோக்குடன் ஆராய்ந்தார் அண்ணா.

மக்கள் ஆதரவுதான் எந்த ஓர் அரசுக்கும் அடித்தளம் என்பதை விளக்கும் அண்ணாவின் சிந்தனை சிந்திக்கத் தக்கது.

> ''மாற்றத்தக்கது ஆட்சி; நீக்கத் தக்கவர்கள் ஆளவந்தோர்; தீர்ப்பளிக்கத் தக்கவர்கள்-மக்கள்! என்னும் இலக்கணத்தின் அடிப்படையில் அமைக்கப்படாத அரசுகள், அடித்தளம் அற்ற கட்டடங்களாகும். மக்களின் கோபம் எனும் கடும்காற்று வீசும் போது சாய்ந்து வீழ்ந்து போகும்.''

என்று எச்சரிக்கிறார் அண்ணா.

ஓர் அரசின் கடமைகள் யாவை, என அண்ணா தெளிவாக வரையறை செய்கிறார். அவற்றைச் சட்டம், காவல், நீதி, சமூகப் பொறுப்பு என்னும் தலைப்புகளில் தெளிவாக்குகிறார்.

## 6. சட்டம்

> ''சட்டம் என்றால் என்ன? அனைவரும் வாழவேண்டும். அதற்கு ஊறு ஏற்படாத முறையில் நாம் ஒவ்வொருவரும் வாழ்க்கை முறையை அமைத்துக் கொண்டு ஒழுக வேண்டும். அதனைக் கட்டிக்காத்து வருவதே சட்டம். எனவே, சட்டம் அறவழியைப் பாதுகாத்துத் தருகிறது. ஆகவே, அறம் நிலைக்க, சட்டம் அச்சாணியாகிறது. சட்டம் சமுதாயத்தை உருவாக்கி, வளரச் செய்து அதனுடைய தரத்தையும் உயர்த்துகிறது.''

என்றார் அண்ணா.

சட்டம் எப்படி இருக்க வேண்டும் என்பதையும் எடுத்துக் காட்டுடன் விளக்குகிறார் அண்ணா.

சட்டம் சமூக நோய்களைக் களையும் மருந்துபோல் இருக்க வேண்டும். ஆனால் அம்மருந்து முறைப்படி செய்யப்பட்டதாக இருக்க வேண்டும். அத்துறை வல்லுநர்களின் ஒப்புதலைப் பெற்றதாகவும் நோயைத் தீர்ப்பதாகவும் அமையவேண்டும். அவ்வாறு தயாரிக்கப்

பட்டதாக இருந்தால், மக்கள் அம்மருந்தை ஏற்றுக் கொள்வார்கள். கசப்பு, குமட்டல், எரிச்சல் உண்டாக்கினாலும் உட்கொள்வார்கள். அவ்வாறின்றிப் பொருள், வகை, செய்முறை முதலியவற்றை அறியாது கண்மூடித்தனமாக, விளக்கமற்ற நிலையில் விரைவு அதிகம் காட்டி, அவசரமாகத் தயாரித்த மருந்தாயின் அதனை உட்கொள்ளமாட்டார்கள். உட்கொண்டால், நோயினும் கேடு மிகுந்துவிடும். சுருக்கிச் சொன்னால், மருந்தைத் தயாரிப்பவர்கள் கவனமாகவும் அவசரப் படாமலும் நோய் நாடி நோய் முதல் நாடி, தயாரிப்பதுபோலச் சட்டம் இயற்றுபவர்கள் சட்டங்களை இயற்றவேண்டும். அச்சட்டம் மக்களுக்கு ஏற்றதாக நோய் களைவதாக விளங்கவேண்டும் என்பதே அண்ணா வழங்கும் கருத்துரை ஆகும்.

## 7. காவல்

நாட்டில் அகப்பாதுகாப்பு இருந்தால்தான் புறப்பாதுகாப்பு ஏற்படுத்த முடியும் என்பது அண்ணாவின் கருத்து.

> ''நாட்டைப் பாதுகாப்பது அரசின் கடமை. எவ்வாறு பாதுகாப்பது, ஒரு நாட்டின் பாதுகாப்பு அதன் பரப்பளவு என்பதிலேயோ, இராணுவம், விமானங்கள், கப்பல்கள் ஆகியவை எத்தனை உண்டு என்ற கணக்கிலேயோ இல்லை. அந்தந்த நாட்டு மக்களின் விவேகத்திலும், நாணயத்திலும்தான் ஒரு நாட்டின் பாதுகாப்பு இருக்கிறது. ஆதலால் மக்களிடையே அறிவுத் தெளிவு உண்டாக்க வேண்டும். நேர்மையான நெஞ்சத்தை உருவாக்க வேண்டும். அப்போது தான் ஒரு நாடு பாதுகாப்பாக இருக்க முடியும்.''

என்கிறார் அண்ணா.

## 8. நீதி

அண்ணா தம் வாழ்நாள் முழுவதும் கொண்டிருந்த பெருமுயற்சி மெய்ப்பொருளைக் காண்பது ஆகும். அதன் விளைவாகப் பகுத்தறிவு பெற்றார். எது சரி, எது தவறு, என உணர்ந்தார், உணர்த்தினார். ஆனால் அவர் உணர்த்திய கருத்துகள் ஏற்கப்பட்டனவா? அதற்கு அண்ணா அளிக்கும் விடை,

> ''கருத்துகள் ஏற்கப்படும் என்று உறுதி இல்லை. கடமையைச் செய்துவிட்டு நிலைமையை மக்களிடம் எடுத்து விளக்க வேண்டும்.''

என்பதாகும். இது அவருடைய நீதியான நெஞ்சத்தைக் காட்டும் கண்ணாடி.

அண்ணா நீதி பற்றி அறிவிக்கும் மற்றொரு மடல் குறிப்பு.

> "நீதி நிலைநாட்ட, பிறர் நன்மை பெற, ஊர் வாழ, உரிமை காத்திட இவை போன்றவைகளுக்காகப் பணியாற்றிடும் போது, உண்மை பேச வேண்டும். அவ்விதம் பேசுவதால் தன் உயிருக்கே ஆபத்து வந்திடும் என்றாலும் கவலையற்று, கலங்காமல் உண்மையைக் கூற வேண்டும். உண்மையைக் கூறுவதால் மற்றவருடைய உயிருக்கு ஆபத்து ஏற்படும் என்றாலோ, மற்றவருடைய மனம் வேதனைப்படும் என்றாலோ, உண்மையைக் கூறாமலிருப்பது பக்குவத்தில் ஒன்றாகும்."

புரைதீர்ந்த நன்மையைக் கருதும் திருவள்ளுவரின் திருக்குறள் கருத்துக்கு நிகரானது இக்கருத்து. அத்தகைய 'பக்குவம்' அண்ணாவிடம் நிரம்ப இருந்தது. அதனால்தான் அவரால் பல ஆற்றலாளர்களையும் ஒன்று திரட்டி அரசியலில் வெற்றி பெற முடிந்தது.

### 9. உரிமைகள்

மக்களுக்கு நாட்டு உரிமை, இன உரிமை, மொழி உரிமை, இவற்றோடு பண்பாட்டு உரிமையும் அடிப்படையான உரிமை என மொழிந்தார் அண்ணா. உரிமைகள் எல்லாவற்றுள்ளும் அவர் போற்றிக் கொண்டாடியது சிந்திக்கும் உரிமை. அதன் விளைவாக அவர் கொண்டிருந்த கருத்தொன்று குறிப்பிடத்தக்கது. அது என்ன எனில்,

> எல்லாச் சட்டத்திலும் மேலானது, உயிரானது, புனிதமானது அரசு அமைப்புச் சட்டம் என்கிறார்கள். அதனைவிட மேலானது, புனிதமானது மக்களின் நல்வாழ்வுக்கான அடிப்படை உரிமைகள்.

என்பதாகும்.

> " 'செயல்களில் தலைசிறந்தது குடிமக்கள் தாமே மனம் உவந்து ஒருமைப்பட்டு இயங்குவதே ஆகும். மனிதன் சுதந்திரமாய்ப் பிறந்தவன், அவனுக்கு நாயகன் அவனே. பணிந்து வாழும்படி ஒருவரை வற்புறுத்துவதற்கு எவருக்கும் எவ்வித அதிகாரமும் இல்லை. 'அடிமை யொருவனின் மகனும் அடிமையே! என்று முடிவு செய்வது மனிதப் பிறப்பையே மறுப்பதாகும்."

என்பது ரூசோவின் கோட்பாடு. இந்த அடிப்படையில் அமைந்தவையே மக்கள் உரிமைகளைப் பற்றிய அண்ணாவின் சிந்தனைகள்.

### 10. கடமைகள்

மக்கள் சமூக உணர்வு மிகுந்து செயல்பட வேண்டும் என்பது அண்ணாவின் எதிர்பார்ப்பாகும். அரசியலைத் தேவையான அலுவல்

என நினைப்பது கடமைகளுள் ஒன்று. சொத்துச் சேர்த்துவிட்டு நாட்டை நயவஞ்சகர்கள் கொட்டமடிக்கும் காடாக விட்டுவிடக் கூடாது என்பது அவரது எச்சரிக்கை. அறம் அழித்துப் பொருளீட்டும் கள்ளச் சந்தை வாணிகம், ஏய்த்துப் பொருளாக்கும் பேராசை முதலானவற்றை வெறுத்து ஒதுக்குவதும் மக்கள் தம் கடமைகளை நெறிப்படுத்திக் கொள்ளத் துணை செய்யும் என்பது அண்ணாவின் கருத்து.

கடமைகள் பற்றிய மற்றொரு குறிப்பு அவருக்கே உரிய தனித்தன்மை கொண்டது.

> ''ஐயன் அளித்தான் என்றும், அவர் ஆற்றல் அது என்றும் தத்துவம் கூறிடுதல் உண்டு. ஐயன் சிலருக்கல்ல; எல்லோருக்கும் பொது. எல்லாம் எல்லோருக்கும் எனும் முறை அறிந்தவனே இறைவன். இறைவனைத் திரையாக்கிக் கொண்டு ஏழையரை வஞ்சித்து இலாபம் பெற்று, ஐயன் அளித்தது என்று பேசுவது முறையா?''

என்று கேட்கிறார் அண்ணா.

## 11. சமூகப் பொறுப்பு

> ''மக்களின் அடிப்படைத் தேவைகளான உணவு, உடை, இருப்பிடம் ஆகியவற்றை வழங்குவது ஓர் அரசின் சமூகப் பொறுப்புகளுள் தலையாயது.''

என அண்ணா வற்புறுத்துகிறார்.

> ''மக்களாட்சி முறையில் மக்களைத் திருப்திபடுத்தும் விதமாக வரவு செலவுத் திட்டம் ('பட்ஜெட்') தயாரிப்பது குற்றமன்று.''

என்று ஒரு மடலில் கருத்து தெரிவிக்கிறார். மேலும், அவதிக்கு ஆளான மக்களின் மறுவாழ்வுக்கு அரசு பொறுப்பேற்க வேண்டும் என்பதும் அவரது திண்ணிய கருத்தாகும். அவதியுறும் மக்களுக்கு வாழ்வு அளித்திடவும், அழிவு தந்த புண்களைப் போக்கிடவும், பலமும் மக்கள் பால் பரிவும் கொண்ட அரசு அல்லாமல் வேறு எந்தத் தனிப்பட்ட அமைப்பினாலும் இயலாது எனத் தெளிவாக உரைக்கிறார். இவை யாவும் அரசு கவனிக்க வேண்டிய சமூகப் பொறுப்புகளுள் இன்றியமையாதவை என்பது அண்ணாவின் எண்ணம்.

## 12. வல்லாதிக்க ஆட்சி (சர்வாதிகாரம்)

பல நாடுகளை எடுத்துக்காட்டி அங்கெல்லாம் ஏற்பட்ட வல்லாதிக்க ஆட்சிகளின் தீமைகளை அண்ணா விளக்குகிறார். அல்ஜீரியா, எகிப்து, கானா, இந்தோனேசியா, கியூபா, ஸ்பெயின்,

அர்ஜெண்டைனா, பிரேசில், பாகிஸ்தான் முதலான பல நாடுகளின் வரலாறுகளையும் ஆங்காங்கே நடந்த அரசியல் அமளிகளையும் சுட்டிக்காட்டுகிறார் அவர்.

ஒரே கட்சியின் ஆட்சி தொடர்ந்து நடைபெற்று வரும் மக்கள் ஆட்சியும் கூட வல்லாதிக்க ஆட்சியே ஆகும் என்பது அண்ணாவின் கருத்து. வல்லாதிக்க ஆட்சி முறையை அவர் போற்றாததற்கு அடிப்படைக் காரணம், அந்தக் கொடுங்கோல் தனி மனிதனைவிட நாட்டை மையமாகக் கொண்டிருப்பதுதான். இத்தகு அரசுமுறை, உணர்ச்சிகளைத் தூண்டிவிட்டு உலகத்தில் எல்லோரையும் விட மேலோங்கி இருக்கவேண்டும் என்னும் பேராசையை எழுப்பும். இது அறிவு முறைக்கு எதிரானது. ஆதலால்தான் அண்ணா கண்டிக்க முற்படுகிறார். அவருடைய சிந்தனைகள் அறிவுமுறைச் சிந்தனைகள் என்பது குறிப்பிடத்தக்கது.

## 13. தேர்தல்கள்

> ''எந்த அளவுக்கு மக்களாட்சி உயர்ந்த முறையிலான அமைப்பாக உள்ளதோ, அந்த அளவுக்குத் தேர்தல்கள் உயர்ந்த முறையிலான தன்மையுடன் செயலளவில், நடைமுறையில் இருப்பதில்லை.''

என்பது அண்ணாவின் கருத்து. காரணம் அரசியல் அப்படிப்பட்டதாக ஆகிவிடுவதுதான். அரசியலில் சூதும் அடுத்துக் கெடுக்கும் திறனும் தேவைப்படுகின்றன. அதன் பயனாக இயல்பாகவுள்ள நற்குணமே நாளாவட்டத்தில் நசிந்து போகிறது. இவ்வுண்மையினை அண்ணா பொதுத் தேர்தலில் ஈடுபடுவதற்கு முன்னமேயே அறிந்துள்ளார்.

> ''உள்ளதை மறைத்தல், இல்லது புனைதல், இளித்துக் கிடத்தல் என்று எதையாவது செய்து தேர்தலில் வெற்றி பெற்றாக வேண்டும் என்கிற இழிதன்மை புகுந்துவிடுவது இயல்பு.''

என்று அவரது குறிப்பு ஒன்று அறிவிக்கிறது.

அண்ணா பெரியாரைப் பின்பற்றி அவர் வழியில் நின்றதால், அவரைப் பிரிந்து வந்து தனிக்கட்சி கண்ட பிறகும் பெரியார் போலவே தேர்தலில் ஆர்வம் காட்டவில்லை. ஆதலால் 1952இல் நடந்த முதலாவது பொதுத் தேர்தலில் தி.மு. கழகம் பங்குகொள்ளவில்லை.

தேர்தல்களைப்பற்றி அண்ணா வழங்கியுள்ள சில நெறிமுறைகள் மிகவும் நுண்மையானவையாகவும், ஆழ்ந்து கவனிக்கத் தக்கவையாகவும் அமைந்துள்ளன.

''நாம் மேற்கொண்டுள்ள இலட்சியம் மகத்தானது. அதனை எடுத்து விளக்கவும், அதற்கு வலிவு தேடவும், அது வெற்றி பெறுவதற்கான வாய்ப்பு வளரவும் தேர்தல் காரியம் பயன்படவேண்டும். வெறும் தேர்தல் வெற்றிக்காக இலட்சியத்தை மாற்றிடும் போக்கு ஆகாது; கூடாது. எத்தனை எத்தனை இல்லங்களிலும், இதயங்களிலும் நமது இலட்சியத்தைப் பதியவைப்பதற்கு இத்தேர்தலைப் பயன்படுத்துகிறோம் என்பதுதான் முக்கியமே தவிர, என்னென்ன சூது, சூழ்ச்சி, வளைதல், நெளிதல் நடத்தி வெற்றி தேடுகிறோம் என்பது முக்கியமல்ல. நமது வறுமையும், எளிமையும், எவற்றினாலும் பாழ்படாத நமது தூய்மையும் நமக்கு வெற்றிதரப் போதுமானவை என்று நான் திடமாக நம்புகிறேன் தம்பி.''

என்ற உறுதிமிளிர உரைக்கிறார் அண்ணா.

தேர்தல் குறித்த அண்ணாவின் சிந்தனைகள் இன்றைக்கும் ஏற்புடைய வழிகாட்டி விளக்குகள் ஆகும்.

''மக்களாட்சி முறையிலே நம்பிக்கை உள்ள எவரும் தேர்தலில் வெற்றி கிடைக்காமல் போய்விடுவதைப் பெரிய விபத்தாகவோ, தமது சொந்தத் தன்மானத்துக்கு ஏற்பட்டுவிட்ட களங்கம் என்றோ எண்ணிக் கொள்வது மிகத் தவறு. அவ்விதமான எண்ணம் கொண்டு, தமது மனத்துக்குத் தாமே வேதனையைத் தேடிக் கொள்வது மிகமிகத் தவறு.''

''வெற்றி தோல்விகள் என்பது வாக்குச் சீட்டு எண்ணி அறிவிக்கப்படும் முடிவுகள் காட்டும் பாடத்துடன் நின்று விடுவதன்று. ஒரு கட்சியின் தாங்கும் சக்தியைக் கணக்கெடுப்பதே இதில் முக்கியமான பாடமாகக் கொள்ளவேண்டும்.

தேர்தலில் ஈடுபடும் கழகத் தொண்டர்களுக்கு அண்ணா இப்படி அறிவுரை கூறுகிறார்:

''அங்காடியை மறவாதே! அறநெறியினின்றும் பிறழாதே! ஆர்வத்தைக் குறைத்துக் கொள்ளாதே! ஆத்திரத்துக்கு இடம் அளித்துவிடாதே! ஏசினால் கோபம் கொள்ளாதே! செலவாகும் ஒவ்வொரு உரூபாயிலும் ஓர் அணா, தேர்தல் செலவுக்கு எடுத்து வை. இன்றே தொடங்கு, இனிதே வெற்றி கிடைக்கும்.''

சிந்தையில் கொள்ள வேண்டிய மேன்மைமிகு சிந்தனைகள் இவை.

## 14. பேச்சுரிமை

நாட்டு மக்களுக்கு உள்ள அடிப்படையான உரிமைகளுள் ஒன்று பேச்சுரிமை. எத்தனையோ இன்னல்களைத் தாங்கித் தாங்கித் தகர்ந்து போகாமல் பேரறிவாளர்கள் ஜனநாயகப் பயிரைத் தழைக்கச் செய்திருக்கிறார்கள். இதனை நன்கு உணர்ந்தவர் அண்ணா. வால்டேர் கூற்று ஒன்றினை மேற்கோள்காட்டிக் கருத்தொன்று வழங்குவார்:

> ''உன்னுடைய கருத்தை நான் ஏற்றுக்கொள்ள மாட்டேன். ஆனால் நீ உன்னுடைய கருத்தை எடுத்துக் கூறும் உரிமையை எவன் எதிர்த்தாலும் அவனை நான் எதிர்த்து உன் உரிமையைப் பெற்றுத் தருவேன்.
>
> மக்களாட்சி தழைத்திட, கனிந்திட, பேச்சு உரிமை பேணிக் காப்பாற்றப்பட வேண்டும்.''

என்பது அண்ணாவின் கருத்து.

கருத்து வளர்ச்சிக்குப் பேச்சுரிமை இன்றியமையாதது. இதை அண்ணா விளக்கும் முறை கருத்துப் போரை வரவேற்பதாக அமைந்துள்ளது.

> ''ஏற்படும் எண்ணத்தை எடுத்துக் கூற வழி ஏற்பட வேண்டும். கூறுவதைக் கேட்டிடத் தன் போன்றோர் இருக்கவேண்டும். அவர்கள் அதைக் கேட்டுத் தமது கருத்தினைக் கூற வேண்டும். இரு கருத்துகளும் ஒன்றோடொன்று தழுவியோ, மோதியோ, புதுப்புது பொலிவு பெற வேண்டும். எண்ண வளர்ச்சி அப்போதுதான் ஏற்பட முடியும்.''

''அமைதியான முறையை விட்டுச் செல்வது 'பாசிசம்' ஆகும்'' என்பார் நேரு. வாழ்வா? சாவா? என்பது போன்ற போர் நெறியை அண்ணா விரும்பியதில்லை. ஆதலால்தான் அவர் இந்தி எதிர்ப்பின்போது நடந்த தீக்குளிப்பு நிகழ்ச்சிகளைக் கண்டனம் செய்தார்.

> ''எந்த ஒரு நாடும், தனது சிறப்பினை, இரத்தத்தால் மட்டுமே எழுதிக் காட்டிட வேண்டும் என்ற நிலையினை நாம் விரும்புவர் அல்ல; அது வரவேற்கத் தக்கதுமன்று, ஆதரிக்கத் தக்கதுமன்று.''

என்பது அண்ணாவின் கருத்து.

## 15. அண்ணாவின் முத்தான அரசியல் சிந்தனைகள்

அரசியலின் மூலம் நாம் வேண்டுவது சில்லறைப் பதவிகளையல்ல; சிங்கார வாழ்வையல்ல. நமது இனத்தின் விடுதலையை நாம்

விரும்புகிறோம். அதற்கே அரசியலை நாம் துணைகொள்கிறோம். அதன் பொருட்டே அரசியலில் பணியாற்றுகிறோம்.

- படித்தவர்கள் அரசியலில் இருந்து ஒதுங்கி இருப்பதனால்தான் யார் யாரோ அரசியலில் ஈடுபட்டுத் தாம் படித்த அளவுக்கு, தமக்குத் தெரிந்த தரத்துக்கு அரசியலை இறக்கி விட்டார்கள்.
- தனிப்பட்ட ஆளைவிடக் கட்சி பெரிது. கட்சியை விடக் கொள்கை பெரிது.
- வெற்றி எந்த நேரத்தில் எந்தக் கட்சிக்குக் கிட்டுகிறதோ, அந்தக் கட்சியை வலுவுள்ள கட்சி என எண்ணிக் கொள்வது தெளிவற்றோர் பெற்றிடும் மனமயக்கம்.
- மக்கள் கரம் ஏர் பிடிக்கும்; கூப்பும்; தழுவும்; வரி செலுத்தும்; வணக்கம் கூறும். ஆனால் தாங்கொணாத கொடுமை செய்து உரிமையைப் பறித்திடக் கொடுங்கோலன் கிளம்பினால் அந்தக் கரம் அவன் சிரம் அறுக்கும்!
- அதிகாரம் கள்ளினும், காமத்தினும் போதை மிக்கது. ஒருமுறை அனுபவப்பட்டு விட்டவர்கள் வெகு எளிதில் அதனைக் கைவிடத் துணியார்.
- அரசியலில் சொல்லித் தெரிந்து கொள்வது ஒன்றுமில்லை. எண்ணித்தான் தெரிந்து கொள்ள வேண்டும். எண்ணி என்றால் சிந்தித்து அல்ல-ஒன்று, இரண்டு, மூன்று என்று ஆளை எண்ணித்தான் தெரிந்து கொள்ள வெண்டும்.
- கதம்பத்தில் மலர்கள் குறைவாகவும், தழை அதிகமாகவும் இருப்பின் மாதர் கொள்ளார். அதுபோலவே பேசும் பேச்சிலே கருத்து அங்கொன்றும், இங்கொன்றுமாக இருப்பின் எவரும் கொள்ளார்.
- ஒரு கட்சியினுடைய வலிமை அதனுடைய சுயபலத்தில் இல்லை. அந்தக் கட்சியை எதிர்க்கின்ற எதிர்க்கட்சிகளின் வலிவின்மையில்தான் இருக்கிறது.
- அரசமைப்புச் சட்டம் நிலையானது அல்ல. சனநாயக நாட்டில் அதனைத் திருத்த அந்த மக்களுக்கு எல்லா உரிமையும் உண்டு.
- ‘நான்’ என்பதிலிருந்து ‘நாம்’ என்னும் கட்டம் பயணமாவதற்கு ஒவ்வொரு நாட்டிலும் கொட்டப்பட்ட வியர்வையும், குருதியும் (இரத்தமும்), காணிக்கையும் கொஞ்சமல்ல.

ஏற்றம் இறைக்கும் போது மேலே உள்ளவர்கள் கீழே போய், கீழே உள்ளவர்கள் மேலே போனால்தான் கேணியில் இருக்கிற தண்ணீர் வெளியே வரும். அதுபோல எதிர்க்கட்சி -ஆளும்கட்சி மாறி மாறி வரவேண்டும். நான் ஒருவன்தான் இருப்பேன் என்றால் ஏற்றம் இயங்காது.

16. நிறைவாக . . .

உலக வரலாற்றில் தம் அரசியல் இயக்கத்தை ஒரு குடும்ப உறவாக வளர்த்த பெருமைக்குரிய ஒரே தலைவர் அண்ணா. தலைவர் - தொண்டர் என்னும் நிலையை மாற்றி அண்ணன்-தம்பி என்னும் உறவுநிலையை நிலைநாட்டிய அரசியல் அறிஞர்-அண்ணா அவர்கள்.

> ''தம்பி நான் உனக்குத் தலைவனில்லை. உனக்கு அண்ணன். உன் குடும்பத்தின் மூத்த மகன். ஒரு தாய் நம்மைச் சுமக்க முடியாத காரணத்தால் தனித்தனியாகப் பிறந்திருக்கிறோம்.''

பேரறிஞர் அண்ணாவின் அரசியல் சார்ந்த இத்தகைய சிந்தனைகளே பன்முக ஆற்றலாகப் பரிணமித்து அவரைத் தனிப்பெருமை மிக்க அரசியல் தலைவராக ஆக்கியன.

3.2 அறிவியல் சிந்தனைகள்

எந்த ஒரு நாகரிகத்துக்கும் அடிப்படை அறிவியலே. மனிதனுக்குச் சிந்தனை ஆற்றல் சூழலை மேம்படுத்திக் கொள்ள அறிவியலைப் பயன்படுத்தினான். கற்களைப் பலமாக வீசி விலங்கினைக் காயப்படுத்தி அதனை நகர முடியாமல் செய்தான். பின்னர்க் கற்களைக் கூர்மையாக்கித் தாக்கும் ஆற்றலை அதிகப் படுத்தினான். இப்படி கற்கால மனிதன் காலத்திலிருந்தே ஒவ்வொரு காலகட்டத்திலும் அறிவியல் நம் வாழ்வோடு இணைந்தே வந்திருக்கிறது.

மக்கள் தொகைப் பெருக்கத்தால் உலகில் உணவுப் பஞ்சம் தலைவிரித்தாடும் என்னும் மால்தசின் கூற்றை அறிவியலின் பசுமைப் புரட்சி பொய்யாக்கி விட்டது. வேளாண்மை (விவசாயம்), மருத்துவம், போக்குவரத்து, தகவல் தொடர்பு என்று அனைத்துத் துறையிலும் அறிவியல் தடம் பதித்துள்ளது.

உலக அரங்கில் இந்தியா ஆன்மீகத்திற்கும் அகிம்சைக்கும் பெயர்பெற்றது. ஆன்மீகச் சான்றோர்கள், நாட்டுத்தலைவர்கள், விடுதலைப் போராட்டத் தியாகிகள் போன்றோரைப் போற்றிக் கொண்டாடுகிறோம். ஆனால் அந்த அளவிற்கு அறிவியலையும்,

அறிவியல் அறிஞர்களையும் போற்றிக் கொண்டாடுவது இல்லை. அறிவியலும், அறிவியல் மேதைகளும் போற்றப்பட வேண்டும் என்கிற அடிப்படையில்தான் 1987ஆம் ஆண்டு 'தேசிய அறிவியல் நாளை' இந்திய அரசு கொண்டு வந்தது. தமிழ்நாட்டின் மண்ணில் பிறந்து உலகம் போற்றும் அறிவியல் மேதையாகத் திகழ்ந்து நோபல் பரிசு பெற்ற சர்.சி.வி.ராமன் தம்முடைய ஆராய்ச்சி முடிவை வெளியிட்ட பிப்பிரவரி 28ஆம் நாளைத்தான் தேசிய அறிவியல் நாளாகக் கொண்டாடுகிறோம்.

ஆனால் பேரறிஞர் அண்ணா அவர்கள் அத்தகைய நாள் அறிவிக்கப்படுவதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்பே அறிவியல் மனப்பான்மையை மக்களிடம் வளர்க்க முற்பட்டவர். பல்கலைக் கழகங்களில் அண்ணா ஆற்றிய பேருரைகளிலிருந்து அவரின் அறிவியல் சிந்தனைகளை வெகு எளிதாக அறிந்து கொள்ளலாம். தம்முடைய ஒரு சொற்பொழிவின்போது அண்ணா அந்த நாள் தமிழ்நாட்டையும், இந்த நாள் தமிழ்நாட்டையும் ஒப்பிட்டுப் பார்க்கும் வகையில் பேசுகிறார்.

அவருடைய பேச்சில் கேள்வி மேல் கேள்வியாக இப்படிக் கேட்கிறார்.

> ''தமிழ்நாட்டில் குடியேறிய ஆரியர்கள் தமிழர்களைப் பார்த்து என்ன எண்ணியிருப்பார்கள்? பச்சைப் புல்தரைக்கும் பஞ்சமான நாட்டில் இருந்து வந்தவர்களின் மனத்திலே தமிழ் நாட்டிலே உள்ள மாந்தோப்புகளும், மண்டபங்களும், சாலைகளும், சோலைகளும், குன்றுகளும், கோபுரங்களும், குளங்களும், வயல்களும், எத்தகைய எண்ணங்களைத் தந்திருக்கும்?
>
> உறுதியாக அவர்கள் தமிழர்களைப் பார்த்துக் கேட்டு இருப்பார்கள்! மெல்லிய ஆடை அணிந்திருக்கிறீர்களே, அது ஏது என்று? தமிழர்கள் ''அது எங்கள் கைத்திறமை, இந்திரன் தந்த வரப்பிரசாதம் இல்லை'' என்று கூறியிருப்பார்கள். 'இமயம் வரை சென்று உங்களது இலச்சினையைப் பொறித்திருக்கிறீர்களே அது எப்படி?' என்று. கேட்டு இருப்பார்கள். அதற்குத் தமிழர்கள் 'அது கருடாழ்வார் கடாட்சத்தால் அல்ல! எங்கள் தோள் வலிமையினால்' என்று கூறியிருப்பார்கள். 'உங்களது இசை இன்பமாக இருக்கிறதே அது எப்படி?' என்று கேட்டிருப்பார்கள். அதற்குத் தமிழர்கள் 'நாரதர் மீட்டிடும்

தேவகானம் அல்ல! நாங்கள் கண்டு பிடித்த யாழின் தன்மையது' என்று கூறியிருப்பார்கள். ஆரியர்கள் முத்தைப் பார்த்து அது என்ன என்று கேட்டிருப்பார்கள். 'அது தேவலோகச் சரக்கல்ல! எங்கள் தீரர்கள் கடலில் மூழ்கிக் கண்டெடுத்த முத்து' என்று கூறி இருப்பார்கள்.

இப்படி உழைப்பாலும், அறிவியல் சிந்தனைகளாலும் நாடு அடைந்த வளர்ச்சியை எடுத்துரைக்கிறார் அண்ணா.

அறிவியல் குறித்து மாணவர்களிடம் அண்ணா கூறியிருப்பதைப் பாருங்கள்:

''விஞ்ஞானம்-அறிவியல்-இந்த நாட்டில் மதிப்பற்று இருப்பது போல வேறு எந்த நாட்டிலும் மதிப்பற்று இருக்காது. நான் இதோ பேசுகிறேன்; என்முன் ஒலிபெருக்கி இருக்கிறது. அது நான் பேசுவதைப் பெரிதாக்கி நாலாபுறமும் உள்ள பலரும் கேட்கும்படி செய்கிறது. அது எப்படி வேலை செய்கிறது என்று கூறிப் பாருங்கள். மேட்டூர் அணையை எப்படி கட்டியிருக்கிறார்கள் என்று கேட்டுப்பாருங்கள். கனமான கப்பல் எப்படி கடலில் மிதக்கிறது என்று கூறிப்பாருங்கள். ஆச்சரியமாகக் கேட்கமாட்டார்கள்! அவைகளில் அதிசயம் இருப்பதாக அவர்களுக்குத் தோன்றாது! அப்படி கொஞ்ச நேரம் கேட்டாலும் மறுகணம் அதை மறந்து விடுவார்கள்.''

என்று கூறி, விஞ்ஞானம் ஏன் அப்படி மதிப்பிழந்து கிடக்கிறது என்பதற்கான காரணத்தையும் விளக்குகிறார் அண்ணா.

''கடவுளிடம் உள்ள அபார நம்பிக்கையும் மதிப்பும் விஞ்ஞானத்திடம் இருக்காது. விஞ்ஞானத்திடம் அவர்களுக்கு மதிப்பும் இருப்பதில்லை. காரணம் எந்த விஞ்ஞான சாதனத்தையும் இவர்கள் சிரமப்பட்டுக் கண்டுபிடிக்கவில்லை. பென்சிலினைக் கண்டுபிடித்தவர் எங்கள் தாத்தா, மின்சாரத்தைக் கண்டுபிடித்தவர் எங்கள் மூதாதையர் என்று இருந்தால் அதன் அருமை தெரியும். எவ்வளவு சிந்தனை, எத்தனை இரவுகள் கண்விழிப்பு! கேலியையும், கண்டனங்களையும் பொருட்படுத்தாமல், ஆபத்துக்கு அஞ்சாமல் மூளை குழம்புமே, கண் குருடாகுமே, கால் முடமாகுமே என்று யோசிக்காமல் துன்பப்பட்டு விஞ்ஞான சாதனங்களைக் கண்டுபிடித்தவர்க ளெல்லாரும் மேல்நாட்டவர்கள். எனவேதான் அவர்கள் அறிவியலைப் போற்றுகிறார்கள். அவர்களுக்கு அதன்

அருமை தெரிகிறது; அதனிடம் அதிக மதிப்பு வைத்திருக்கிறார்கள்.''

> நம்மவர்கள் எந்தச் சாதனத்தைக் கண்டுபிடிக்கவும் துன்பப்படவில்லை. துன்பப்படாமல் இன்பம் எப்படி தெரியும்? ஆதலால்தான் இவர்களுடைய நாக்கில் ஆகாயவிமானம் கண்டுபிடித்தவர்களுடைய பெயர்கள் நர்த்தனமாடுவதில்லை. இரயில்வண்டி கண்டுபிடித்தவர் களுடைய பெயர்கள் நெஞ்சில் நடமாடுவதில்லை. விஞ்ஞானம் இந்த நாட்டில் விழலுக்கிறைத்த நீராகி விட்டது. பாலைவனத்தில் வீசிய பனிக்கட்டிபோல, குருடனிடம் காட்டிய முத்துமாலையைப் போல, செவிடன் கேட்ட சங்கீதம்போல விஞ்ஞானம் மதிப்பற்றிருக்கிறது. மதிப்புற்றிருக்கவேண்டிய பொருள் மதிப்பற்றிருப்பது நல்லது அல்ல! விஞ்ஞானம் மதிப்புப்பெற மாணவர்கள் உழைக்க வேண்டும்! மாணவர்கள் மக்களிடத்தில் சென்று அவர்கள் மனத்தில் உள்ள அச்சத்தை, அறியாமையை நீக்க வேண்டும். மனத்தில் உள்ள மாசை நீக்கிப் பகுத்தறிவைப் பரப்பி விட்டுப் பிறகு விஞ்ஞானத்தைப் பற்றிப் பிரச்சாரம் செய்ய வேண்டும் அப்போதுதான் மக்கள் மனம் தெளிவடையும். அறிவைப் போற்றுவார்கள்! அஞ்ஞானத்தைக் கைவிடுவார்கள். உண்மையை நம்புவார்கள். பொய்யை நம்பமாட்டார்கள்!

என்று மாணவர்கள் மத்தியில் அறிவியல் மனப்பான்மையின் தேவையை எடுத்தியம்புகிறார் அண்ணா.

அரும்பெரும் விஞ்ஞானிகளின் அரிய கண்டுபிடிப்புகளால் உலகம் வேகமாக மாறி வருகிறது. அவர்கள் சந்தித்த சோதனைகளும், அடைந்த சாதனைகளும் வார்த்தைகளில் சொல்லி மாளா. அவர்களால்தான், நூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த மகாராசாக்கள், மகாராணிகள் கூட வாழ்ந்த சொகுசு வாழ்க்கையை இன்றைய தலைமுறை அனுபவித்து வருகிறது. அறிவியல் சிந்தனைகளை வளர்த்து, புதிய கண்டுபிடிப்புகளை வரவேற்று, வளர்ச்சிகளைப் பாராட்டி, விஞ்ஞானிகளை ஆதரிப்பதே அண்ணாவின் அறிவியல் சிந்தனைக்கு நாம் செலுத்தும் உண்மையான நன்றிக் கடனாகும்.

### 3.3. வேளாண்மைச் சிந்தனைகள்

இந்தியப் பொருளாதாரத்தின் முதுகெலும்பாக இருப்பது வேளாண்மை. 'உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்' என்று பிற தொழில்களினின்று வேறுபடுத்தி உழவுத் தொழிலுக்கு முதன்மை

தந்து பாடினான் மகாகவி சுப்பிரமணிய பாரதி. வேளாண்மையில் ஈடுபட்டிருக்கும் உழவர்கள் உயிரினும் மேலானவர்கள். உலகின் வேறு எந்த நாட்டு இலக்கியங்களிலும் இல்லாத அளவுக்கு இந்தியாவின் இலக்கியங்களில் வேளாண் பெருமக்களைப் பற்றிச் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது. ‘உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம் தொழுதுண்டு பின் செல்பவர்’ என்று வள்ளுவப் பேராசான் உழவர்களின் சிறப்பை வெளிப்படுத்தி உள்ளார். ‘ஜெய் ஜவான், ஜெய் கிஷான்’ என்று இராணுவ வீரர்களுக்கு இணையாக உழவர்களை மதித்துப் போற்றினார் இந்தியாவின் முன்னாள் தலைமை அமைச்சர் லால்பகதூர் சாஸ்திரி.

நாட்டின் பொருளாதாரத்தில் முதுகெலும்பாக இருக்கும் உழவர்கள் இன்று பல மாநிலங்களில் தற்கொலை செய்து கொள்ளும் கொடுந் துன்பம் அரங்கேறி வருகிறது. வேளாண்மையும் கடனும், நகமும் சதையும் போலப் பிரிக்க முடியாதவையாக உள்ளன.

அன்றைய பாரதம் நாட்டுப்புற ஊர்களில் வாழ்ந்தது. நெல், கோதுமை, சோளம், கம்பு, வரகு, தினை எல்லாம் நிறையவே விளைந்தன. உண்டி கொடுத்து மக்களை வாழவைத்த உழவர்களை மன்னன் வாழவைத்தான். ஆனால், இன்றைய இந்தியா, நகரங்களில் மட்டுமே வாழ்கிறது.

அன்றைய அரசுக்கு வருமானமே நிலவரிதான். இன்றைய அரசின் வருமானம் நிலவரியில் இல்லை. மாறாக, வருமான வரி, தொழில் வரி, சுங்கவரி, விற்பனை வரி என்று வேளாண்மை அல்லாத வேறு தொழில்களிலிருந்து பெறப்படுகிறது. வேளாண்மை என்பது அன்று இன்ப வாழ்வு; இன்று துன்ப வாழ்வு.

அண்ணாவின் ஆட்சிக் காலத்தில் புயல், மழை, பஞ்சம் எல்லாம் தாக்கிய போதிலும் வேளாண்மை வளமையாகத்தான் இருந்தது. அதற்கு அண்ணாவின் அரிய பணிகள்தாம் காரணம். வங்கிகளின் மூலம் கடன் வழங்கியதால் வேளாண்மை தழைத்தது. உணவுப் பொருள் கடத்தலைத் தடுத்ததன் மூலம் கள்ளச் சந்தைகள் அழிக்கப்பட்டன. இதனால் விலைவாசி உயர்வு கட்டுக்குள் வந்தது. குடும்ப அட்டைகளுக்குக் குறைவான விலையில் தரமான அரிசியும் கிடைத்தது.

பேரறிஞர் அண்ணா, உழவுத் தொழிலைப் பற்றிச் சீரிய கருத்துடையவராக விளங்கினார். வேளாண்மை பற்றிப் பல இடங்களில் தமது எண்ணத்தை எடுத்துக் கூறியுள்ளார். அண்ணா, உழவுத் தொழிலுடன் சமுதாயத்தை ஒப்பிட்டுப் பின்வருமாறு கருத்துரை வழங்கியுள்ளார்.

> பயிருடன் களை கண்ட காலை, நிலத்தையும் உழைப்பையுமா நொந்து கொள்ளுகின்றனர்? இல்லையே! மேலும் உழைத்துத் தம் உழைப்பினை உருக்குலைக்க முளைத்திட்ட களையினை அகற்றுவோம் என்று பாடு படுகின்றனர். உழவன் செந்நெல்மணியினை அடித்தெடுத்துக் களஞ்சியதனில் சேர்த்திடும் வரையில் தான் மேற்கொண்ட பணியினின்றும் வழுவிடான்; உழவன் குறிக்கோள் அறுவடை; அந்த அறுவடை காணும் மட்டும் உழைத்தாக வேண்டும்.

சிறிய விதை வளர்ந்து பல்வேறு மாற்றங்களை அடைகிறது. ஒவ்வொரு நிலையிலும் பயனை நல்குகிறது. இறுதியாக மரம் உலர்ந்து விறகாகப் பயன்படுகிறது. அவ்வாறே மனிதனும் சமுதாயத்திற்கு இறுதி வரையில் ஏதாவதொரு வகையில் உதவிட வேண்டும் என்று அண்ணா தம்முடைய விருப்பத்தை வெளிப்படுத்தியுள்ளார்.

இயற்கை பிறரிடமிருந்து பலனை எதிர்பாராமல் கடமையினைச் செய்து வருகிறது. அதைப்போன்று ஒவ்வொருவரும் சமூகத்தின் மூலம் தமக்கென்ன கிடைக்குமென்று திட்டமிடாமல், சமுதாய மேம்பாடு ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு பாடுபட வேண்டும். தென்னை, மழை, காற்று, செந்நெல்மணியினைப் போன்று பிறருக்கு உதவும் வகையில் வாழ்வு அமைய வேண்டும் என்கிறார் அண்ணா.

### 1. உழவர் திருநாளின் சிறப்பு

வெறும் 'மதம்' தொடர்பான விழாக்கள் மக்களிடம் சிறப்புப் பெற்று வந்தன. அந்நிலையில் மாற்றம் கொண்டு வர விரும்பிய அண்ணா, பொங்கல் போன்ற பொது விழாக்களுக்குச் சிறப்பு ஏற்படுத்தக் கருதினார். வணிகத் தொழில் முறையில் இயங்கி வந்த இதழ்கள் 'தீபாவளி மலர்' வெளியிட்டன. அண்ணா, தாம் நடத்திய இதழ்களில் 'பொங்கல் மலர்' வெளியிட்டுப் புத்துணர்வு ஊட்டினார்.

பிற விழாக்களில் காணப் பெறும் களிப்பைவிட உழவன் 'உழவர் திருநாளன்று' பன்மடங்கு மகிழ்ச்சிக் கடலில் மூழ்கித் திளைக்கிறான். உழவுத் தொழிலுக்கு ஆதாரமான வேளாண்மைக்கருவி, எருது ஆகியவற்றை வழிபட்டு உழைப்பின் பெருமையை உலகிற்கு உணர்த்தித் தம் மகிழ்ச்சியை வெளிப்படுத்துகிறான்.

'பொங்கல் புதுநாள்' 'தமிழர் திருநாள்' 'அறுவடைப் பெருநாள்' 'பொன்னாள்' 'நன்னாள்' என்று பல்வேறு சிறப்புப் பெயர்களைக் கொண்டுள்ள இவ்விழா அனைவருக்கும் மகிழ்வைத் தரக்கூடியதாகும். உழவர் திருநாள் பற்றி அண்ணா கூறுகையில்:

> விழாக்கள் ஒருநாட்டு மக்களின் வளர்ச்சியும், வளமும், உளப்பாங்கும் எந்நிலையில் உள்ளன என்பதனை எடுத்துக்காட்டுவன. வீடும் நாடும் விழாக் கோலம் பூண்டு மக்கள் ஒன்றுகூடி மனம் மகிழ்ந்து, கலை நடமிட, களிப்பு ஒளிவிட, உலவிடும் திருநாள்! நிம்மதியான வாழ்வும், நிலையான அரசும் பெற்றிருந்தாலொழிய ஒருநாடு விழா நடத்திடும் இயல்பினைப் பெற்றிட முடியாது.

என்றார்.

விளைநிலத்தையும், வேளாண் பெருமக்களையும் எந்த அளவிற்கு உயர்வாகப் போற்றியிருக்கிறார் அண்ணா என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டு. செய்தி நாளேட்டில் வெளியான ஓர் ஒளிப்பட (போட்டோ)த்தைப் பற்றி இப்படி கூறுகிறார்.

> பிற்போக்குப் பத்திரிகைகளிலே ஒரு படம் வெளிவந்ததை உங்களில் பலர் பார்த்திருக்கலாம். இராஜாஜி அவர்கள் ஏர் உழும் பாவனையில் அமைந்துள்ளது அப்படம். கனம் இராஜாஜி, கவர்னர் ஜெனரல் இராஜாஜிகூட ஏர் உழுகிறாரே! இது மகிழ்ச்சிக்குரிய செய்திதான். இதை விளக்கிக் காட்டி மக்களுக்கு எடுத்துரைக்க வேண்டும் என்று நான் எண்ணினேன். மேலும் பரம்பரை பரம்பரையாக ஏர் உழுத மரபிலே வந்த ராஜாஜி ஏர் உழுகிறாரே என்று வியந்தேன்!
>
> அவர் ஏர் உழுவதாக எடுக்கப்பட்ட புகைப்படம் சந்தேகத்தைக் கிளப்பியது. அவர் உழுவதாக எடுத்துப் போடப்பட்டிருந்த புகைப்படத்தைப் பார்த்தால் அவருடைய காலில் செருப்பு அணிந்து கொண்டிருப்பதைப் பார்க்கலாம்! செருப்புப் போட்டுக் கொண்டு யாரும் ஏர் உழவே மாட்டார்கள். இன்றுகூட வயல்களிலே செருப்புப் போட்டுக்கொண்டு போகக்கூடாது என்று குடியானவர்கள் சொல்வதைப் பார்க்கலாம். அரசுக்கு ஒரு நல்ல புகைப்படம் எடுப்பவர்கள் கிடைக்க வில்லையா? அரசு இனியாவது இதுபோன்ற காட்சிகளைப் படமெடுக்கும் பொழுது கைதேர்ந்த போட்டோ வல்லுநர்களைக் கொண்டு படமெடுக்க வேண்டும்.

என்று அண்ணா குறிப்பிட்டிருக்கிறார்.

> குடியானவர்களிடம் காலிலே செருப்பணிந்து கொண்டு 'குடியானவர்களே! உற்பத்தியைப் பெருக்குங்கள்,

> உற்பத்தியைப் பெருக்குங்கள்' என்று சொன்னால் எந்தக் குடியானவனும் உற்பத்தியைப் பெருக்கமாட்டான். 'உற்பத்தியைப் பெருக்கு' என்று சொல்வதற்கு முன்னர் குடியானவனின் சூழ்நிலையை அரசு கவனிக்க வேண்டும். அவர்கள் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண வேண்டும்.

என்று மேலும் கூறுகிறார்.

எந்த அளவுக்கு அரசு திறமையயுன் செயல்பட வேண்டும் என்பது குறித்தும் கூறியுள்ளார்.

> உலகச் சந்தை இருக்கிறது அமெரிக்க முதலாளிக்கு! காமன்வெல்த் நாடுகள்தாம் பிரிட்டனுக்கு இருக்கும் சந்தை. நம் முதலாளிகள் சுரண்டுவதற்கு இருக்கவே இருக்கிறது இமயமும் குமரியும். இமயம் முதல் குமரிவரை அவர்கள் சுரண்டும் தொழிலைச் செய்யலாம். இன்றுள்ள அரசு, முதலாளிமார்களிடம் போட்டியிடப் பயப்படுகிறது. போட்டியிட அஞ்சுவதை மறைக்கவேறு பார்க்கிறது. மறைப்பதால் புண் புரை யோடி விடுமே தவிரப் புண் ஆறிவிடாது.

இது குறித்து அண்ணா மேலும் கூறுகையில்:

> தொலைபேசி நமக்கு நல்ல செயலுக்குப் பயன்படுகிறது. ஒரு விதத்திலே பார்த்தால் துப்பாக்கிக் கொடுமையை விட தொலைபேசி மிகமிகக் கொடியது. தொலைபேசி ஒரு முதலாளி ஒரு வார்த்தை கூறினால் போதும்! முதலாளிக்கு முதலாளி ஏராளமான இலாபம் கிடைக்கும்; ஆனால் ஆயிரக்கணக்கான மக்கள் இந்த ஒரு வார்த்தையால் சாகிறார்கள். கருப்புச்சந்தை உச்ச நிலையை அடைந்தது தொலைபேசிகள் மூலம்தான். இன்றுகூட வணிகர் நினைத்தால் டெலிபோன் மூலம் விலையை ஏற்றிவிடலாம். முன்பெல்லாம் ஜாவா சர்க்கரை 6 அணா விலைக்குக் கிடைத்தது. உத்தரப் பிரதேசத்தில் உற்பத்தியைப் பெருக்க வேண்டுமென்பதற்காக ஜாவா சர்க்கரையின் இறக்குமதி நிறுத்தப்பட்டது.
>
> முன்பு 6 அணாவுக்குக் கிடைத்த சர்க்கரையை ஒன்றரை ரூபாய் கொடுத்து உத்தரப் பிரதேசத்தில் உற்பத்தியாகும் சர்க்கரையை வாங்கு என்று அரசு நமக்கு உத்தரவிட்டது. ரூபாய் ஒன்றரை ஏன், ரூபாய் இரண்டரை கொடுத்தாலும் சர்க்கரைக்குத் திண்டாட்டமாய் இருக்கிறதே என்று கூறினால், கருப்பட்டி போட்டுக்கொள் என்றுதானே அரசு

> கூறுகிறது! தொழிலாளர்களின் நலிவைப் போக்குவதிலே அரசு நாட்டம் செலுத்த வேண்டும். மக்களிடையே காணப்படும் மூடப் பழக்க வழக்கங்களை முறியடித்து சாதிமதக் கோட்டையைத் தகர்த்துச் சுக்குநூறாக்க வேண்டும். இதை ஒவ்வொருவரும் வாக்குறுதியாக எடுத்துக் கொள்ள வேண்டும்.

என்று அண்ணா தமது மே தின உரையில் கூறியுள்ளார்.

இன்றைக்குத் தொழில்வளர்ச்சி என்கிற பெயரால் நாட்டின் பல்வேறு இடங்களில் வேளாண் நிலங்களை உழவர்களிடமிருந்து பறிக்கும் போக்கு அதிகரித்து வருகிறது. தொழில் பூங்காக்கள், நான்கு வழி மற்றும் ஆறுவழிச் சாலைகள் போன்றவற்றிற்காகவும் அரசு மற்றும் தனியார் நிறுவனங்கள் விளைநிலங்களைக் கையகப்படுத்தி வருகின்றன. ஏரிகளும் குளங்களும் குடியேற்றப் பகுதிகளாகவும், வீட்டு மனைகளாகவும் மாறிவிட்டன. வேளாண்மை நிலங்களை வீட்டு மனைகளாக மாற்றினால் நிலத்தின் மதிப்பு உயருகிறது என்னும் நோக்கில் விளைநிலங்கள் வழங்கப்படுகின்றன. வேளாண்மை செய்வதை விட வீட்டுமனை போட்டு விற்பது இலாபம் என்றாகி விட்டது. இதனால் வேளாண் மக்கள் மட்டுமன்றி வேளாண்துறை சார்ந்து வாழும் மக்களும் பெருத்த இன்னல்களுக்கு ஆளாகின்றனர்.

ஓர் அரசு ஊழியர் தம் பிள்ளையை அரசு ஊழியராக்க விரும்புகிறார். ஒரு தொழிலதிபர் தனது வழித்தோன்றலை தொழிலதிபராக்க விரும்புகிறார். ஆனால் ஓர் உழவன் தன் பிள்ளையை உழவனாக்க விரும்புவதே இல்லை. தான் பெற்ற துன்பம் தம் பிள்ளைக்கும் வரக்கூடாது என்று உழவர் நினைக்கிறார்.

வேளாண்மைத் துறையில் இன்றைக்கு இருக்கும் சிக்கல்களை அன்றைக்கே உணர்ந்து தொலைநோக்கோடு கூறியிருக்கிறார் அண்ணா.

## 2. கட்டபொம்மன் கேட்டதை அண்ணா நிறைவேற்றினார்

அரசு அறிவிக்கும் சலுகைகள் முதலில் ஏழைகளைச் சென்றடைய வேண்டும் என்பதில் உறுதியாக இருந்தவர் அண்ணா. புஞ்செய் நிலத்திற்கு வரியை நீக்கிவிட்டு நஞ்சை நிலத்திற்கு வரியை நீக்க வில்லையே என்று குறைப்பட்டுக் கொண்ட போது அண்ணா எவ்வளவு பக்குவமாக ஆறுதல் சொல்கிறார் பாருங்கள்:

> ''புஞ்செய் நிலத்திற்கு வரியை நீக்கிவிட்டு நஞ்செய் நிலத்திற்கு வரியை நீக்கவில்லையே என்று சொன்னார்கள். நஞ்செய் நிலத்திற்கும் வரியை நீக்குவதற்கும் தீவிரமான

ஆலோசனையில் இருக்கிறோம் என்பதை முதலிலேயே தெரிவித்துக் கொண்டேன். தெரிவித்துக் கொண்ட பிறகும் சொல்கிறேன்-எப்படி அரசு செய்கிற வசதிகள் முதலிலே ஏழைக்குச் செய்து கொடுத்துவிட்டுப் பிறகு கொஞ்சம் வசதியுள்ளவர்களுக்குப் போக வேண்டுமோ அதைப் போல்தான் நிலத்திலே கூடப் புஞ்செய் என்பது ஏழை. நஞ்செய் என்பது கொஞ்சம் வசதியுள்ளது. ஏழை நிலத்திற்கு முதலிலே வரியை நீக்கி விட்டோம். அது கட்டபொம்மன காலத்திலிருந்து கேட்கப்பட்டுவருகின்ற ஒன்று. 'வானம் பொழியுது', பூமிவிளையுது; கும்பினுக்கு ஏன் கப்பம், என்று கட்டபொம்மன் காலத்திலேயே கேட்கப்பட்டது. அதை இப்போது செய்து இருக்கிறோம்.

வேளாண்மை செய்பவர்களுக்கு உற்சாகம் அளித்தால்தான் வேளாண்மை வளரும். உழவர்களுக்கு எந்த அளவுக்கு ஊக்கம் அளிக்கவேண்டுமோ, அதை அளிக்க வேண்டும் என்பதையும் ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் கணக்கே வைக்கமுடியாது என்று சொல்லுவது பத்து ஆண்டுகளுக்கு முன்னாலே வேண்டுமானால் முடியாமல் இருக்கலாம். இப்போது கொஞ்சம் வளர்ந்து இருக்கிறோம். இப்போது இருக்கும் தொல்லைகூட அடுத்து ஏற்படாமல் இருக்கலாம். ஒன்றை நாம் உணர்ந்து கொள்ளவேண்டும். படித்தவர்கள் வேலைக்குப் போவார்கள். படிக்காதவர்கள்தான் வேளாண்மை செய்வார்கள் என்பதை மாற்ற வேண்டும். படித்தவர் பண்ணைக்குச் செல்லும் காலமிது.

பல முற்போக்கான உழவர்கள் ஒவ்வொரு கிராமத்திலும் நாலைந்து பேர்களாவது உண்டாகிக் கொண்டு வருகிறார்கள். 15 ஆண்டுகளுக்குப்பிறகு கிராமப்புறப் பண்ணைகளுக்குப் போனால் எம்.ஏ. படித்தவர்களும், பி.ஏ. படித்தவர்களும் டிராக்டர்களை ஓட்டிக் கொண்டிருப்பதைப் பார்ப்போம். அப்போதுதான் நம்முடைய நாட்டுக்கு நல்ல காலம் எனக் கருதலாம்.''

என்றார் அண்ணா.

### 3. வேளாண் வளர்ச்சிக்கு அறிவியல்

வேளாண்மையும், உழவரும் படும் துன்பத்தையும் வேதனையோடு குறிப்பிடுகிறார் அண்ணா.

உழவுத் தொழில், இந்தியத் துணைக்கண்டத்தில் குறிப்பாகத் தென்னாட்டில் உள்ளதைப் போல வேறு

எங்கும் மோசமாக இல்லவே இல்லை. இங்குதான் எலும்பும் தோலுமாக உள்ள உழவனும், அவனது இளைத்துப்போன எருதும், மூதாதையர் தந்த கலப்பையும், முதுகை நெரிக்கும் சுமையும் உள்ளன. இந்த நாட்டில்தான் இன்றளவும் வறண்ட நிலமும், வற்றிப்போன குட்டையும், வாழ்க்கையில் இன்பமென்பது எது என அறியாது வறுமையில் பிறந்து வளர்ந்து, வறுமையின் மடிமீது படுத்துச் சாகும் அடிமைகள் உள்ளனர். ஏர் உழுதல் முதற்கொண்டு அறுவடை வரையில் நம் நாட்டவர் மட்டுமே, பன்னெடுங் காலமாகப் பழமையான முறைகளையே கையாண்டு வருகின்றனர். ஒன்றரை ஏக்கர் நிலத்திலே ஒன்பது பாகம்! உழுது பயிரிடுவோரின் உழைப்போ, விலங்கு உழைப்பு! மிராசுதாரரோ, நிலத்தை உழவனிடமும் நெற்கதிரைத் தம்மிடமும் கொண்டு வாழ்பவர்.

கோழி கூவும்போது கூரை வீட்டில் குறட்டை விட்டுத் தூங்கிய குப்பன் எழுந்திருந்து, கோணல் கலப்பையைத் தூக்கிக் கொண்டு, கொடிய வழி நடந்து நிலம் சேர்ந்து நெற்றி வியர்வை நிலத்தின் மீது சிந்த மாலை இருள் வரும்வரை உழைக்கிறான். நரம்புகள் அத்தனைக்கும் வேலை. கைகால்கள் கசக்கப்படுகின்றன. மேனி கருத்து அவன் ஒரு தனி சாதியனோ என ஐயுறுமாறு மாறிவிடுகிறான். இவ்வளவு துன்பப்பட்டும், பட்ட பாட்டிற்குத் தக்க பலன் உண்டா? இல்லை. முன்பிருந்ததைவிட இன்னமும் உழவன் பழமையில் நெளிகிறானே தவிர, விஞ்ஞானத்தைத் துணைகொண்டு வாழ முற்படவில்லை.

உழைப்பு இந்நாட்டில் மட்டுமே மிகமிக அலட்சியமாகக் கருதப்பட்டு வருகிறது. உழைப்பு மட்டுமா? உயிரும் அப்படியே! ‘ஏதோ மனிதன் பிறந்தான்! மாயப் பிரபஞ்சத்தில் கொஞ்ச காலம் இருப்பான். பிறகு மறு உலகு சென்று மலரும் மணமும் போல இருப்பான்’! என்று கருதப்படும் நாடு. ஆகவேதான் இங்கு மனித உழைப்பு உழைப்பிற்கேற்ற பலன் பெறாத முறையில் வகுக்கப்பட்ட உழவு முறைக்குப் பலியாக்கப்பட்டு வருகிறது.

எத்துணை சேதம்! எவ்வளவு அமோகமான உழைப்பு வீணாகிறது! எத்தனை ஆயிரக்கணக்கானவர்கள் எலும்பு நொறுங்க வேலை செய்து வாழ்க்கையை நடத்துகின்றனர்!.

அவ்வாழ்க்கையிலும் வெறும் நடைப்பிணங்களாகவன்றோ உள்ளனர்!.

உழவு பயனற்றதா? அல்ல. உழவு நம் நாட்டவருக்குப் பசிபோகப் பண்டந் தரவல்லதன்றோ? ஏன் செல்வம் கொழித்து நம் நாட்டவர் சீருடன் வாழவும், இலங்கைத் தேயிலைத் தோட்டம் சென்று தேம்பி வாழும் தமிழர் யாவரும் தமிழ்நாட்டிலேயே மதிப்போடு வாழவும் முடியும். எப்போது? உழவு வெறும் உழைப்பாக மட்டுமன்றி உழவுத் தொழிலாக, அறிவியல் முறையைத் துணைகொண்டு நடத்தப்படின்!.''

என்கிறார் அண்ணா.

### 4. உழைப்பாளர் குறித்த அண்ணாவின் சிந்தனைகள்

- சேற்றிலே இறங்கிச் செந்தாமரையைப் பறித்து வந்து மாளிகையிலே தருகிற கூலியிடம், செந்தாமரையின் அழகா தெரியும்? சேற்றின் நாற்றம்தானே அடிக்கும்!
- பாட்டாளியின் உடலிலே சேறு இருக்கும். பாடுபடாதவன் உடலிலே சந்தனம் இருக்கும்.
- தொழிலாளி, கூலிக்காரன், அடிமை - மூன்றுவிதமான பெயரும் ஏழைதான் பெறமுடியும். மூன்று விதமானவர்களும் உழைத்தே பிழைக்க வேண்டியவர்கள்.
- ஏழை உலகத்துக் கெட்ட நடவடிக்கை மொந்தையிலேயே இருக்கிற கள்ளு போன்றது, பொங்கி வழியும். பணக்கார உலகத்துக் கெட்ட நடவடிக்கை தக்கை போட்ட பாட்டிலில் ஊற்றி அனுப்புகிற சரக்குப் போன்றது, மங்கி வாழ்கிறது.
- ஓய்வு என்பது ஓர் உரிமை. வேலை செய்தவன் தன் அலுப்பைப் போக்கிக் கொண்டு இழந்த உற்சாகத்தை மீண்டும் பெற்று மறுபடியும் வேலையிலே ஈடுபடுவதற்கான மாமருந்து.
- ஒரு மனிதன் வாழ்வதற்காக உழைக்கிறான். பிறருக்கு வாழ்வு அளிக்கவும் உழைக்கிறான். ஆனால் அந்த உழைப்பே அவனை உருக்குலையச் செய்து, வாழ்வை நுகர முடியாதபடி ஆக்கிவிடுமானால் அவன் உழைத்து என்ன பயன்?
- உழைப்பே செல்வம்! உழைப்பவர்கே உரிமை! உழைப்பாளிக்கே உலகம்!.

**5. நிறைவாக . . .**

வேளாண்மை நன்றாக நடைபெறவில்லையெனில் 'விவசாய நாடு' என்னும் பெருமையை நாம் இழக்க வேண்டிய நிலை ஏற்படும். உணவுத் தானியங்களைப் பிற நாடுகளிலிருந்து அதிக விலை கொடுத்து இறக்குமதி செய்ய வேண்டிய இழிநிலை உருவாகும். போதிய அளவுக்கு இறக்குமதி இல்லையெனில் உணவுப் பஞ்சம் ஏற்படும் அபாயமும் உருவாகும். மக்கள் தொகையில் 127 கொடியைத் தாண்டி விட்ட நாட்டில் உணவுப் பஞ்சம் ஏற்பட்டால் நாட்டில் அமைதியும் ஒழுங்கும் சீர்குலைந்து விடும்.

இந்திய வேளாண்மை மேம்பட, உழவர்களின் வாழ்வு மலர வேளாண்மையை நமது தேசியத் தொழிலாக மாற்ற வேண்டும். வேளாண்மை வணிகம் அல்ல; அது ஒரு வாழ்வியல் என்பதை உணர்ந்து செயல் ஆற்ற வேண்டும்.

## 3.4 இயற்கைச் சிந்தனைகள்

**1. இயற்கை - முன்னுரை**

இயற்கையும் மனிதனும் மண்ணுலகின் இரு கூறுகள். 'வந்தே மாதரம்' பாடலின் 'சுஜலாம்ஃ சுபலாம்" என்னும் வரிகள் நிலவளம், நீர்வளம், காற்று வளம் ஆகிய இயற்கை ஆற்றல்களைப் போற்றுகின்றன. மரங்கள், செடிகள், கொடிகள், மலர்கள், வண்டுகள், ஊர்வன, பறப்பன அனைத்துமே இயற்கையின் படைப்புகள்.

மனித குலத்தின் துணையின்றி இயற்கை மகிழ்ச்சியாக இருக்கும். ஆனால் இயற்கையின் துணையின்றி மனிதனால் ஒரு நொடி கூட உயிர் வாழமுடியாது. இயற்கையை அண்டிப் பிழைக்கும் ஓர் எளிய படைப்புதான் மனிதன்.

அறிவியல், இயற்கையின் மறைபொருள்களை (இரகசியங்களை), முடிச்சுகளை அவிழ்த்துக் காட்டலாம். ஆனாலும் இயற்கைக்கு நிகராக எதுவுமில்லை. விரல் நகம் ஆரஞ்சுப் பழத்தின் தோலை உரிக்கிறது, உள்ளே இருக்கும் சுளையை எடுத்துத் தருகிறது. என்றாலும் விரல் நகமே பழச்சுளையாகி விடாது. அதுபோல அறிவியல் இயற்கையை அறிந்து கொள்ளத் துணை நிற்குமே அன்றி அதுவே இயற்கையாகி விடாது.

இயற்கையின் விளைச்சல் (உற்பத்தி) நிலை வேறு. மனிதன் கண்டுபிடித்த அறிவியல் உற்பத்திகளின் நிலை வேறு. மனித உற்பத்தியை எடுத்துக் கொள்வோம். எடுத்துக்காட்டாக - பஞ்சு ஒரு மூலப்பொருள். அதை நூற்றால் நூலாகும், நூலை நெய்தால்

ஆடையாகும். ஆடையைக் கிழித்தால் கந்தலாகும். ஆனால் பஞ்சு மறுபடியும் கிடைக்காது. இதுதான் மனித பிறப்பின் நிலை.

இயற்கையின் உற்பத்தியைப் பாருங்கள். ஒரு மாம்பழத்தைத் தின்று, மாங்கொட்டையை வீசி எறிகிறோம். அது மண்ணில் புதைந்து முளைவிட்டு, செடியாகி, மரமாகி, பூவாகி, பிஞ்சாகி, காயாகி, கனியான பின்பும் அதன் உள்ளே மீண்டும் ஒரு மாங்கொட்டை இருக்கும். இயற்கைக்கு இணையாக எதையும் கூற இயலாது.

## 2. இயற்கைச் சுற்றுலா

ஒரு நாட்டின் சமூக, பொருளாதார வளர்ச்சியில் இயற்கைச் சுற்றுலாவின் பங்கு இன்றிமையாதது. ஒருவர் ஓய்வு நேரத்தை நலமுடன் கழிக்க வேறுபட்ட சூழ்நிலை நிலவும் ஓர் இடத்திற்குத் தன் வணிகம், தொழில் மற்றும் வேலை தொடர்பான கவலைகளை மறந்து இன்பமாக இருப்பதுதான் 'சுற்றுலா'. இந்த அடிப்படையில்தான் ஒவ்வோர் ஆண்டும் செப்டம்பர் 27ஆம் நாள் உலகச் சுற்றுலா தினம் கொண்டாடப்படுகிறது.

உலக அளவில் எண்ணெய் வளத்தொழிலுக்கு அடுத்தபடியாக அதிக வருவாய் ஈட்டித் தரும் முக்கியத் தொழிலாகக் கருதப்படுவது சுற்றுலா. சுற்றுலாத் தொழில் வளர்ந்து வரும் ஒரு தொழிலாகும். பல இடங்களை நேரில் பார்த்து அறிவை செழிக்கச் செய்து கொள்ள வேண்டும் என்னும் மக்களின் எண்ணங்களும் விழிப்புணர்வே சுற்றுலாத் துறை வளர்ச்சிக்கு அடிப்படையாக உள்ளது.

இந்தியாவில் சுற்றுலாத் துறைக்கெனத் தனிப்பிரிவு போக்குவரத்துத் துறையின் கீழ் 1949 முதல் இயங்கி வந்தது. 1958முதல் தனி இயக்குநரகம் அமைக்கப்பட்டு இயங்கி வந்தது. முதன்முதலாக 1982ஆம் ஆண்டு சுற்றுலா மேம்பாட்டுக் கொள்கையை அரசு அறிவித்தது. அடிப்படையில் பண்பாட்டுச் சுற்றுலா மேம்பாட்டிற்கு மத்திய அரசும், உள்நாட்டுச் சுற்றுலா மேம்பாட்டிற்கு அந்தந்த மாநில அரசுகளும் பொறுப்பேற்க வேண்டும் எனச் சுற்றுலாக் கொள்கையில் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்தியாவில் தமிழ்நாடு சுற்றுலாத்துறை மூன்றாவது இடத்தைப் பெற்றுள்ளது.

இயற்கை வளங்கள், வரலாற்றுப் புகழ்பெற்ற நினைவுச் சின்னங்கள், கலாச்சாரச் சிறப்புகள், திருவிழாக்கள், சிற்பங்கள், வியக்க வைக்கும் வானுயர்ந்த கோபுரங்கள், கலைநயம் பொருந்திய கைவினைப் பொருள்கள் முதலியவற்றை நேரில் சென்று பார்த்தால்தான் அவற்றின் சிறப்பை உணர முடியும்.

2002ஆம் ஆண்டை அனைத்து நாடுகள் தொழிலியல் சுற்றுலா மற்றும் மலைகளின் ஆண்டாகக் கொண்டாட ஐக்கிய நாடுகள்

நிறுவனத்தின் பொதுப்பேரவை அறிவித்திருந்தது. தொழியியல் சுற்றுலா என்றால் ஒரு புறம் சுற்றுலாவின் தேவைகளுக்கும் சுற்றுச் சூழலின் தேவைகளுக்கும் இடையே ஒரு சீரான சமநிலையைப் பேணிக்காப்பது ஆகும்.

உலகச் சுற்றுலா நிறுவனம் தொழியியல் சுற்றுலா என்பதை

> அமைதி அதிகம் குலையாத இயற்கைப் பகுதிகளுக்குப் பயணம் செய்து இயற்கையையும், காட்டு விலங்குகளையும் தாவரங்களையும் ஆராய்வது, வியப்பது, அனுபவிப்பது, அந்தப் பகுதிகளில் காணப்படும் பண்பாட்டு அம்சங்களை அறிவது போன்றவற்றை முக்கிய நோக்கமாகக் கொண்ட ஒரு பயணம்.

என வரையறை செய்கிறது.

உலகில் நூற்றுக்கும் மேற்பட்ட நாடுகளில் இயற்கைச் சூழலை விரும்பும் சுற்றுலா செல்வாக்கு (பிரபலம்) அடைந்து வருகிறது. சுற்றுலாப் பயணிகள் தாவரங்கள், விலங்குகள் உள்ளிட்ட இயற்கை வளத்துக்கும் மனித சமூகத்துக்கும் எவ்வித இடையுறும் ஏற்படுத்தாத வகையில் பாதுகாப்புக் கூறுகள் மற்றும் சுற்றுச்சூழல் பராமரிப்பில் மிகுந்த கவனம் செலுத்தப்படுகிறது.

## 3. இயற்கை பற்றிய அண்ணாவின் சிந்தனைகள்

இயற்கை பற்றிய அரிய சிந்தனைகளை இந்தியா நாடு 1947ஆம் ஆண்டு விடுதலை பெறுவதற்கு முன்பாகவே அறிஞர் அண்ணா எடுத்துக் கூறியுள்ளார். அதனைப் படிக்கும்போதே இயற்கையின் முதன்மை நிலை (முக்கியத்துவம்) குறித்து அதிகம் தெரியாதவர்கள் கூட அது குறித்துத் தெரிந்து கொள்ளும் ஆர்வத்தைத் தூண்டும்.

> ''இயற்கை எழில் மிகுந்த இடம் நமது நாடு. ஆனால் நம் மக்களுக்கு அந்த அருமையைக் காண நேரமும் கிடையாது, நினைப்பும் அப்பக்கம் செல்லாது. இடிபட்டுக் கொண்டு, இன்னலுக்கு ஆளாகி, எங்காவது ஒரு திருவிழாவுக்குப் போகிறார்களே அன்றி, அழகிய இயற்கைக் காட்சிகளைக் காணச் செல்லமாட்டார்கள். அவர்கட்கு அக்காட்சிகள் அர்த்தமற்றதாகவே இருக்கும். அவற்றைக் காண்பது வீண்வேலை என்றே எண்ணுவர்.
>
> பாடுபட்டுப் பிரிக்க வேண்டிய ஓயாத உழைப்புள்ள படிப்பறியாதாரை மட்டுமல்ல நான் குறிப்பிடுவது. கடியாரத்தைப் பார்த்து வேலை செய்துவிட்டு, நாள் காட்டியை (காலண்டரைப்) பார்த்துச் சம்பளம் வாங்கும்

படித்தவர்களையுந்தான் குறிப்பிடுகிறேன். அவர்களுக்குந்தான் இயற்கைக் காட்சிகளைக் கண்டுகளிக்க வேண்டும் என்கிற எண்ணம் ஏற்படுவதில்லை. மிகவும் தொல்லைப்பட்டு நாலுநாள் விடுமுறை (லீவு) பெற்றாலும் குழந்தைக்கு 'மொட்டை' அடிக்கத் திருப்பதிக்கோ, அமாவாசை திவசத்திற்குக் காவிரிக்கோ போய் வருவார்களேயொழிய, களிப்புக்காக இயற்கை தீட்டிக் காட்டும் இனிய ஓவியங்களைக் காணச் செல்பவர் இலர். இயற்கை தன் அழகை வாரி வீசுகிறது. ஆனால் கவனிப்பாரற்றுக் கிடக்கிறது.

நூல்களைப் புரட்டினாலோ இயற்கையின் விளக்க ஓவியங்கள் ஏராளம்! அதையும் படிக்க நேரம் கிடைக்காது. அவற்றில் பல படித்தாலும் புரியாது. இந்நிலையில் இயற்கை எழில் பயன்படுத்துவார் அற்றுக் கிடக்கிறது. படம் பிடிக்கும் தொழில் நடத்தி மலைமலையாய் இலாபம் குவிக்கும் திரைப்படக்காரர்களும் (சினிமாக்காரர்களும்) இதனைப் பயன்படுத்துவ தில்லை. அவர்களின் காடும் நாடும், மேடும் பள்ளமும் எல்லாம் ஒரே இடத்தில் முடிந்து விடுகின்றன.

கண்ணுக்கும் கருத்துக்கும் களிப்பூட்டும் இக்காட்சிகளைக் காண மக்களுக்கு நேரம் இல்லாமற் போவதன் காரணம்- மற்ற நாட்டவரைவிட இங்குள்ள மக்களுக்கு வேலை அதிகம், அலுப்பு அதிகம் என்பார். உண்மைதான். ஆனால் முழு உண்மை அல்ல. நேரமே இல்லை என்றால் வேலை மிகுதியாலும் கடினத்தாலும் ஆர்வம் இல்லை என்றால் நமது நாட்டிலே ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு திருவிழா நடைபெற முடியுமா? அவைகளில் பெருந்திரளான மக்கள் கலந்து கொள்ள முடியுமா! திருவிழாக்களுக்கு வரமுடிகிறது, கடமை என்று கருதுவதால். துன்பம் பல என்றாலும் போய்த்தான் வரவேண்டும் என்னும் எண்ணம் ஏற்படுகிறது. ஏன்? மதகாரியம், மகேசனின் அன்பைப் பெறும் காரியம், பாபத்தைத் தொலைக்கும் வழி, புண்ணியம் தேடும் மார்க்கம்!

எனவே மக்களுக்கு நேரம் கிடைக்கிறது, எவ்வளவு தொலைவானாலும் போக மனம் இருக்கிறது. அங்கே போய்வர எப்படியோ கடன்பட்டேனும் போகிறார்கள். போய் வருவதிலே எவ்வளவு இடைஞ்சல் இருப்பினும்

பொறுத்துக் கொள்ளவும் மனம் இடந்தருகிறது. ஆனால் ஒருதடவையேனும் ஓய்வுக்காலத்தை இயற்கைக் காட்சிகளைக் கண்டு களிக்க பயன்படுத்துகின்றனரா? இல்லை!

“பாழாப்போன மழை கொட்டு கொட்டுன்னு கொட்டியபடி இருந்தது, ஒரே சேறு! சோறு உண்டா? தண்ணி உண்டா? படுக்க இடமாவது உண்டா? சனியன்! பெரிய இழவாப் போச்சு! சொல்லி முடியாது தொல்லை! இரயிலிலே சண்டை, சத்திரத்திலே சண்டை, கோயிலிலே ஒரே கும்பல்! குழந்தையின் காப்பை எவனோ கழட்டிக்கிட்டான், நம்ம வீட்டுக்காரியின் காலை எவனோ நசுக்கி விட்டுட்டான்! எவ்வளவு துன்பப்பட்டுக்கிட்டே போனோம்? ரிஷப (காளை) வாகன உற்சவம் பார்க்க. அன்னிக்கி பாரு, பெருமழையானதாலே தங்க ரிஷபம் ரொம்பப் பெரிது, அதைத் தூக்கிக்கிட்டு வரமுடியாதுன்னு சின்னது வெள்ளி ரிஷபம், அதிலேதான் சாமி வந்தாரு. ஆக இவ்வளவு செலவு செய்து தொல்லைப்பட்டுப் போயி கடைசியிலே தங்க வாகன காளை (ரிஷப) வாகனத்தைப் பார்க்க முடியாமே போச்சி! நாம கொடுத்து வைக்கலை. என்னமோ பிழைச்சி இருந்தா அடுத்த ஆண்டாவது போய்ச் சேவிக்கோணும்.’’

இதுதான் திருவிழா போய்த் திரும்பியவரின் பேச்சு! இதுதான் சாதாரணமாக நூற்றுக்குத் தொண்ணூறு பேருக்குள்ள மனப்பான்மை. புண்ணியம் தேட தல யாத்திரை போவதிலேயே நாட்டம் கொண்டவர்களாக மக்கள் இருப்பதாலேதான் இயற்கைக் காட்சிகளைக் காண எங்கும் போக விரும்புவதில்லை, தேவையற்ற வேலை என்றாகிவிட்டது.

இதனால் மக்களுக்கு இயற்கை தரக்கூடிய இன்னமுது கிடைக்காமல் போவதுடன் அதனைப் பெற்றால் பெறக் கூடிய கலை உணர்வும், அந்த உணர்வை உள்ளடக்கிய கவிதைச் சுவையும் அவர்களுக்குப் பயன்படாமல் போகின்றன.

புண்ணிய தலங்களையே ஏராளமாக நம்நாட்டிலே நிருமாணித்து விட்டதால் ஓய்விடங்கள், இயற்கை, அங்குள்ள இடங்கள், குன்று, ஆறு, கானாறு, மலைச் சரிவு, காடு, மேடு ஆகியவற்றைக் காணக்கூடிய வாய்ப்பு இல்லாமலே போய்விடுகிறது.

'சிறுகுன்று! அதன்மீது அமர்ந்திருந்தேன்! மாலை நேரம்! கதிரவனின் ஒளி அடங்கும் நேரம்! ஒரு சத்தம் கேட்டது. என்னவென்று? குன்றின்கீழ்ச் சற்றுத் தொலைவிலே இருந்த காட்டுப்பாதையின் பக்கம் பார்த்தேன்! என்ன அருமையான காட்சி தெரியுமா? ஒரு தாய் யானை, அதன் குட்டிகள் இரண்டு பின்தொடர ஓடக் கண்டேன். அந்த யானை சென்ற பிறகு அங்குப் புதரில் அதுவரை பதுங்கி இருந்த நாய் பாய்ந்தோடிச் சென்றது.

மயில் ஆடக் கண்டேன்! மாடப்புறாவை மரக்கிளையில் கண்டேன்! கீரி பாம்பைத் துரத்தக் கண்டேன்! மலைப்பாம்பு! புரளக் கண்டேன். காட்டெருமை கதறக் கேட்டேன். உறுமல் கேட்டது; புலி என்றனர். வானவில்லைக் கண்டேன்! வளைந்தோடும் சிற்றாற்றங் கரையோரத்தில் நீளமூக்குக் கொக்கு இருக்கக் கண்டேன். மலைச்சாரலில் ஆட்டுமந்தை மேய்த்திடும் சிறுவன் குழல் ஊதக்கேட்டேன். இனிய இசையை உண்டேன். இருபுறமும் சோலை. இடையே ஓர் ஆறு. மேலே நீல நிற வானம். அதிலே மின்னின பொறிகள். மீன்கள் துள்ளின நீரில்.'

இப்படிப்பட்ட பேச்சை நாம் கேட்க முடியுமா? நம் மக்களிடம். சிறுகதைகளிலே படிப்பர். அவ்வளவே தவிர மக்கள் பேசிக் கேட்க முடியாது. ஏனெனில் இக்காட்சிகளை அவர்கள் கண்டதுமில்லை; காணவேண்டும் என்று எண்ணுவதுமில்லை. கண்டவர் கூறிடின் அவை அருமை எனக் கொள்வதுமில்லை. மெலிதான ஒரு கேலிச் சிரிப்புடன் இப்படி வீண் வேலை செய்பவனுமிருக்கிறானே என்று கூறுவர்.

இலக்கியம் எப்படி வளரும்? கலைமணம் எங்கிருந்து கமழும்? ஓவியக்கலை எவ்வண்ணம் ஓங்க முடியும்? நல்லிசை எங்கிருந்து பிறக்கும்? மனத்துக்கு இயற்கை ஊட்டும் களிப்பு கிடைக்கவில்லை பெரும்பான்மையோருக்கு!

அன்னவாகன சேவை, ஆண்டிக்கோலத்தில் அப்பன், கண்ட உடன் உடல் சிரிக்க வைக்கும் தேவி, காவி உடையுடன் காட்சி தரும் யோகி- இப்படிப்பட்டவைகள் பற்றிப் பேசுவரேயன்றி, இயற்கையைப் பற்றிப் பேச எங்ஙனம் முடியும் அவர்களால்!

முடியாதது மட்டுமா! முடியாதுபோன காரணத்தால் இயற்கை எழில் விளங்கும் காட்சிகள் அவ்வளவும் கவனிப்பாரற்றுக் கிடக்கின்றன.

எங்கோ ஒரு சிற்றூரிலே குறி கூறுவான் ஒரு தந்திரக்காரன். அங்கே கும்பல் கூடும். அதற்கு அருகே அரியதோர் இயற்கைக் காட்சி இருக்கும்; கண்டோர் மனத்தைக் களிப்புறச் செய்யக்கூடிய விதமாக! காண யாரும் வாரார்!

இயற்கை எழில் நிரம்பிய இடங்கள் எவ்வளவோ இப்படி உள்ளன கவனிப்பாரற்று. மேனாட்டவர் கண்டால் இங்கு எவ்வளவோ ஓய்விடங்களை உண்டாக்கிப் பொழுது போக்குக்கும், உல்லாசத்துக்கும், இயற்கை அழகைப் பருகுவதற்கும் பயன்படுத்திக் கொள்வர். இங்கோ அவை அவ்வளவும் அழகு இருந்தும், ஆர்வம் தரும் சக்தி இருந்தும், கலை உள்ளத்தைத் தரும் திறம் இருந்தும் கவனிப்பாரற்றுக் கிடக்கின்றன.''

இவ்வாறு அண்ணா கொட்டிக் கிடக்கும் இயற்கை அழகையும், அதை துய்த்து (அனுபவித்து) மகிழத் தெரியாத மக்களையும் சுட்டிக் காட்டி ஆதங்கம் கொள்கிறார்.

4. நிறைவாக . . .

அண்மைக் காலத்தில் அண்ணாவின் சிந்தனைகள் செயல்வடிவம் பெற்றுள்ளன. ஆம், பெருநகரங்கள், அங்குள்ள தொன்மையானச் சின்னங்கள், கேளிக்கை அமைப்புகளைக் கண்டு இரசிப்பதற்காக வரும் சுற்றுலாப் பயணிகளின் எண்ணிக்கை அதிகரித்து வருகிறது. ஆன்மீகச் சுற்றுலா, கோடை மலைத்தலங்கள், கடற்கரைப் பகுதிகள் போன்றவை இந்தியச் சுற்றுலாவில் முக்கிய இடம் வகிக்கின்றன.

சுற்றுலா என்னும் பெயரில் மனிதக் கூட்டம் அதிகமானதால்தான் ஊட்டி, கோடைக்கானல், குற்றாலம், முதுமலை போன்ற இயற்கை வாழிடங்கள் அழகை இழந்து வருகின்றன. பிளாஸ்டிக் கழிவுகள், மனிதக் கழிவுகள், வாகன மாசுகள், குப்பைக் கூளங்கள் மற்றும் இரைச்சலினால் மலைகளும், நதிகளும் அவற்றின் புனிதத் தன்மையை இழந்து வருகின்றன.

இயற்கையை கண்டு சுவைக்கும் இடங்கள் இன்றைக்குக் கேளிக்கை, கொண்டாட்டம், பொழுது போக்கு கூறுகளுக்காகக் கூடும் இடங்களாக மாறிவிட்டன. ஏழைகளின் ஊட்டி எனப்படும் ஏலகிரி இயற்கைச் சூழலை இழந்து வருகிறது. கோல்ஃப் விளையாட்டு உள்ளிட்ட கேளிக்கைகள் இடம்பெற்று வருகின்றன. வேடந்தாங்கலுக்கு வரும் பறவைகளின் எண்ணிக்கை ஆண்டுதோறும் குறையத் தொடங்கி உள்ளது. சுற்றுலா வருவாயை விடச் சூழலை மாசுபடுத்தும் கழிவுகளை அகற்றும் நிருவாகச் செலவினங்கள் அதிகரித்துள்ளன.

சுற்றுலா மேம்பாட்டில் அக்கறை செலுத்துவதாகக் கூறிப் பெரும் நிறுவனங்களும், தொழிலதிபர்களும் பழங்கால மக்களின் வறுமையை விலைபேசி அவர்களின் வாழ்வு இடங்களைப் பறித்து வருகின்றனர். சுற்றுலாத் தலங்கள் இயற்கை எழிலையும் அவற்றின் சிறப்பையும் விரைவில் இழக்கும் அழிவு நிலையில் உள்ளன என்பதை வளர்ச்சித் திட்டங்களில் கவனம் செலுத்துவோர் உணர வேண்டும்.

எனவே, இயற்கையையும், உயிரினங்களையும் சீரழிக்காத மேம்பாட்டுப் பணிகளை மட்டுமே எழில் சுற்றுலாத் திட்டங்களில் மேற்கொள்ள வேண்டும். இயற்கைச் சூழல் சுற்றுலா மூலம் கிடைக்கும் வருமானத்தை இயற்கை வளத்தைக் காக்கப் பயன்படுத்த வேண்டும். சுற்றுலாவை மையமாகக் கொண்ட கடற்கரைகள், ஆன்மீகத் தலங்கள், கலை, பண்பாட்டுச் சின்னங்கள் உள்ள இடங்களின் சுற்றுச்சூழல் பாதிப்பு ஏற்படக் கூடாது என்னும் அக்கறையையும் அறவுணர்வு பொறுப்பையும் சுற்றுலாப் பயணிகளுக்கு எடுத்துரைக்க வேண்டும்.

மனிதர்கள் வாழ்வதற்காகப் பிறந்தவர்கள். அந்த வாழ்க்கையில் மகிழ்ச்சியே இல்லை என்றால் அது மனித வாழ்க்கையே இல்லை! துன்பங்களையும், துயரங்களையும் மறப்பதற்கும், சோர்வகற்றிச் சுறுசுறுப்பையும், புதிய உற்சாகத்தைப் பெறுவதற்கும் இயற்கைச் சுற்றுலா என்றும் இன்பமும் நலமும் அளிப்பது.

இயற்கைதான் மனிதனை வாழவைப்பது. மலர்களைச் சிதைக்காது தேனெடுக்கும் வண்டு போல் இயற்கையைச் சிதைக்காது அதன் வளத்தைப் பெற வேண்டும். இயற்கையோடு நாம் 'நெருங்கி' வாழவேண்டும். ஆனால் இயற்கையை 'நெருக்கி' வாழக்கூடாது. இயற்கை அதாவது சுற்றுச்சூழல் சரியாக உள்ளவரை மட்டுமே மனித குலம் மகிழ்ச்சியாக வாழ முடியும் என்னும் பேரறிஞர் அண்ணாவின் சிந்தனைகளை உள்ளத்தில் கொள்வோம்.

# 4. முக்கிய நிகழ்வுகள்

## 1. சிறப்புக்குரிய செய்திகள்

- தன் குரலால், எழுத்தால் தமிழகத்தை ஆண்ட மன்னன், தமிழ்நாட்டின் அண்ணன்!

- சி.என்.ஏ. என்னும் மூன்றெழுத்தால் அறிமுகமான திரு.அண்ணாதுரைதான், தமிழ்நாட்டு அரசியலில் உருவான முதல் 'தளபதி'. பெரியாரின் தொண்டராக வலம் வந்தபோது அப்படித்தான் அழைக்கப்பட்டார். அதன் பிறகு எல்லோருக்கும் அவர் 'அண்ணா' தான்!

- 'என் வாழ்க்கையில் நான் கண்டதும் கொண்டதும் ஒரே தலைவர் பெரியார்' என்று அறிவித்திருந்தார். அவரைவிட்டுப் பிரிந்து, தனிக்கட்சி கண்டபோதும் தலைமை நாற்காலியைப் பெரியாருக்காகக் காலியாகவே வைத்திருந்தார். அண்ணா காலமானது வரை தி.மு.க.வுக்குத் தலைவர் அறிவிக்கப்படவே இல்லை!

- இரண்டு மயில்கள், இரண்டு மான்கள், புறாக்கள், நாய் ஆகியவற்றைக் கடைசி வரை விரும்பி வளர்த்தார். அவர் இறந்த ஒரு வாரம் கழித்து அவரது படுக்கையைச் சுற்றி வந்து அந்த நாய் இறந்தது. பிற விலங்குகளைப் பராமரிக்கக் கொடுத்து விட்டார்கள்!

- அண்ணா-இராணி இணையருக்குக் குழந்தைகள் இல்லை. எனவே, தம் அக்காள் மகள் சௌந்தரியின் மகன்களான பரிமளம், இளங்கோவன், கௌதமன், இராசுசுந்திரன் ஆகிய நால்வரையும் தத்தெடுத்து வளர்த்தார் அண்ணா!

- தலைமுடி சீவ மாட்டார். கண்ணாடி பார்க்க மாட்டார். மோதிரம் அணிந்தது இல்லை. கைக்கடிகாரம் அணிய மாட்டார். 'என்னைக் நாள்காட்டி(காலண்டர்) பார்க்க வைத்து முழுநிலைக் கைதியாக்கிவிட்டதே இந்த முதலமைச்சர் பதவி.!' என்று சொல்லிக்கொண்டார்!

- காஞ்சிபுரம்-தேனம்பாக்கத்தில் ஓர் ஏக்கர் நிலம், காஞ்சிபுரத்தில் ஒரு வீடு, சென்னை நுங்கம்பாக்கத்தில் ஒரு வீடு மூன்றும் தாம் அண்ணா வைத்துவிட்டுப் போன சொத்துக்கள்!

- முதலமைச்சராக இருந்து அவர் இறந்த மாதத்தில் சென்னை நுங்கம்பாக்கம் இந்தியன் வங்கியில் 5,000 ரூபாய், மயிலாப்பூர் இந்தியன் வங்கியில் 5,000 ரூபாய் மட்டுமே அவருக்கு இருந்தன.
- புற்றுநோய்ப் பாதிப்பில் இருந்தபோது, சென்னை மருத்துவ மனையில் இருந்து வேலூர் கிறித்தவ இயக்க மருத்துவ மனைக்கு (சி.எம்.சி.) அவரைக் கொண்டு செல்லும்போது தடுத்தார். 'நாமே அரசு மருத்துவமனையை மதிக்காத போல ஆகிவிடும்' என்றார்!
- அண்ணா பல மணி நேரங்கள் பேசிய கூட்டத்துக்கு எத்தனையோ எடுத்துக்காட்டுகள் உண்டு. ஒரு கூட்டத்தில் ஐந்து நொடிகள்தாம் பேசினார். "காலமோ சித்திரை ... நேரமோ பத்தரை... உங்களுக்கோ நித்திரை... போடுங்கள் உதய சூரியனுக்கு முத்திரை" என்பதே அந்தப் பேச்சு!
- நாம் வாழும் இந்த மாநிலத்துக்குத் 'தமிழ்நாடு' என்னும் பெயர் வைத்தது, சுயமரியாதைத் திருமணங்களுக்கு சட்டவடிவம் வழங்கியது, தமிழ் மற்றும் ஆங்கிலம் என்னும் இரு மொழித் திட்டத்தைச் சட்டமாக்கியது ஆகிய இவை மூன்றும் அண்ணாவின் சாதனைகள்!
- தி.மு.க ஆட்சியைப் பிடித்தால் தாம் தாம் முதலமைச்சர் என்னும் எண்ணம்கூட இல்லாமல், தென் சென்னை நாடாளுமன்றத் தொகுதி 1967இல் போட்டியிட்டவர் அண்ணா!
- 'எதையும் தாங்கும் இதயம் வேண்டும்' 'கத்தியைத் தீட்டாதே புத்தியைத் தீட்டு', 'ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காண்போம்', 'கடமை-கண்ணியம்-கட்டுப்பாடு', 'எங்கிருந்தாலும் வாழ்க', 'மறப்போம் மன்னிப்போம்', 'வாழ்க வசவாளர்கள்', 'மாற்றான் தோட்டத்து மல்லிகைக்கும் மணம் உண்டு', 'சட்டம் ஒரு இருட்டறை', 'மக்கள் தொண்டே மகேசன் தொண்டு' போன்ற புகழ்பூத்த மணிமொழிகள் அனைத்தும் அவருக்கு உரிமையானவை!
- தமக்கு இளவல்களாக இருந்தவர்களை நாவலர், கலைஞர், பேராசிரியர், சொல்லின் செல்வர், சிந்தனைச் சிற்பி, தத்துவ மேதை என்று பட்டம் சொல்லி அழைத்து வளர்த்து விடுவார்.
- மூர்மார்கெட் யுனிவர்ஸல் புக்ஷாப், சென்னை ஹிக்கின்பாதம்ஸ் ஆகிய இரண்டு கடைகளுக்கும் வரும் அத்தனை ஆங்கிலப் புத்தகங்களையும் வாங்கிவிடுவார். ஹிக்கின்பாதம்ஸ் எடுத்த கணக்கெடுப்பின்படி மைசூர் மன்னர் ஜெய சாம்ராஜ் உடையாரும், அண்ணாவும்தான் அதிகமான புத்தகங்கள் வாங்கியவர்களாம் அந்தக் காலத்தில்.

- அறைக்குள் தனியாகப் படுக்க அஞ்சுவார் பயப்படுவார், யாராவது துணைக்கு இருக்க வேண்டும். தூங்கும்போதும் விளக்கு எரிய வேண்டும்.
- முதலமைச்சர் பதவிக்குத் தேர்வு ஆனதும் அதுவரை தம்மை எதிர்த்து வந்த பெரியார், காமராசர், பக்தவத்சலம் ஆகியோரைச் சந்தித்து வாழ்த்தினைப் பெற்றார்.
- தாம் ஏற்றிருந்த தி.மு.க. பொதுச் செயலாளர் பதவியைச் சுற்று முறையில் பலருக்கும் போகவேண்டும் என்று நினைத்தார். 'தலைமையிடம் அதிகாரம் குவியக் கூடாது. எந்தத் தனி மனிதரின் செல்வாக்கிலும் இயக்கம் இருக்கக் கூடாது' என்றார்!
- 'ஓர் இரவு' திரைப்படத்தின் மொத்த உரையாடலையும் (அதாவது 360 பக்கங்கள்) ஓர் இரவிலேயே எழுதி முடித்தார்!
- எப்போதும் தாம் பேச இருக்கும் கூட்டத்துக்குக் காலம் கடந்துதான் வருவார். 'முன்னால் வந்தால் அடுத்தவரைப் பேசவிடாமல் செய்துவிடுகிறார்கள். அதனால், ஊருக்கு வெளியில் நின்று, அனைவரது பேச்சையும் கேட்டுவிட்டுக் கடைசியில் வருகிறேன்' என்பார்!
- அண்ணா மறைவின் போது திரண்ட கூட்டம் உலகச் சாதனைப் புத்தகத்தில் இடம்பெற்ற பல இலட்சம் மக்கள் கூட்டம். 1806 பிரிட்டன் துணைத் தளபதி நெல்சன், 1970 எகிப்து குடியரசுத் தலைவர் கமால் அப்துல் நாசர் ஆகியோருக்குக் கூடிய கூட்டத்தை விட மிகுதியாகக் கூடியது அண்ணாவுக்குத்தான் என்கிறது கின்னஸ் ஆவணம்!

2. முக்கிய நிகழ்வுகள்

1909 - தமிழ்நாட்டிலுள்ள காஞ்சிபுரத்தில் பிறந்தார்.

1930 - இராணியம்மையாரை மணமுடித்தார்.

1934 - சென்னையிலுள்ள பச்சையப்பர் கல்லூரியில் 'முதுகலைஞர்' (எம்.ஏ.,) பட்டம் பெற்றார்.

1935 - நீதிக்கட்சியில் சேர்ந்தார்.

1938- ஈரோடு சென்று தந்தை பெரியார் வெளியிட்ட 'விடுதலை' 'குடிஅரசு' ஏடுகளின் துணை ஆசிரியா பொறுப்பை ஏற்றார்

1938 - காஞ்சிபுரத்தில் நடைபெற்ற முதல் இந்தி எதிர்ப்பு மாநாட்டில் கலந்து கொண்டார்.

1944 - 'நீதிக்கட்சி', என்பதை 'திராவிடர் கழகம்' எனப் பெயர்மாற்றம் செய்யும் தீர்மானத்தைத் தாமே வரைந்து, சேலம் மாநாட்டில் நிறைவேற்றினார்.

1948- அண்ணாவின் முதல் படமான 'நல்லதம்பி' திரையிடப்பட்டது.

1949 -திராவிட முன்னேற்றக் கழகம் (தி.மு.க.) தோற்றுவிக்கப் பெற்றது. அதன் முதல் பொதுச் செயலாளர்பொறுப்பை அண்ணா ஏற்றார்.

1962 - நாடாளுமன்ற மாநிலங்கள் அவை உறுப்பினர் ஆனார்.

1967- சென்னை மாநில முதலமைச்சராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார்.

1968- அமெரிக்கா நாட்டின் யேல் பல்கலைக்கழகத்தில் 'பெல்லோஷிப்பட்டம்' பெற்றார்.

1969- சென்னை அரசு- தமிழ்நாடு அரசு எனப் பெயர்மாற்றம் செய்யும் தீர்மானத்தைச் சட்டப்பேரவையில் நிறைவேற்றினார்.

1969- பிப்பிரவரி 3ஆம் நாள் தம்முடைய 59வது வயதில் சென்னையில் காலமானார்.

இந்தியாவின் நாடாளுமன்ற மாநிலங்கள் அவையில் 1962 மே முதல் நாள் ஆற்றிய தமது முதல் கன்னிப் பேச்சின் ஆங்கில அருவி நடையினாலேயே தலைமை அமைச்சர் பண்டித, சவகர்லால் நேரு அவர்களின நெஞ்சத்தைக் கவர்ந்தவர் பேரறிஞர் அண்ணா!

தமிழ்நாட்டு மக்களின் உள்ளங்களை வென்று தன்னிகரற்ற தலைவராக வாழ்ந்தவர் பேரறிஞர் அண்ணா. ஆற்றல் மிக்க பேச்சாளர், வலிமை மிக்க எழுத்தாளர், வளமிக்க நாடகாசிரியர், எளிமையான கவிஞர், கண்ணியம் மிக்க அரசியல் தலைவர், நேர்மையான ஆட்சிவல்லுநர், மனிதநேயப் பண்பாளர், மக்கள் சிந்தனையாளர் எனப் பன்முகப் பரிமாணம் கொண்ட தலைவர் யாரும் பேரறிஞர் அண்ணாவிற்கு முன்பும் இருந்ததில்லை, பின்பும் இருப்பதரிது.

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சென்னை - 600 113.

# அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை |
|---|---|
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி. 901 - கி.பி.1300 | 100.00 |
| பண்டிதமணி மு.கதிரேசன் செட்டியார் | 40.00 |
| பெண்ணிய உளப்பகுப்பாய்வும் பெண் எழுத்தும் | 40.00 |
| தொல். பொருள். (அகம்-புறம்) -ஆங்கில மொழிபெயர்ப்பு | 50.00 |
| தமிழ் ஆய்வு இதழகள் | 50.00 |
| வேதாத்திரியத்தில் சமூகவியல் இறையியல் சிந்தனைகள் | 130.00 |
| தமிழிலக்கிய வகைமையியல் தொகுதி - 3 | 150.00 |
| தமிழிலக்கிய வகைமையியல் தொகுதி - 2 | 115.00 |
| தமிழிலக்கிய வகைமையியல் தொகுதி - 1 | 130.00 |
| தமிழரின் மரபுச் செல்வங்கள் - அறிவியல்-தொழில்நுட்பம் II | 110.00 |
| தமிழரின் மரபுச் செல்வங்கள்-அறிவியல்-தொழில்நுட்பம் I | 90.00 |
| மௌனத்தின் அதிர்வுகளும் மொழியும்-பெண் | 40.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி. 1851-2000 | 180.00 |
| இதழாளர் பெரியார் | 160.00 |
| திராவிட இயக்க இதழ்கள் - தொகுதி | 60.00 |
| சைவ சித்தாந்தத்தில் ஆன்மக் கொள்கை | 65.00 |
| பெரியபுராணம்-திருமுறைகளின் கவசம் | 55.00 |
| காஞ்சிபுரம் கி.பி.6 -ஆம் நூற்றாண்டுக்கு முன் | 65.00 |
| திருவாவடுதுறைப் புராணயம் | 250.00 |
| மகாவித்துவான் ரா.ராகவையங்கார் | 30.00 |
| சித்தாந்தச் செல்வர் க.வெள்ளைவாரணனார் | 25.00 |
| திருக்குறளில் பொதுநிலை உத்திகள் | 30.00 |
| தமிழிலக்கத்தில் மனித நேயம் | 115.00 |
| தமிழ்க்கடல் இராய சொக்கலிங்கம் | 30.00 |
| தமிழ் இதழ்கள் - விடுதலைக்குப் பின் | 40.00 |
| பாவாணரின் ஞாலமுதன்மொழிக் கொள்கை | 45.00 |
| பெண்ணியப் படைப்பிலக்கியம் | 75.00 |
| தமிழக வானவியல் சிந்தனைகள் | 35.00 |
| பள்ளு இலக்கியம் மறுவாசிப்பு பிரதிக்கு வெளியே | 75.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதை | 80.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள்-நாட்டுப் புறவியல் கலை, கண்பாடு | 90.00 |
| தொல்காப்பியம்-எழுத்ததிகாரம் மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 150.00 |
| வாழிய செந்தமிழ் | 140.00 |
| பேராசியிார் அ.மு.பரமசிவானந்தம் | 40.00 |
| திறனாய்வு அணுகுமுறைகள் | 120.00 |
| **பேரறிஞர் அண்ணா சமூக பொருளாதார சிந்தனைகள்** | **75.00** |